ஐரோப்பிய யுத்த வெற்றி மலர்



புதுக்கோட்டை ஸமஸ்தான

தேசிய யுத்த முன்னணி நிலயத்தால்

பிரசுரிக்கப்பட்டது.



# ஜெர்மனியின் நிபந்தனையற்ற சரணாகதி

7-5-45.

# அட்டவணை.

பக்கங்கள்.


1. ஐரோப்பாவில் யுத்தம் முடிவுபெற்றது—
   (1) மாட்சிமைதங்கிய மன்னர்பிரான் அவர்கள் பூர்ணமான சிறந்த வெற்றிக்காக ஜெனால் ஈஸன்ஹவரைப் பாராட்டுகிறார். ... 1
   (2) சாம்ராஜ்யத்திற்கு வெற்றி சம்பந்தமாக விடுவிக்கப்பட்ட ஒலிபெருக்குச் செய்திகள்—
      I. மாட்சிமைதங்கிய ராஜ-சக்கரவர்த்தி அவர்கள் ... 2
      II. பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சில் ... ... 4
2. பிரிடன் ஸ்வதந்திரக் கோட்டையைக் காப்பாற்றிற்று ... ... 7
3. வெற்றிக்கான மர்மம் ... ... ... ... 8
4. அவர்களின் சிலாக்கியமான காலம் ... ... ... 11
5. விளக்குகள் பிரகாசிக்கின்றன ... ... ... 14
6. ஜெர்மனியின் ராணுவ கிரஹணம் ... ... ... 17
7. டங்கர்க்குக்கும், ஜெர்மனிக்கும் போகும் மார்க்கம் ... ... 18
8. வெற்றியைச் சம்பாதித்தவர்கள்—
   (1) வின்ஸ்டன் சர்ச்சில்—வெற்றியின் சிற்பி ... ... 24
   (2) ரூஸ்வெல்ட் ... ... ... 27
   (3) ஸ்டாலின் ... ... ... ... 28
9. அநேக நாடுகளுக்கு அவர் திட்டம் போட்டார் ... ... 29
10. பீல்டு-மார்ஷல் மாண்ட்காமரி—
   I. ஒரு முதல் தரமான புராணம் ... ... ... 30
   II. இம்மனிதன் மாண்டி ... ... ... ... 32
11. டெட்டர்—விமானப்படை உதவிக்கு திட்டம் போட்டவர் ... ... 33
12. பாம்பர் படைத் தலைவர் ஹாரிஸ் ... ... ... 35
13. வெற்றிபெற்ற மூவர் ... ... ... ... 36
14. ஸ்திரீகள் நிலைமையை அபிவிருத்தி செய்தார்கள் ... ... 38
15. கடற்பலம்தான் மூலாதாரம் ... ... ... 41
16. பிரிடனின் மகத்தான கடற்படை அத்தியாயம் ... ... 44
17. வெற்றிகரமான ஆகாயப் போர் ... ... ... 46
18. விஞ்ஞான சாஸ்திரிகள் ஹிட்லரை முறியடித்தார்கள் ... ... 50
19. பிரிடனின் வெற்றி ஆயுதங்கள் ... ... ... 55
20. சாப்பாராவின் முக்கியத்வம் ... ... ... 57
21. வெற்றிக்குப் பொருளீட்டுவது ... ... ... 60
22. இந்திய இருப்புப்பாதைகள் யுத்தத்தில் ஈடுபடுகின்றன ... ... 62
23. உலகப் போர்முனைகளுடன் தொடர்பு ... ... ... 63
24. மேற்குப் போர்முனையின் வெற்றிக்கு இந்தியாவின் உதவி ... ... 66
25. இந்தியாவின் பொதுஜன தொழிற்சாலைகள் யுத்த தேவைகளைப் பூர்த்தி செய்தன. ... 69
26. வெற்றிக்கான ஆயுதங்கள் ... ... ... ... 73
27. இந்தியாவின் கவசம்பூண்ட படைகள் ... ... ... 76
28. யுத்தத்தின் காலானுக்கிரமணிகை ... ... ... 87



புதுக்கோட்டை ஸமஸ்தான

# தேசிய யுத்த முன்னணி நிலயம்.

## வெற்றி மலர்

1945-ம்௵ மேமீ 14உ திங்கட்கிழமை.

# ஐரோப்பாவில் யுத்தம் முடிவுபெற்றது

## ஜெர்மனியின் கவசம்பூண்ட எல்லாப்படைகளும் நேசதேசத்தாரிடம் நிபந்தனையற்ற சரணாகதி செய்தன.

மாட்சிமைதங்கிய
மன்னர்பிரான் அவர்கள் பூர்ணமான சிறந்த வெற்றிக்காக
ஜெனரல் ஈஸன்ஹவரைப் பாராட்டுகிறார்.

லண்டன், மே 8.

ஐரோப்பாவில் ஆறு வருடங்களாக நடைபெற்ற போர் முடிந்தது. எல்லா நேசதேசத்தாரிடமும் ஜெர்மனி சரணடைந்தது. இது சரித்திரத்திலேயே மகத்தான சரணாகதி. புதிய ப்யூரரான கடற்தளபதி கார்ல் டோனிட்ஸ் போர்புரியும் எல்லா ஜெர்மன் படைகளும் நிபந்தனையற்ற சரணாகதி செய்யவேண்டுமென்று நேற்றைய தினம் உத்தரவிட்டார்.

இந்த சரித்திரப் புகழ் பெற்ற சரணுகதி நேற்றையதினம் (பிரெஞ்சு மணி) 2.41-க்கு நேசதேச உயர்தர கமாண்டரான ஜெனரல் ஈஸன்ஹவரின் தலைமைக் காரியாலயமான பிரான்ஸில், ரீம்ஸிலுள்ள ஒரு சிறிய சிவப்பு வர்ணமுள்ள பள்ளிக்கூடத்தில் நடைபெற்றது.

ஜெர்மனியின் சேனைகளின் ராணுவத் தலைவரான கர்னல்-ஜெனரல் காஸ்டாவ் ஜோடில் ஜெர்மனிக்காகவும், ஜெனரல் ஈஸன்ஹவருக்கு அடுத்தபடி ராணுவத்தலைமை வகிக்கும் ஜெனரல் பிடல் ஸ்மித் நேசதேசப்படைகளின் உயர்தர கமாண்டருக்காகவும், ஜெனரல் ஐவான் ஸஸ்லொபெராவ் ருஷ்யாவின் சார்பாகவும், ஜெனரல் பிரான்காய் செவஸ் பிரான்ஸின் சார்பாகவும் அதில் கையெழுத்திட்டார்கள்.



## 1945-ம் வருஷம் மே மாதம் 8-ம் தேதியன்று சாம்ராஜ்யத்திற்கு வெற்றி சம்பந்தமாக விடுவிக்கப்பட்ட ஒலிபெருக்குச் செய்திகள்.

### I

### மாட்சிமைதங்கிய ராஜ-சக்கிரவர்த்தி

"இந்த மாபெரும் வெற்றியை அளித்த ஆண்டவனுக்கு இன்று நாம் நன்றி செலுத்துகிறோம். யுத்தத்தினால் பாழடைந்த போதிலும், உறுதியை இழக்காமலிருக்கும் லண்டனிலிருந்து, சாம்ராஜ்ஜியத்தின் புராதன தலைநகரிலிருந்து, பேசுகிறேன். வந்தனம் செலுத்துவதில் என்னுடன் சேர்ந்துகொள்ளுமாறு உங்களை அழைக்கிறேன்.

"ஐரோப்பாவை யுத்தத்தில் ஆழ்த்திய ஜெர்மனி இறுதியாக தோற்கடிக்கப்பட்டு விட்டது. தூரக்கிழக்கில் உறுதியுள்ளவும், குரூரமானவுமான எதிரியான ஜப்பானியரை நாம் இனிமேல் தீர்த்துக்கட்டவேண்டும். இந்தக் காரியத்தை முடிக்க நாம் அபாரமான உறுதியையும், நமது பூரா ஐச்வர்யங்களையும் ஈடுபடுத்தவேண்டும். யுத்தத்தின் பயங்கரமான தொல்லை நமது வீடுகளிலிருந்தும், ஹிருதயங்களிலிருந்தும் போய்விட்ட இத்தருணத்தில் வந்தனம் செலுத்த சிறிது அவகாசம் எடுத்துக்கொண்டு, பிறகு ஐரோப்பிய சமாதானத்தினால் உலக முழுவதும் செய்யவேண்டிய காரியங்களில் கவனம் செலுத்தவேண்டும்.

## தியாகிகளுக்குப் பாராட்டு.

"முதலில், யுத்தத்தில் இறந்தவர்களை ஞாபகப்படுத்திக் கொள்ளுவோம். யுத்தத்தில் அவர்கள் காட்டிய மனோ உறுதியையும், தீரத்தையும், தியாகங்களையும், இரக்கமற்ற எதிரியுடன் போரில் அவர்கள் காட்டிய சகிப்புத்தன்மையையும் சிந்தனை செய்வோம். எல்லா சேவைப்படைகளிலும் உயிர்துறந்த ஆடவர்களையும், ஸ்திரீகளையும் நாம் நினைத்துக்கொள்ளுவோம்.

"நாம் கஷ்டங்களைக் கடந்து விட்டோம். ஆனால் வெற்றியைக் கொண்டாட அவர்கள் நம்முடன் இல்லை.

"அடுத்தபடியாக நமக்கு வெற்றியைக் கொணரப் போராடி உயிருடனிருக்கும் வீரர்களுக்கு பெருமையுடனும், நன்றியறிவுடனும் வந்தனம் செலுத்துவோம். ஒவ்வொருவரின் சேவைக்குத் தகுந்தவாறு என்னால் ஸ்தோத்திரம் செய்யமுடியாது. ஏனெனில் பூர்ணமான யுத்தத்தில் ஒவ்வொருவருடைய முயற்சியும் ஒரே சிலாக்கியமான நிலையை அடைந்து விடுகிறது. எல்லோரும் பொதுப்படையான லக்ஷியத்தில் திடபக்தியுள்ளவர்களாக இருக்கிறார்கள். ஆயுதம் தாங்கியோ, ஆயுதம் இல்லாமலோ, ஆண்களும், பெண்களும் சண்டை போட்டார்கள். முடிந்தவரை உழைத்தீர்கள்.

"உங்களுடைய அரசனான என்னைவிட உங்களை அறிந்தவர்கள் இருக்க முடியாது. தரையிலும், கடலிலும், ஆகாயத்திலும் தைரியமாகப் போராடியவர்களுக்கும், அநேக பொறுப்புகளை ஏற்றுக்கொண்டு அவற்றை தளர்ச்சியன்னியிலும், புகார் அன்னியிலும் சுமந்த எல்லா பொதுமக்களுக்கும் நான் மனமார்ந்த வந்தனத்தைச் செலுத்துகிறேன்.

## பிரிடனின் திடத்துக்குக் காரணம்.

"இந்த விஷயங்களை ஞாபகத்தில் வைத்துக்கொண்டு, ஆறு வருஷகாலமாக கஷ்டங்களையும், ஆபத்துகளையும் சமாளித்ததற்கும் யாது காரணங்கள் என்று கவனிப்போம். நமது சுயேச்சை, நமது சுதந்திரம், நமது வாழ்வு ஆபத்திலிருந்ததென்பதை அறிந்தோம். நம்மைப் பாதுகாத்துக்கொள்ளுவதால் நாம் உலக நாடுகளின் சுதந்திரங்களைப் பாதுகாக்கிறோம் என்பதையும், நமது லக்ஷியம் இந்த நாட்டினுடையது மட்டுமல்ல, சாம்ராஜ்யத்தினுடையது மட்டுமல்ல, சுதந்திரத்தையும், சட்டத்தையும், விரும்பும் ஒவ்வொரு நாட்டினுடைய லக்ஷியம் என்பதையும் உணர்ந்திருந்தோம்.

"இருண்ட, ஆபத்தான சமயங்களில், ஐரோப்பாவில் அடிமையாகவும், தனிமையாகவும் வாழ்ந்த மக்கள் நம் உதவியை எதிர்பார்ப்பதை நாம் அறிந்தோம். அவர்களுடைய விருப்பங்கள் நமது விருப்பங்கள். அவர்களது நம்பிக்கை நமது நம்பிக்கையைப் பலப்படுத்தியது. நாம் தோற்றால், அல்லது தடுமாறினால் உலக முழுவதும் கொடுங்கோலாட்சிக்குக் கீழ்ப்படிய ஒரு தடையுமில்லாமல் போயிருக்கும்.

"ஆனால், நாம் தோற்கவில்லை, தடுமாறவில்லை. தன்னம்பிக்கையும், பரஸ்பர நம்பிக்கையும் கொண்டு நமது பெரிய நேசநாடுகளுடன் நம்பிக்கையும், ஒற்றுமையும் கொண்டிருந்தோம். அந்த நம்பிக்கையும், ஒற்றுமையும்தான் பிரம்மாண்ட ஆபத்துகளை நீக்கி வெற்றியைக் கொண்டுவந்தது.

## அடுத்த வேலை.

"இனி நாம் செய்யவேண்டிய காரியங்களிலும் இதேமாதிரி நம்பிக்கையுடன் வேலை செய்யத் தீர்மானிப்போம். யுத்தத்தினால் பாழடைந்துள்ள நம் நாட்டை புனருத்தாரணம் செய்யவும், சின்னபின்னமாக்கப்பட்ட உலகத்தில் சமாதானத்தையும், புத்தித் தெளிவையும் நிலைநாட்டவும் நாம் கடுமையாக வேலை செய்யவேண்டும்.

"நாஜி ஆட்சியை வீழ்த்த ஐந்துவருஷத்திற்கதிகமாக, நமது உடல், பொருள், ஆவி முதலியவைகளை அர்ப்பணம் செய்த பிறகு, நாம் நமது கடைசி எதிரியை அழிக்கத் திரும்பியிருக்கிறோம். சாம்ராஜ்யத்தில் உள்ளவர்கள் எவ்வளவு கஷ்டங்களை அனுபவித்தீர்கள் என்பதை நானும், ராணியாரும் அறிவோம். அவைகளில் சிலவற்றை பகிர்ந்து அனுபவித்தோம் என்பதைச் சொல்ல நாங்கள் பெருமை கொள்ளுகிறோம். எதிர்காலத்தை திடசங்கற்பத்துடன் எதிர்நோக்கி நமது சக்தி குறையாத ஊற்று என்பதை நிரூபிப்போம் என்று நாம் அறிவோம்.

"நமது குழந்தைகள் வாழ்ந்துவந்த இருண்ட, ஆபத்தான வருஷங்கள் கடவுள் அருளால் முடிந்துவிட்டன என்பதை நினைக்க மனநிம்மதி ஏற்படுகிறது. நமது வீரர்கள் உயிரை தியாகம் செய்து அடைந்த வெற்றி, நீதி, நல்லெண்ணம் இவைகளை அடிப்படையாகக்கொண்ட சாஸ்வதமான சமாதானத்திற்கு வழி காட்டாவிடில் நாம் தோற்றவர்களாவோம். நமது அருமை வீரர்கள் சிந்தின ரத்தம் வியர்த்தமாகிவிடும். நியாயமான வெற்றியைக் கொண்டாடும் வீரர்களின் மரணத்தைத் துக்கத்துடன் நினைத்து பெருமையடையும் நாம், நமக்காக உயிரைத் தியாகம் செய்தவர்களுக்கு ஒவ்வாதபடி ஒன்றும் செய்யமாட்டோம் என்ற திடசித்தத்துடன் நமது கவனத்தை நிரந்தர சமாதான ஏற்பாட்டின் பக்கம் திருப்புவோம். அவர்களின் உத்தேசப்படியே உலகத்தை அவர்களுடைய குழந்தைகளுக்கும், நமது குழந்தைகளுக்கும் பத்திரமாகச் செய்துவிடுவோம்.

"இந்த வேலையில் நாம் இப்பொழுது ஈடுபடவேண்டும். ஆபத்து சமயத்தில் நாம் நம்முடைய லக்ஷியத்தை கடவுளிடம் வணக்கத்துடன் சமர்ப்பித்தோம். அவர் தான் நமக்கு வலிமையையும், ரக்ஷணையையும் தந்தார். அவர் காட்டிய கருணைக்கு நாம் நன்றி செலுத்துவோம். வெற்றியைக் கொண்டாடும் இத்தருணத்தில் நம்மையும் நம்முடைய புதிய அலுவல்களையும் அதே கடவுளிடம் நாம் சமர்ப்பிப்போம்."

II

## பிரதம மந்திரி வின்ஸ்டன் சர்ச்சில்.

"நேற்று காலை 2-41 மணிக்கு ஜெனரல் ஐஸன்ஹவரின் தலைமைக்காரியாலயத்தில் ஜெர்மன் ராணுவத்தின் பிரதிநிதியான ஜெனரல் கஸ்டாவ் ஜோடிலும், ஜெர்மன் நிர்வாகத்தின் தலைவரான கடற்தளபதி கார்ல் டோனிட்ஸூம் நேசதேசப்படைகளிடமும், ருஷ்யாவிடமும், ஐரோப்பாவிலுள்ள ஜெர்மன் தரை, கடல், விமானப் படைகள் நிபந்தனையற்ற சரணாகதி செய்தனவென்று கையெழுத்திட்டார்கள்.

"ஜெனரல் ஈஸன்ஹவருக்கு அடுத்தபடி ராணுவத்தலைமை வகிக்கும் ஜெனரல் பிடல் ஸ்மித்தும், ஜெனரல் பிரான்காய் செவஸுும் நேசதேசப் படைகளின் உயர்தர கமாண்டரின் சார்பாகவும், ஜெனரல் ஸுஸ்லொபெராவ் ருஷ்யாவின் சார்பாகவும் அதில் கையெழுத்திட்டார்கள்.

## பெர்லினில் அங்கீகாரம்.

"இந்த ஒப்பந்தத்தில் நேசப்படை உப தலைவர் ஏர் மார்ஷல் டெடர், ஜெனரல் டி லா டர் டிட்டாஸிக்னி ஈஸன்ஹவரின் சார்பாகவும், மார்ஷல் ஜுகாவ் ருஷ்யாவின் சார்பாகவும், பீல்டு-மார்ஷல் வில்ஹெல்ம் கீடலும், ஜெர்மன் சேனை, கடற்படை, விமானப்படையின் சேனாதிபதிகளும் ஜெர்மனியின் சார்பாகவும், பெர்லினில் கையெழுத்திடுவார்கள்.

"மேமீ 8உ ஆகிய இன்று நடுராத்திரி ஆனவுடன் உத்தியோகமுறையில் போர் நின்றுவிடும். ஆகிலும் உயிர்களைக் காப்பாற்றும் முறையில் நேற்றையதினமே ஆயுதங்களைப் போட்டுவிடும்படியான உத்தரவு யுத்த அரங்கம் பூராவிலும் பரவச்செய்யப்பட்டது. இன்று நமது கால்வாயிலுள்ள தீவுகள் விடுவிக்கப்படும்.

"சில இடங்களில் ருஷ்யரை ஜெர்மானியர் எதிர்த்து நிற்கிறார்கள். நடு இரவுக்குப் பின் அவர்கள் இம்மாதிரி எதிர்த்தால் அவர்கள் யுத்தவிதிகளின் ரக்ஷணையை இழந்துவிடுவார்கள். அவர்களை நேசதேசத்துருப்புகள் எல்லாப்பக்கங்களிலிருந்தும் தாக்கும். போர்முனைகள் நீளமாக இருப்பதாலும், எதிரியிடம் குழப்பம் அதிகமாக இருப்பதாலும் ஜெர்மன் ராணுவ அதிகாரிகள் உத்தரவுகளை சில இடங்களில் கீழ்ப்படியாமல் இருக்கலாம். நமது சிறந்த ராணுவ ஆலோசகர்களின் அபிப்பிராயப்படி ஜெனரல் ஈஸன்ஹவர் நமக்கு அனுப்பியுள்ள ரீம்ஸில் கையெழுத்திடப்பட்ட ஜெர்மனியின் நிபந்தனையற்ற சரணாகதிச் செய்தியை நாம் வெளியிடாமல் இருப்பதற்கு இது ஒரு காரணமாகாது. மேலும் ஐரோப்பாவில் கிடைத்த வெற்றியை இன்றும் (செவ்வாய்க்கிழமை) நாளையும் (புதன்கிழமை) நாம் கொண்டாடுவதை அது தடுக்கமுடியாது.

"இன்று நாம் நம்மைப்பற்றியே நினைத்துக்கொண்டிருப்போம். நாளைய தினம் இந்த வெற்றிக்குப் பெரிதும் உதவிய ருஷ்யரின் தீரம் பாராட்டப்படும்.

## ஜெர்மன் யுத்த முடிவு.

"ஜெர்மன் யுத்தம் முடிந்துவிட்டது.

"**1939**-ம் வரு செப்டம்பர் மாத ஆரம்பத்தில், நான்கு வருஷங்களாக நன்றாகத் தயார் செய்துகொண்ட ஜெர்மனி போலந்தைத் தாக்கியது. நாம் போலந்துக்கு அளித்திருந்த வாக்குறுதியின் பிரகாரமும், பிரஞ்சு குடியரசுடன் செய்துகொண்ட ஒப்பந்தப்படிக்கும், அகில பிரிட்டனும், பிரிட்டிஷ் சாம்ராஜ்யமும், குடியேற்ற நாடுகளும் ஜெர்மனி பேரில் போர் தொடுத்தன.

"பிரான்ஸ் வீழ்ச்சிபெற்றபின் பிரிடனும், பிரிடிஷ் சாம்ராஜ்யமும் ஒரு வருஷம் வரையில் தன்னந்தனியே நின்று போரை நடத்தின. அதன்பின் நமது கட்சியில் ருஷ்யாவின் ராணுவ சக்தியும், அமெரிக்காவின் அபாரமான சக்தியும், ஐசுவரியங்களும் சேர்ந்துகொண்டன.

இறுதியில் உலகம் பூராவும் இப்பொழுது வீழ்த்தப்பட்டிருக்கும் கொடிய எதிரியைத் தாக்க ஒன்றுபட்டது. இந்நாட்டில் உள்ளவர்களும், சாம்ராஜ்யத்திலுள்ள வர்களும் நமது சிறந்த நேசதேசங்களுக்கு நன்றியறிவை செலுத்துகிறோம்.

## வஞ்சகபுத்தியுள்ள ஜப்பான் பாக்கி.

"நாம் இன்று சிறிது சந்தோஷப்படுவோம். ஆகிலும் நாம் செய்யவேண்டிய அலுவலையும், முயற்சிகளையும் ஒருகணமும்கூட மறந்துவிடக்கூடாது. வஞ்சகபுத்தியும், பேராசையும் பிடித்த ஜப்பான்தான் இனி பாக்கியிருக்கிறது. அமெரிக்காவுக்கும், பிரிடனுக்கும், மற்ற நேசநாடுகளுக்கும் அது இழைத்த கொடுமைகளுக்குப் பழி வாங்கவேண்டியது அவசியமாகும்.

"நமது நாட்டிலும், வெளி நாடுகளிலும் நாம் பூர்த்தி செய்யவேண்டிய வேலைகளில் நமது பூராபலத்தையும், ஐசுவர்யங்களையும் நாம் இனிமேல் ஈடுபடுத்த வேண்டும்.

பிரிடன் வாழ்க! சுதந்திரக்கட்சி நீடூழி வாழ்க!

இறைவன் மன்னரைக் காப்பாற்றுவராக!"



# பிரிடன் ஸ்வதந்திரக்கோட்டையைக் காப்பாற்றிற்று.

## *வெற்றியளித்த சவால்.*

*ஹார்வி. V. உசில்.*

உலக ஆதிக்கம் பெறவேண்டுமென்று ஹிட்லர் முதல் முதலில் கனவு கண்டது முதல் அவனுடைய திட்டம் நிறைவேறுவதற்கு பிரிடனை முறியடிப்பது அவசியமென்று அவன் சதாகாலமும் உணர்ந்தான். **மெயின் காம்பில்** பிரிடனுடைய போர் புரியும் சக்தியில் ஹிட்லருக்குள்ள மரியாதையையும், பீதியையும் காட்டக்கூடிய அநேக வாக்கியங்களிருக்கின்றன.

ஹிட்லர் பின்வருமாறு சொல்லியிருக்கிறான். "இங்கிலாந்துக்குத் தேவையான யுத்த தளவாடங்கள் அங்கு இருந்து வந்தன. வெற்றிக்கு அவசியமான இந்த ஆயுதங்களுடன் அது எப்பொழுதும் போர் புரிந்து வந்தது. வெற்றிபெற தியாகம் அவசியம் என்றால் நாட்டிலுள்ள பிறந்தவர்கள் ஏராளமாகவும் ஆர்வத்துடனும் ஈடுபடத் தயங்குவதில்லை. எக்காலத்திலும் போர் புரியும் ஆர்வமும், ராணுவ நடவடிக்கைகளை நடத்தும் உறுதியும் ஒரே மாதிரியாக இருந்திருக்கின்றன."

ஆனால் ஜனநாயகத்தின் திறமையை அவன் உணரக்கூடாததினால் அவன் முதல் முதலாக ஒரு பெரிய தவறுதலைச் செய்தான். சமாதானத்தையே ஆதரிக்கும் ஒரு தேசம் சீர்கெட்டுப்போய் விடுமென்று அவன் எண்ணினான். பிரிடிஷ் ஆடவர்களும், ஸ்திரீகளும் சமாதான சுகங்களை விட்டு யுத்தக் கஷ்டங்களை ஏற்கமாட்டார்கள் என்று நினைத்து ஐரோப்பாவில் அவனுடைய எண்ணங்களைப் பத்திரமாகப் பூர்த்தி செய்து கொள்ளலாமென்று அவன் நினைத்தான். அவர்கள் அப்படி விழித்துக்கொண்டாலும் அது காலம் தப்பியதாகும் என்று அவன் கூறிவந்தான்.

பிரிடன் தாக்கப்படாமலிருக்கும்பொழுதே, பிரிடன் ஜெர்மனியுடன் போர் தொடுத்தது கண்டு ஹிட்லருக்கு முதல் திடுக்கிடல் ஏற்பட்டது. பிரிடன் யுத்தம் தொடுத்த உடன் காலத்திலேயே சாம்ராஜ்ய நாடுகளிலிருந்து ராஜவிசுவாசத்தை வெளிப்படுத்துவதும், சாத்யமான உதவியைத் தருவதாக வாக்குறுதி செய்வதுமான அநேக தந்திகள் லண்டனுக்கு வந்ததைக்கண்டிருந்தால் ஹிட்லருக்கு மற்றொரு ஏமாற்றம் ஏற்பட்டிருக்கும். அன்று முதல் சாம்ராஜ்ய நாடுகள் பேருதவி செய்து வந்தன. ஹிட்லரின் அந்திய காலத்தை பிரிடன் வாக்குறுதி செய்தது.

எது நேர்ந்தாலும், பூர்ணமான யுத்தத்தை நடத்த பிரிடிஷ் சாம்ராஜ்யத்தின் பூரா ஐச்வர்யங்களும் திரட்டப்படும் வரையில் பிரிடன் சமாளித்து நிற்கும் என்று பிரிடன் வாக்குறுதி செய்தது. பிரிடன் செய்யவேண்டியது யாதெனில், ஜெர்மனியைச் சுற்றி அது ஒரு இரும்பு வளையத்தை அமைக்கவேண்டும். முதலில் சாம்ராஜ்ய நாடுகளும் பிறகு நேச தேசத்தார்களும் பூர்ணமான ஆயுதங்களைப் பெறும் வரையில் அதைக் கெட்டியாகக் காப்பாற்றி வரவேண்டும்.

பிரிடிஷ் சாம்ராஜ்ய நாடுகளுக்கு வெளியிலுள்ளவர்கள் பிரிடன் பிழைத்திருப்பது அதிதென்று டன்கர்க்குக்குப் பின் நினைத்தபொழுது பிரிடனுக்கு பரீக்ஷா காலம் வந்தது. உண்மையாக, சமாதானம் செய்துகொள்ளுவதைத் தவிர வேறு வழியில்லை என்று தோன்றிற்று.

அதன்பின் ஹிட்லருக்கு பிரிடிஷ் மக்களின் சார்பாக சர்ச்சில் ஒரு சவாலை அனுப்பினார். அது பின்வருமாறு. "நாங்கள் கடற்கரைகளில் போரை நடத்துவோம்; படைகள் இறங்கும் இடங்களில் போரை நடத்துவோம்; வயல்களிலும், தெருக்களிலும், மலைகளிலும் போரை நடத்துவோம்; நாம் ஒரு பொழுதும் பின்வாங்க மாட்டோம்." இந்த சவாலைக் கண்டு ஹிட்லர் **மெயின் காம்பை** ஞாபகப்படுத்திக்கொண்டான். பிரிடன்தான் மகத்தான விரோதியென்று அவனுக்கு தீவிரமான எண்ணம் உதித்தது.

1940-ம் வருஷம் வேனிர் காலத்தில் ஹிட்லர் அவன் கோபத்தை பிரிடன் பேரில் புகுத்தினான். பிரிடனுக்கான போர் துடங்கிற்று. ஸெப்டம்பர் மாதத்திற்குள் சக்திவாய்ந்த ஜெர்மன் விமானப்படையை, ஸ்பிட்பையர்களில் சென்ற சில வாலிபர்கள் பிரிடிஷ் ஆகாயத்திலிருந்து துரத்தியடித்து விட்டார்கள். இதில் ஏமாற்றமடைந்து ஹிட்லர் ஏழை மக்களின் பேரில் போரைத் துவக்கினான். மாரிகாலத்தில் ஆடவர்களும், ஸ்திரீகளும், குழந்தைகளும் ஜனங்களின் மன உறுதியைக் குலைக்க ஹிட்லர் செய்த முயற்சியை எதிர்த்துப் போராடினார்கள்.

1941-ம் வருஷம் வசந்தகாலத்தில் பிரிடன் மின்னல் தாக்குதலைச் சமாளித்து, கோபத்துடனும் யுத்தத்தை பூராவாக நடத்தி விடுவதென்று தீவிரமான உறுதியுடனும் நின்றது. இரும்பு வளையமும் கெட்டியாக இருந்தது. நாகரீகம் படைத்த உலகமும் ஆச்வாசத்துடன் பெருமூச்சு விட்டது.

1940-ம் வருஷம் ஜூன் மாதத்தில் பிரிடன் வீழ்ச்சி பெற்றிருந்தால் ஹிட்லர் ருஷ்யாவை வேனிர்கால இறுதியில் தாக்கியிருப்பான். ருஷ்யாவை படைகளைத்திரட்ட முடியாமல் செய்திருப்பான். மேலும் ருஷ்யா ஜெர்மன் விமானப்படையின் பூரா பலத்தையும் எதிர்த்து போராட வேண்டியிருக்கும். மேலும் பிரிடனிலிருந்து சாமான் கப்பல்கள் மூலம் ருஷ்யாவுக்குச் சென்ற 2,000 டாங்கிகளும், ஆயிரக்கணக்கான விமானங்களும், ருஷ்யாவுக்குச் சென்றிராது.

பிரிடன் வீழ்ச்சி பெற்றிருந்தால், ஆக்கிரமித்த ஐரோப்பாவிலுள்ள ஜனங்களின் எதிர்ப்பு குலைத்திருக்கும். மாக்விப்படைகள் தோன்றியிருக்காது. பிரிடன் வீழ்ச்சி பெற்றிருந்தால் காணி யுத்த யந்திரத்துக்குப்பின் ஐரோப்பிய, ஆசியா, ஆபிரிக்க வட்டாரத்தை ஏற்படுத்துவது என்ற ஹிட்லரின் கனவு பூர்த்தியடைந்திருக்கும்.

பிரிடன் வீழ்ச்சி பெற்றிருந்தால் ஹிட்லர், அமெரிக்காவைத் தாக்குவதற்கு முற்போக்காக ஜப்பானுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டிருப்பான்.

பிரிடனின் மன உறுதி ஜெர்மனியின் உயர்வான புஜ பராக்கிரமத்தை முறியடித்து விட்டது. பூர்வாக முஸ்தீப்புகளுள்ள ஒரு டிவிஷனுடனும் எதிரியைப்போல ஐந்தில் ஒரு பங்குள்ள விமானப் படையுடனும், 1940-ம் வருஷத்தில் பிரிடன், நேசதேசத்தாரின் இறுதி வெற்றிக்கு அஸ்திவாரம் போட்டது.

---

# வெற்றிக்கான மார்க்கம்.

## திட்டம் நிறுவியதிலிருந்து வெற்றி முடிய.

**பிரிகேடியர் ஜெனரல் ஜான் சார்டரிங்.**

(மான்செஸ்டர் கார்டியனின் ராணுவ நிருபர்).

ஜெர்மனியை முறியடிக்க நேசதேசத்தார் சென்ற மார்க்கம் நீண்டதாகும். இந்த ரஸ்தா ஆபிரிக்காவையும் ஆர்க்டிக்கையும் ஒன்றுபடுத்தியது. ருஷ்யாவிலுள்ள பொட்டல்களையும் நார்மண்டியிலுள்ள செழிப்பான நிலங்களையும் ஒன்று சேர்த்தது. சில சமயங்களில் அந்த ரஸ்தா வளைந்து சென்று இருட்டுள்ள பள்ளத்தாக்குகளிலும், வின்ஸ்டன் சர்ச்சில் சொன்ன பிரகாரம் சூரிய வெளிச்சமுள்ள உன்னத பிரதேசங்கள் வழியாகவும் சென்றது.

நாம் நெருக்கடியான நாட்களை மறந்துவிடக்கூடாது. டன்கர்க்கிலிருந்து பிரிடன் படைகளைப் பின்வாங்கி முஸ்தீப்புகளையும், தளவாடங்களையும் இழந்து தன்னந்தனியே நின்றதையும் நாம் மறந்துவிடக்கூடாது. அதன் பின் ஜெர்மன், இதாலிய சேனைகள் கெயிரோவுக்கும், சூயஸ் கால்வாய்க்கும் சமீபத்தில் வந்துவிட்டன. ஜெர்மானியர்கள் ருஷ்யப் படைகளை வால்கா நதிக்குத் துரத்தி ருஷ்யத் தலைநகரத்துக்கு அபாயம் உண்டுபண்ணினார்கள். இப்பொழுது பூராவாக மாறுதல் ஏற்பட்டுவிட்டது.

வெற்றிக்கான கூட்டு முயற்சியைக் கூறுபோடுவது கண்ணியமானதல்ல, பிரயோஜனமுமுள்ளதல்ல. ஒவ்வொரு நேசதேசமும் அதனால் இயன்ற அளவு உதவி செய்திருக்கிறது. ஜெர்மன் சேனையின் தைரியத்தைக் குலைத்த ருஷ்ய முயற்சிக்கு பிரிடிஷ் பிரதம மந்திரி அவருடைய பாராட்டைத் தெரிவித்திருக்கிறார். ஜெர்மன் டிவிஷன்களில் நான்கில் மூன்று பாகம் ருஷ்யப் போர்முனையில் தேக்கி வைக்கப்பட்டு முறியடிக்கப்பட்டன என்பதையும் நாம் மறந்து விடக்கூடாது. ஆகிலும் ருஷ்ய சேனைகளின் வெற்றிக்கு, பிரிடிஷ் சாம்ராஜ்யத்தினுடையவும் அமெரிக்காவினுடையவும் ஆயுத சாலைகளிலிருந்தும் தொழிற்சாலைகளிலிருந்தும் ருஷ்யாவுக்கு வந்த ஏராளமான ராணுவத் தளவாடங்கள்தான் காரணமென்பதை எந்த ருஷ்யரும் மறக்கமுடியாது.

அமெரிக்கா பஸிபிக் போரின் பெரும் பாகத்தை ஏற்றுக்கொண்டதுடன் வட ஆபிரிக்காவிலும், இதாலியிலும், பிரான்ஸிலும் நடைபெற்ற போர்களுக்கு ஏராளமான முஸ்தீப்புகளுள்ள பெரிய சேனைகளையும் அனுப்பியிருக்கிறது. மேற்குமுனைப் போரில் இறுதி கட்டங்களில் ஜெர்மனியைத் தாக்கிய விமான நடவடிக்கையில் அகில பிரிடன் சமமான பங்கெடுத்துக் கொண்டது.

ஐரோப்பாவில் ஹிட்லர் போரைத் துவக்குமுன் இரண்டு வருஷங்களாகப் போரை நடத்திவந்த சைனு அடுத்து வந்த வருஷங்களில் உறுதியுடன் போராடி வந்தது. பிரிடிஷ் சாம்ராஜ்யமும், குடியேற்ற நாடுகளும் தங்களாலியன்ற அளவு ஒத்தாசை செய்திருக்கின்றன.

சரித்திரம் வரையப்பட்டு, வாசிக்கப்படும்பொழுது, பிரிடன் துணிக்கப்பட்டு தன்னந் தனியே நின்று, ஜெர்மனி இதாலியின் ஒன்றுபட்ட சேனைகளை தீவிரமாக எதிர்த்து நின்றது என்ற மகத்தான நெருக்கடியையும் உலகம் மறந்துவிடாது.

அந்த சமயத்தில் பிரிடன் வீழ்ச்சி பெற்றிருந்தால் என்ன சம்பவித்திருக்கும் என்று சொல்லுவதினுல் ஒரு லாபமும் இல்லை. ஆயுதங்கள் பூர்த்தியாக இல்லாத ருஷ்யா தனித்திருந்து ஜெர்மன் ராணுவ சக்தியை சமாளித்திருக்கமுடியாது. அபாரமான மனித பலமும், தளவாட பலமும் உள்ள அமெரிக்காவும் யுத்தத்திலீடுபடுமுன் அநேக வருஷங்கள் வரையில் ஆயத்தம் செய்திருக்கவேண்டும். இந்த அவகாசத்தை ஜெர்மனி தந்திராது. ருஷ்யாவும், அமெரிக்காவும் ஒன்றுபட்டிருந்தாலும் பிரிடனில் கடற்படை, விமானப்படை உதவியன்னியில் அமெரிக்க ஐச்வர்யங்கள் உசித காலத்தில் ருஷ்யாவின் உதவிக்கு வந்திருக்குமாவென்பதும் சந்தேகம்தான்.

பிரிடன் வெற்றிகரமாக சமாளித்து நின்றிராவிடில் உலகத்தில் வேறுவிதமான நிலைமை ஏற்பட்டிருக்கும். இதற்கு ஒப்பாக சரித்திரத்தில் நெபோலிய யுகத்துக்கு முன்னால் 13-வது நூற்றுண்டு நிலைமையைத்தான் சொல்லவேண்டும். மானிட வர்க்கத்தின் மற்றொரு தீங்கான மங்கோல் ஜாதியைச் சேர்ந்த செங்கிஸ்கான் ஆசியாவிலும், தெற்கு ருஷ்யா பேரிலும், பால்கன் நாடுகள் பேரிலும, ஹங்கேரி பேரிலும் படையெடுத்தான். ஆகிலும் பிரிடன் மன உறுதியுடன நின்றது.

பிரிடனுக்காக நடைபெற்ற போரில் பிரிடிஷ் மக்கள் காட்டிய சாமர்த்தியமும், தியாகமும் தொழிற்சாலைகளின் பரிசிரமமும் படையெடுப்பிலிருந்து பிரிடனையும் நாசத்திலிருந்து உலகத்தையும் காப்பாற்றின. அதிலிருந்து படைகளைத் திருத்தியமைத்துக்கொண்டு முஸ்தீப்புகளைப் பெறவும், தேசத்திலுள்ள படைகளை துரிதமாகத் திரட்டி பயிற்சி அளிக்கவும், பிரிடனைச்சேர்ந்த கடல்தாண்டியுள்ள சாம்ராஜ்ய நாடுகளிலிருந்து தேர்ச்சி பெற்ற படைகளை பிரிடனுக்குக் கொண்டுவரவும், நேசநாடுகளின் வீழ்ச்சியினுல் ஏற்பட்ட நிலைமைக்குத் தக்கவாறு கடல் தாண்டியுள்ள படைகளைத் திருத்தியமைக்கவும், பிரிடனுக்கு அவகாசம் கிடைத்தது.

உள்நாட்டு முயற்சிகளையும், அயல்நாட்டு யுத்த தந்திரத்தை நிறுவவும், அந்த கவலைக்கிடமான மாதங்களில் போரை நடத்தவும், அமைதியுள்ளவர்களும் தைரியசாலிகளும் பிரிடனிலிருந்தார்களென்பது பிரிடனுக்கும் உலகத்தாருக்கும் நன்மைதான். பிரிடனின் கடற்படை பிரெஞ்சு கடற்படையின் உதவியன்னியில் யூ-படகுகளின் அபாயத்தை சமாளிக்க வேண்டியிருந்தது. ஏழு சமுத்திரங்களிலுள்ள கடல் மார்க்கங்களை ரக்ஷிக்கவேண்டியிருந்தது. சாமான் கப்பலகளுக்குத் துணைக்காவல் புரியவேண்டியிருந்தது. ஏனெனில் கடல் மார்க்கங்களில்லாவிடில் பிரிடன் நாசமடைந்திருக்கும்.

ஆபிரிக்காவிலுள்ள பிரிடிஷ் சேனை குறைவான பலத்துடன் மிகவும் வலுவான இதாலிய சேனையை சமாளிக்கவேண்டியிருந்தது. அதன் விமானப்படை ஜெர்மன் விமானப்படையை எதிர்த்துப் போராடுவதற்கும், காலக்கிரமத்தில் எதிரியின் பிரதேசத்தில் விமான நடவடிக்கையை ஆரம்பிப்பதற்கும் விஸ்தரிக்கப்படவேண்டியிருந்தது. பிரிடன் இவைகளை எவ்வாறு பூர்த்தி செய்ததென்பது சரித்திரப் புகழ்பெற்றது. ஜெர்மன் கடற்படை கடல்களிலிருந்து துரத்தியடிக்கப்பட்டது. பிரிடிஷ் விமானிகளின் மேன்மை ஸ்தாபிக்கப்பட்டது. வேவல் பிரபுவின் சிறந்த சேனுநாயகம் இதாலிய சேனையை சமாளித்ததுடன், இறுதியில் அதை ஆபிரிக்காவில் பின் துரத்தியடித்தது. மற்றொரு படை இதாலியர்களை பிரிடிஷ் ஸோமாலிலாந்திலிருந்தும் கிழக்கு ஆபிரிக்காவிலிருந்தும் விரட்டியது.

யுத்த ஆரம்ப காலத்தில் ஏற்பட்ட போரின் படிப்பினையை பிரிடன் நன்கு உணர்ந்தது. அதன் பின் நிறுவப்பட்ட யுத்தப்பயிற்சி இப்பொழுது போரில் வெற்றி பெற்றதுடன், அமெரிக்கப் படைகளுக்கும் பயிற்சி முறைக்கு அஸ்திவாரமாக ஆகிவிட்டது.

1941-ம வருஷம் டிசம்பர் மாதத்தில் அமெரிக்கா யுத்தத்தில் புகுந்துவிடுமுன் பிரிடனி லுள்ள ஒர்க்ஷாப்புகள் அதிக நேரம் வேலை செய்து பிரிடனுக்குத் தேவையான முக்கியமான ஆயுதங்களையும் ஸப்ளைகளையும் வழங்கி வந்தன. ஜெர்மனி அகாரணமாகத் தாக்கியபின் யுத்தத்தில் ருஷ்யா ஈடுபட்டதும், ஜப்பானியர்கள் வஞ்சக புத்தியுடன் பேரல் துறை முகத்தைத் தாக்கியபின் அமெரிக்கா யுத்தத்தில் புகுந்துகொண்டதும் போரின் நிலைமையைப் பூராவாக மாற்றிவிட்டன. உடன்காலத்திலேயே நேசதேசத்தாரின் ஐச்வர்யங்கள் அதிக ரித்துவிட்டன. நேசதேசத்தார்கள் தற்காப்பு முறையிலிருந்து முன்னேறித் தாக்குவது எப்பொழுது என்பதற்குத்தான் காலஅளவு குறிப்பிடவேண்டியிருந்தது.

1940-ம் வருஷத்தில் "எங்களுக்கு முஸ்தீப்புகளைக் கொடுங்கள், நாங்கள் வேலையைச் செய்து முடிப்போம்" என்று மிஸ்டர் சர்ச்சில் சொன்ன வார்த்தைகள் இனிமேல் தேவை யில்லை. போரை நடத்த ஒன்றுபட்ட திட்டமும், போரினால் ஏற்படும் தியாகங்களை எவ்விதம் பகிர்ந்து கொள்ளுவதென்பதும்தான் யோசிக்கப்படவேண்டியிருந்தது.

சென்ற இரண்டு வருடங்களின் யுத்த சரித்திரம் எழுதப்படும்பொழுது படைகளுக்குள் இருந்த ஒத்துழைப்பும், பொதுவான லக்ஷியத்தை அடைய அவைகள் ஏற்றுக்கொண்ட நட வடிக்கையும் நன்கு ஸ்தோத்திரம் செய்யப்படும். திட்டம்போடுவது, முன் யோசனை, குறைவுபாடன்னியில் ஜாக்கிரதையான ஆயத்தம் முதலிய குணங்கள்தான் நேசதேசத் தாருக்கு வெற்றிக்குமேல் வெற்றியை அளித்து வந்தன.

அமெரிக்காவினுடையவும், பிரிடிஷ் சாம்ராஜ்ய குடியேற்ற நாடுகளுடையவும் நிராக்ஷேபனையான உதவிதான் ருஷ்யாவின் மனித பலத்தைப் பூராவாக உபயோகிக்க வசதியளித்தது. அதற்காக பாரசீக வளைகுடாவிலிருந்து கிழக்கில் ருஷ்யாவிலுள்ள இருப்புப் பாதைகள் வரையிலும் புதிய இருப்புப் பாதைகள் அமைக்கப்படவேண்டியிருந்தது. மேற்கில் யூ-படகுகளின் தாக்குதல்களையும், ஆர்க்டிக் கடல் புயல் காற்றுகளையும் சமாளித்து பாரெண்ட்ஸ் கடலிலுள்ள வடக்கு ருஷ்யத் துறைமுகங்களுக்கு அநேக சாமான் கப்பல்கள் போய்ச்சேரும்படி பிரிடிஷ் கடற்படை காபந்து செய்து வந்தது. அதன்பின் ருஷ்யா எதிரியை ருஷ்ய பூமியிலிருந்து துறத்தியடித்து விடுமென்ற நிச்சய புத்தி ஏற்பட்டது. கிழக்கில் ருஷ்யா தாக்கி வந்தபொழுது, தெற்கிலும், மேற்கிலும் நேசதேசத்தார்கள் அடி மேல் அடி அடித்து வந்தார்கள். பிரிடிஷ், அமெரிக்க விமானப்படைகள் விமானத் தாக்குதலைச் செய்து வந்தன. ஜெர்மனி ஆக்கிரமணத்திலிருந்து மீட்கப்பட்ட நாடுகள் கொடுக்கக்கூடிய உதவியும் ஒன்று சேர்க்கப்பட்டு நல்ல முறையில் உபயோகப்படுத்தப்பட்டது.

படையெடுப்புக்கான சாதனங்களையும் முறைகளையும் பரீக்ஷை பார்க்கும் வகையில் ஒத்திகை நடவடிக்கைகள் ஆரம்பிக்கப்பட்டன. ஆயத்தங்கள் பூர்த்தியானவுடன் ஜெனரல் ஈசன்ஹவரின் கமாண்டுக்குட்பட்ட கடற்படை தேர்ச்சி பெற்ற பிரிடிஷ் படைகளையும், அமெரிக்கப் படைகளையும் வடக்கு ஆபிரிக்காவுக்குக் கொண்டுபோயிற்று. ஜெனரல் அலெக்ஸாண்டரின் உயர்தர கமாண்டுக்குட்பட்டு எகிப்திலிருந்தும், அல்ஜீரியாவிலிருந்தும் ஜெனரல் மாண்ட்காமரி நடவடிக்கையை ஆரம்பித்ததின் பயனாக கேப் பானில் பூர்ணமான வெற்றி கிடைத்தது. ஆபிரிக்காவிலிருந்த ஜெர்மன், இதாலியப் படைகள் ஒன்று பாக்கி யில்லாமல் கொல்லப்பட்டன. அல்லது கைது செய்யப்பட்டன. எல்லா பீரங்கிகளும் கைவசப்படுத்தப்பட்டன.

அதற்கு சொல்ப காலத்திற்குள் ஸிஸிலியும், இதாலியும் படையெடுக்கப்பட்டதால் இதாலி யுத்தத்திலிருந்து விலகும்படி நேரிட்டது. அப்பொழுதுதான் மேற்குப் பக்கத்தில் ஐரோப்பாவைப் படையெடுப்பதற்குத் தகுந்த தருணம்.

ஜெனரல் ஈசன்ஹவரின் உயர்தர கமாண்டின் கீழ் படையெடுப்புக்கான படைகள் லண்டனில் குவிக்கப்பட்டன. மேலும் லெப்டினெண்ட் ஜெனரல் F. E. மார்கனிடமுள்ள திட்டம் போடும் வேலைக்காரர்கள் ஆரம்ப நடவடிக்கைக்குத் தேவையான எல்லா காரியங் களையும் ஆயத்தம் செய்து விட்டார்கள். வடக்கு ஆபிரிக்காவிலும் ஐரோப்பாவிலுமுள்ள நேசதேச சிப்பந்திகளின் அமைப்பைப்பற்றி சில வார்த்தைகள் சொல்லவேண்டும். நேச தேசப் படைகளின் சரித்திரத்திலேயே இதற்கு முன் காணப்படாத ஒரு அம்சம் இங்கு காணப்பட்டது. தலைமைக் காரியாலயத்தில் ஒவ்வொரு இலாகாவிலுமுள்ள சிப்பந்திகள்

யதார்த்தமாக ஒன்றுபட்டவர்கள். பிரிடிஷாருக்கும், அமெரிக்கர்களுக்கும் ஒரு வித்தியாசமும் கிடையாது. உயர்தர கமாண்டர் அமெரிக்கர், பிரான்ஸில் படையெடுப்பு ஆரம்பித்த காலத்தில் ஜெனரல் மாண்ட்காமரி சேனைகளுக்குத் தலைமை வகித்தார். திட்டம் போடும் காரியாலயத்தின் தலைவர் பிரிடிஷ் ஆபீஸர். உயர்தர அதிகாரி அமெரிக்கர். உச்சி முதல் நுனி வரையில் அமைப்பு இதே மாதிரிதான. தேச வித்தியாசம் பாராட்டப்படவில்லை.

திறம்பட செய்து முடிக்கக்கூடிய வேலைகளில் நேசதேச சேனைகள் ஈடுபடுத்தப்பட்டன. ஜெர்மனியின் பலமான எதிர்ப்பு காணப்பட்ட இடத்தில் ஊடுருவிச் செல்லவும் ஜெர்மனி பின் வாங்குவதற்கு சௌகர்யமான பாகத்திலும் போரை நடத்த தேர்ச்சி பெற்ற பிரிடிஷ், கனேடியத்துருப்புகள் உபயோகிக்கப்பட்டன. சிறந்த முஸ்தீப்புகள் உள்ள அமெரிக்க கவசம்பூண்ட படைகள் எதிரியின் பலஹீனமான பார்ச்வங்களைத் தாக்கி, அவைகளை முறியடித்து விடவும் ஈடுபட்டன.

போர்முனைக்குப் பின் உள்ள சேவைப்படைகளிலும் பூர்ணமான ஒத்துழைப்பு காணப்பட்டது. நதிகளுக்குப் பாலங்களை அமைப்பது, ரஸ்தாக்களை சீர்படுத்துவது, துறைமுகங்களை சுத்தி செய்வது, சாமான்களை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டுபோவது என்ற வேலைகளை நேசதேசப் படையிலுள்ள எல்லோரும பகிர்ந்து செய்து வந்தார்கள். ராணுவ சரித்திரத்திலேயே நேசதேசப் படைகள் இவ்வளவு ஒன்றுபட்டும், எல்லாவற்றையும் பகிர்ந்தும் அலுவல்களை இது வரையில் நடத்தவில்லையென்பது நிச்சயம்.

---

## அவர்களின் சிலாக்கியமான காலம்.

### கடற்பலம் முக்கியமாக இருந்தது.

**(மேஜர் ஜெனரல் ஸர் சார்ல்ஸ் குவின்.)**

வெற்றி வைபவத்தின உற்சாகம் ஜெர்மன் படை பலத்தை கொஞ்சம் கொஞ்சமாக அழித்து அதன் தாக்குதலை சமாளித்து வந்த போரின் ஆரம்பகட்டத்தின் முக்கியத்துவத்தை மறந்துவிடும்படியோ அல்லது குறைத்து மதிக்கும்படியோ செய்துவிடும். ஆகிலும் அந்த கட்டங்களிலும் இறுதியில் வெற்றிபெறும் வரையில் அகில பிரிடனும், சாம்ராஜ்ய நாடுகளும், குடியேற்ற நாடுகளும் மிகவும் முக்கியமான பங்கு எடுத்துக்கொண்டன.

வெற்றிக்கு அஸ்திவாரம் பிரிடனின் கடற்படை பலத்தைக்கொண்டும், அதன் வியாபார கப்பல்களின் மாலுமிகளுடைய சாதுர்யம், நெஞ்சு ஊக்கம், முதலியவற்றினாலும் போடப்பட்டது. கடற்படை இல்லாவிடில் தற்காப்புகளை பரிபாலித்து வந்திருக்கமுடியாது. நாமும் பதில் தாக்குதல்களை செய்திருக்கமுடியாது. மேலும் கடற்படை சாம்ராஜ்யத்துக்கு மட்டுமில்லாமல் எல்லா நேசதேசத்தார்களுக்கும் சேவைசெய்து வந்திருக்கிறது. பதார்த்தத்தின் கன சக்தியைப்போல் கடற்படை பலம் எங்குபார்த்தாலும் பரவியிருக்கிறது. அதன் வியாபகங்கள் பகட்டாக இல்லாததால் அதன் உபயோகமும் மதிக்கப்படுவதில்லை. கன சக்தியோடு நாம் வேலை செய்தால் நமக்கு அதிக ஒத்தாசை கிடைக்கும். அதை எதிர்த்தால் நாம் சோர்வடைந்துவிடுவோம். காலக்கிரமத்தில் மகத்தான கட்டிடங்களும் விழுந்துவிடும். இது கடற்படை சக்திக்கும் பொருந்தும்.

பிரிடன் தன்னந்தனியே நின்றபொழுது அட்லாண்டிக் கடற்போரை இடைவிடாது நடத்திய கடற்படை இல்லாவிடில் தப்பிப்பிழைத்திருக்காது, படை பலத்தையும் பெருக்கிக் கொண்டிருக்காது. பிரிடன் அதிக தியாகத்துடன் ருஷ்யாவிற்குச் செல்லும் கடற் மார்க்கங்களை பரிபாலித்து வராவிட்டாலும், ஐரோப்பாவில் மேற்கு, தெற்கு கடற்கரைகளை ரக்ஷிக்க பெரும் படைகளை அனுப்பும்படி ஜெர்மனியை பலவந்தப்படுத்தாமலிருந்திருந்தாலும், ருஷ்யா ஜெர்மன் தாக்குதலை துரத்தியடித்திருக்கமுடியாது.

பிரிடன் கடற்படை பலத்தைமட்டும் நம்பியிருக்கவில்லை. பிரிடனுக்காக நடந்த போரில் பிரிடிஷ் விமானப்படை ஜெர்மனிக்கு முதல்முதலாக பெரிய தோல்வியை தந்ததுமல்லாமல், ஜெர்மன் விமானப்படை யுத்தத்தில் முக்கியமான சக்தியல்லவென்றும் ருஜுச் செய்துவிட்டது. மேலும் படையெடுப்புக்காக தயாராக இருந்த படகுகளை பிரிடிஷ் கப்பற்படையும், விமானப்படையும் தாக்காமலும் அது ரக்ஷிக்கக்கூடவில்லை. தயாராக இருந்த

படகுகளும், படைகளும் இங்கிலாந்தில் வெற்றிகரமாக இறங்கியிருந்தால் ஜெர்மன் ஆதிக்கத்தை எதிர்த்துப் போராட பாக்கியிருந்த ஒரு தளத்தையும் நாகரீகம் படைத்த உலகம் இழந்திருக்கும்.

கடற்படை, விமானப்படையின் அரிய சேவைகள் மகத்தானதாக இருந்தபோதிலும், பிரிடிஷ் மக்களுடையவும், பிரிடிஷ் தலைவர்களுடையவும் தைரியமும், சகிப்புத்தன்மையும், ஆதரவளிக்காமலிருந்தால் அவை பயனளித்திருக்காது. உபயோகமுள்ள நிவாரணம் இல்லாதபொழுதும், இறுதி வெற்றியைப்பற்றி தெளிவான தோற்றம் காணப்படாத பொழுதும், நகரங்கள் பேரில் வீசப்பட்ட நாசமாக்கும் வெடிகுண்டுகளை பிரிடன் சமாளித்து நின்றது என்பது இறுதி வெற்றிக்கு அது செய்த பேருதவியாகும்.

பூர்ணமான சரணகதியையும், ஆபத்தமான சரணகதி ஷரத்துக்களையும் பிரிடன் புரக்கணித்தது. மேலும் பிரிடன் தனித்து நின்ற வருஷத்தில் சாம்ராஜ்ய நாடுகளும், குடியேற்ற நாடுகளும், ரக்ஷணைக்குட்பட்ட நாடுகளும் மனதார அளித்த உதவியோடும்கூட பிரிடன் தன்னைத்தானே தற்காப்பு செய்துகொண்டு எதிரியையும் சாதுர்யமாக தாக்கி வந்தது.

லிபியாவிலும், அபிஸீனியாவிலும், வேவல் நடத்திய சிலாக்கியமான போர்களும், மத்தியதரைக்கடலில் கடற்தளபதி கன்னிங்ஹாமின் தீரமான நடவடிக்கையும் நாசத்தை விளைவித்து இதாலியை தலைகிளப்பவொட்டாமல் செய்துவிட்டன. மேலும் பலஹீனமான கூட்டாளியின் உதவிக்கு படைகளை அனுப்பும்படி ஜெர்மனியையும் கட்டாயப்படுத்திவிட்டது. இந்த நடவடிக்கைதான் எல் அலாமீனிலும், டியூனிஸிலும், சிசிலியிலும், இதாலியிலும் ஜெர்மனிக்கு தோல்வியை இழைத்தது. அதே வருஷத்தில் பலஹீனமாக இருந்த பிரிடன் வீரத்தன்மையுடன் கிரீஸுக்கு அளித்த வாக்குறுதியை நிறைவேற்றும் முறையில் கிரீஸிலும், லிபியாவிலும் நடவடிக்கைகளை துவக்கி நஷ்டமடைந்தபோதிலும் அது ருஷ்யாவிற்கு பெரும் சாதகமாக இருந்தது.

கிரீஸ், கிரீட் போர்கள் சந்தேகமன்னியில் ருஷ்யாவின்மேல் தாக்குவதை ஒத்தி வைத்ததுடன் ஜெர்மன் சேனையின் விமான பலத்தை குறைத்துவிட்டன. அதனால்தான் ஜெர்மானியர்கள் மாரிகால நடவடிக்கைகளில் நாசமடைந்தார்கள். அந்த நடவடிக்கைகள் தான் துருக்கியைத் தாண்டிச்சென்று காக்கேஷியாவைத் தாக்க தளம் ஏற்படுத்துவதற்காக ஈராக்கை வசப்படுத்திக்கொள்வது என்ற ஜெர்மன் திட்டத்தையும், ஜெர்மனி கைவிட்டு விடும்படி செய்தது. கிரீஸிலும், பால்கன் நாடுகளிலும் பத்திரமான ஸ்தானத்தை அடைய வேண்டுமென்ற ஜெர்மனியின் அவா, பிரிடிஷார் குறுக்கிடுவார்கள் என்ற பீதியினால் தோன்றியதென்றும் பிரிடிஷ் கடற்படையிடமிருந்து அபாயம் நேரிடும் என்பதை ஜெர்மனி ஒப்புக்கொண்டதாகும் என்பதையும் நான் இங்கு கூறுகிறேன்.

ஜப்பானின் தாக்குதல்களின் மூலம் அமெரிக்கா யுத்தத்தில் ஈடுபட்டாலும் அது பிரிடிஷ் சாம்ராஜ்யத்தின் மனித சக்தியினுடையவும், கடற்படையினுடையவும் சிரமங்களை வெகுவாக அதிகரித்தது. அதனால் சிலாக்கியமானதும் யுத்த பயிற்சி பெற்றதுமான ஆஸ்திரேலிய சேனையை தூரக்கிழக்குக்குக் கொண்டுபோகும்படி நேரிட்டது. இதுபோன்ற மற்ற படைகளையும் வேறு இடங்களுக்கு அனுப்பியதினால் எகிப்திய தளத்தை இழக்கும் படியான பெரும் நஷ்டம் நமக்கு ஏற்பட்டது.

சிறிதுகாலம் வரையில் பிரிடனுக்கு நேசதேசத்தாரிடமிருந்து அதிக உதவி தேவையாக இருந்தது. ஜெர்மன் விமானப்படையின் ஒரு பாகம் ருஷ்யாவிற்கு சென்றதும், அமெரிக்க தளவாட உதவி செய்ததும், யூ-படகுகள் கரீபியன் சமுத்திரங்களில் நடமாட ஆரம்பித்தபிறகு அட்லாண்டிக்குக்கான போரில் அமெரிக்கா அதிகப்பங்கு எடுத்துக்கொண்டதும் பிரிடனுக்கு சிறிது ஆச்வாசம் அளித்தன. ஆகிலும் இந்த உதவிக்கு பர்த்தியாக பிரிடிஷ் விமானங்கள் ஜெர்மன தொழிற்சாலைகளை தாக்கின. பிரிடன் அமெரிக்க துருப்புகளுக்கு பயிற்சி தளமாகவும், பாய்ச்சல் ஸ்தலமாகவும் அமைக்கப்பட்டது.

பிரிடிஷ் விமான நடவடிக்கை ஜெர்மனியின் தொழிற்சாலை உற்பத்திகளை குறைத்தது மல்லாமல், ஜெர்மனியின் சண்டை விமானங்கள், மனித பலம், மற்ற ஐச்வரியங்களில் பெரும்பாகத்தை தற்காப்புக்கு உபயோகிக்கும்படி கட்டாயப்படுத்தி விட்டது. மேலும் பிரிடன் முன்னேறித் தாக்குவதற்கு முக்கியமான தளமாக அமைக்கப்பட்டு வந்ததால் ஐரோப்பாவின் மேற்கு கரையை தற்காப்பு செய்ய வேண்டியதற்காக கிழக்கு போர் முனையிலிருந்து ஜெர்மனி மிகுதியான படைகளை அனுப்பவேண்டியதாயிற்று. தூரக்கிழக்கில்

எவ்வித நஷ்டம் ஏற்பட்டபோதிலும் ஜெர்மனியின் பூரணமான தோல்விக்கும் அதன் மூலம் ஜப்பானின் தோல்விக்குமான தாக்குதலுக்கு ஆயத்தம் செய்யும் பிரிடனின் தீவிரபுத்தி பாதிக்கப்படவில்லை.

போதுமான அளவு கப்பல்கள் கிடைக்கும் வரையிலும் அமெரிக்கப் படைகள் ஒன்று திரட்டப்பட்டு போதுமான பயிற்சியை பெறும் வரையிலும், மேற்குப் போர்முனையில் கடல் மூலமாகவும், தரை மூலமாகவும் தாக்குவது என்பது யோஜிக்கப்படவில்லை. ஆகிலும் ருஷ்யாவில் ஜெர்மனி மாட்டிக்கொண்டதால் மேற்கு ஐரோப்பிய படையெடுப்பும் நடைபெறக்கூடியதாக இருந்தது.

இதே சமயத்தில் ருஷ்யாவிற்கு நல்ல முறையில் உதவி செய்வதற்காக அச்சுக கட்சியின் ஜூனியர் கூட்டாளியைத்தாக்கி ஜெர்மனியை அவனுடைய உதவிக்கு படைகளை அனுப்பும்படி செய்வதும் அவசியமாயிற்று. இதை அனுசரித்து சாம்ராஜ்ய படைகள் முக்கியமான பங்கு எடுத்துக்கொண்டன. இறுதித் தாக்குதலுக்கு ஆரம்பமாக அலாமீனிலும், டுனீஷியாவிலும் நடவடிக்கைகள் நடத்தப்பட்டன. டுனீஷியா நடவடிக்கைதான் இருவகைப்பட்ட தாக்குதலுக்கு முதல் முதலான மகத்தான அனுபவம். அதற்கு முன்னதாக டிப்பியில் இறங்கிய பிரிடிஷ், கனடிய படைகள் படையெடுப்பிலுள்ள ஆரம்ப சிரமங்களைப்பற்றி உபயோகமுள்ள படிப்பினைகளை போதித்திருக்கின்றன.

அடுத்தபடியாக ஸிஸிலி, இதாலியப் படையெடுப்பு ஏற்பட்டது. சாம்ராஜ்யப்படைகள் முக்கியமான பங்கெடுத்துக் கொண்டபோதிலும், அமெரிக்க ஒத்துழைப்பும் அதிகரித்தது. கனடிய, நியூஸிலாந்து, இந்தியத் துருப்புகள் முன்னணியில் போரை நடத்தி வந்தன. மால்டாவின் உதவியையும் நாம் புறக்கணித்துவிட முடியாது. அநேக வருஷங்களாக விமானத் தாக்குதல்களை அனுபவித்தபின் மால்டா ஒரு முக்கியமான பாய்ச்சல் ஸ்தலமாக ஆகிவிட்டது. இதாலி சரணடைந்தது. ஆபிரிக்காவில் ஏற்பட்ட பலமான தோல்விக்குப்பின் சிறந்த துருப்புகளை இழந்த ஜெர்மனி ஐரோப்பாவின் பலஹீனமான அடிபாகத்தைத் தற்காப்பு செய்யும் பொறுப்பை ஏற்றுக்கொள்ளவேண்டியதாயிற்று. அதனால் அதற்கு அதிகசிரமம் ஏற்பட்டது. ருஷ்யாவில் எல்லாப் படைகளும் வேண்டிய காலத்திலும் மேற்குப் பக்கத்தில் அபாயத்தைத் தடுக்கப்படைகள் வேண்டிய சமயத்திலும் ஜெர்மனி புதிய தோல்விகளைப்பெற்றது.

இவைகள் மிகவும் வெற்றிகரமான நடவடிக்கைகள். நேசதேசத்தார்களின் பங்கை நாம் ஒப்புக்கொண்டாலும் வெற்றிக்கு சாம்ராஜ்யப் படைகளின் நீண்ட காலப்போரும் எல்லா நடவடிக்கைகளுக்கும் ஆஸ்பதமான கடல் மார்க்கங்களில் பிரிடன் ஆதிக்கம் பெற்றிருந்ததும் தான் காரணங்கள்,

மத்தியதரைக் கடல் முன்னேற்றம்தான் நார்மண்டியில் படைகளையிறக்கும் நடவடிக்கைக்கு முற்போக்கான நடவடிக்கை. அது அனுபவத்தையும் முக்கியத்வமுள்ள பயிற்சியையும் தந்தது. அந்த நடவடிக்கையில் நமது மேற்கு நேசநாட்டின் பூராவான சக்தியும் காண்பிக்கப்பட்டது. பிரிடனுக்குள்ள பொறுப்புகளுடனும் குறைவான மனித பலத்துடனும் பிரிடன் இரண்டாம் தரமான ஆனால் முக்கியமான பங்கெடுத்துக்கொள்ள நேரிட்டது. பிரிடன் அநேக வருஷங்களாக முயற்சி செய்ததினால்தான் இந்தத் துணிவுகரமான நடவடிக்கை சாத்தியமாகிற்று என்றாலும் நடவடிக்கைக்கான தளங்களையும் படையெடுப்புப் படைகளுக்கு கடல், விமானப்படை ரக்ஷணையையும் அமைத்தது பிரிடன்தான். தாக்கும் படையிலுள்ள யுத்த தந்திரமறிந்த உதவிப்படைகள் பெரும்பாலும் அமெரிக்கர்களாக இருந்தபோதிலும் ஈஸன்ஹவரின் உயர்தர கமாண்டின் கீழ் நிர்வாகப் பொறுப்பு ஒரு பிரிடிஷ் ஜெனரலிடம்தான் இருந்து வந்தது.

படைகளை இறக்குவதிலும், முன்னேறும் வாசலிலிருந்து ஊடுருவிச்செல்லுவதிலும், சாம்ராஜ்யத் துருப்புகளும் பிரிடிஷ், கனடியத் துருப்புகளும் பெரும் பங்கெடுத்துக் கொண்டன. அவைகள்தான் ஜெர்மனியின் சிறந்த படைகளின் தாக்குதலை சமாளிக்க வேண்டியிருந்தது.

மனஉறுதியுடன் சமாளித்து நின்றால் பலஹீனமாக உள்ள எதிரியின் போர்முனையை அழித்துவிடலாமென்றும், யுத்த தந்திரமறிந்த மூலப்படைகள் அதன் சலன சக்தியையும், தாக்கும் சக்தியையும் பூராவாகப் பயன்படுத்திக்கொள்ள சந்தர்ப்பம் அளிக்கப்படலாமென்றும் அவைகள் வெளிப்படுத்தின.

கெயன், பாலே, காமாண்ட் போர்கள் பிரான்ஸை விடுதலை செய்த வெற்றிக்கு முக்கியமாகப் பேருதவி செய்தன.

பிரிடனும் சாம்ராஜ்யமும் போர்ப் படைகளின் சேவையைப்பற்றிப் பெருமைகொண்டால் அவர்களுடைய முயற்சிக்குக் கட்டளையிட்ட தலைவர்களைப்பற்றியும் அவர்கள் மிகுதியாகப் பெருமை பாராட்டவேண்டும். அவர்கள்தான் நேசதேசத்தார்களிடையே ஒற்றுமையை வளர்ச்சி செய்தார்கள். இந்த ஒத்துழைப்புக்கு சில சமயங்களில் சுயநல தியாகம் அவசியமாக இருந்திருக்கும். பிரிடிஷ் முயற்சியினால்தான் வெற்றி கிடைத்ததென்று பாத்தியம் கொண்டாடுவதும் மிகையாகும்.

---

# விளக்குகள் பிரகாசிக்கின்றன.

## அயல்நாட்டிலுள்ள ஒரு சிநேகிதனுக்குக் கடிதம்.

### (*H. M.* டாம்லின்ஸன்.)

இன்று பிரிடிஷ் மக்கள் வெற்றி என்ற ஜன்னல் வழியாகப் பார்க்கிறார்கள். அவர்கள் மறந்துவிட எண்ணினாலும் அவர்களுடைய வீடுகளுக்கு ஏற்பட்ட நாசத்தை அவர்கள் நினைக்காமல் இருக்க முடியவில்லை. இங்கு "நம்முடைய பழைய காலம்" "கடலும் காடும்" என்ற புத்தகங்களை எழுதிய கியாதிபெற்ற ஆசிரியர் அவருடைய நாட்டுமக்களின் தோற்றத்தை வர்ணிக்கிறார்.

ஆபட்ஸ்பரி—டார்ஸட்,
இங்கிலாந்து.

அன்பார்ந்த நண்ப,

வெளிச்சங்கள் மறுபடியும் பிரகாசிக்கின்றன. உண்மை அதுதான். அதை அலங்காரச் சொல்லாகவும் எடுத்துக்கொள்ளலாம். நாம் ஐந்து வருஷத்துக்கு மேலாக இருட்டை அனுபவித்தோம். இப்பொழுது வெளிச்சம் காணப்படுகிறது. நான் குதூஹலப்படவில்லை. ஆனால் நன்றி உள்ளவனாக இருக்கிறேன். இங்குள்ள அநேக வீடுகளில் விளக்குகள் மங்கலாகவே இருக்கும். மற்றவைகளில் வெளிச்சம் போய்விட்டது. நீங்கள் இங்கு அநேக வருஷங்கள் இருந்ததால் உங்களை எங்களுடன் ஒருவராகக் கருதினோம். நீங்கள் உங்கள் நாட்டிற்கு திரும்பியதை நாங்கள் விரும்பவில்லை. ஆனால் நீங்கள் சென்றது அதிருஷ்டம்தான். அதன்பின் ஆபத்துக்கள் ஏற்பட்டன. நீங்கள் கெட்ட தகவல்களைக் கேட்டு எங்களுடைய கதி என்னவென்று ஊகித்திருக்கலாம். மூனிக்குக்கு முந்தியும் பிந்தியும் நாம் சேர்ந்து யோசனை பண்ணி வந்தோமல்லவா. ஆகிலும் நாம் நினைத்ததைவிடவும் சொல்லக்கூடாத படியும் கெடுதல் நேரிட்டது. நீங்கள் மறுபடி லண்டனுக்கு வந்தால் நாம் சந்திக்கும் இடங்களைக் காணமுடியாது. நீங்கள் வியப்படையவேண்டியதுதான். அதைப்பற்றி நீங்கள் ஒன்றும் சொல்ல முடியாது. நீங்கள் அறிந்த கோபுரங்களும், முக்கிய ஸ்தலங்களும, ஒன்றன்பின் ஒன்றாக விழுந்து கொண்டிருக்கும்பொழுது நாங்கள் எவ்விதம் இரவையும் பகலையும் கழித்தோம் என்று கேட்டு ஆச்சரியப்படுவீர். எனக்கு அந்தத் தோற்றங்கள் கனவு பீதிகள் போலாகிவிட்டன. விவரங்கள் மறந்து போய்விட்டன. வெளிச்சங்கள் போடப்படும் பொழுது அவைகள் நம்பத்தகாததுபோலும் தோன்றுகின்றன.

அது ஒரு நீண்ட இரவுகாலம். ஆனால் தனவானை ஞாபகப்படுத்திக்கொள்ளுங்கள். ஸாம் வெல்லார், மேரி லாயிட், சார்லி சாப்ளின் முதலோருடன் நெருங்கிய பாந்தவ்யமுள்ள அவனை நீர் நேசித்தீரல்லவா. நானும் அவனை நன்கு அறிவேன். அவன் எப்படி அந்த சிரமங்களை அனுபவிக்க தைரியமும், பொருமையும் பெற்றிருந்தானென்று எனக்கு விளங்கவில்லை. அவனுக்குப் பேரில்லை. ஆகிலும் அவன் வீரர்களின் தீரத்தையும் மங்கும்படி செய்துவிட்டான். கிராய்டனிலுள்ள என்னுடைய இடம் உங்களுக்கு ஞாபகம் வருகிறதா? அதைச் சுற்றித்தான் பறக்கும் வெடிகுண்டுகள் விழுந்தன. ஜூன் மாதம் ஒரு நாள் நடு இரவில் முதல் குண்டு தோன்றிற்று. அவைகளை தேடுவிளக்கு மூலம் பார்க்கும்பொழுது அவைகள் ஸ்வர்ணமயமாக இருந்தன. அவை என்னவென்று எனக்குப் புரியவில்லை. அதன்பின் 12-மணி நேரம் நாங்கள் மாடிப்படியின் கீழ் உட்கார்ந்திருந்தோம். கனமான குண்டுவீச்சு உள்ள முன்னணியிலிருப்பதுபோல் தோன்றிற்று. சமீபத்திலும் தூரத்திலும் வெடிகுண்டுகளின் சப்தம் எங்களை சதாகாலமும் ஜாக்கிரதையாக இருக்கும்படி செய்துவந்தன. இரண்டாவது நாள் இரவில் என்னுடைய ஸ்தலத்தில் குண்டுகள் விழுந்தன. என்னுடைய நண்பர்களில் சிலர் இறந்துவிட்டார்கள். இப்பொழுது அது தூளாகிவிட்டது. ஆகிலும் அப்பொழுதும்கூட ஹைஸ்ட்ரிட்டில் உங்களுக்கு தேநீர் கிடைத்திருக்கும். சப்தத்துடன் குண்டு செல்லும்பொழுது மோட்டார் வண்டிகள் நின்றுவிடும். அந்த குண்டு வெடித்து கரும் புகை

கிளம்பிய உடன் பஸ்ஸுகள் சாத்யமானல் புறப்பட்டுவிடும். லண்டனுக்கு குறுக்கே பிரயாணம் செய்தால் அநேக சம்பவங்களைப் பார்க்கலாம். ஆகிலும் நகரம் சுறுசுறுப்பாக இருந்தது. ஏற்கனவே நடந்ததுடன் மூன்று மாதங்கள் வரையில் இரவு பகலாக இது ஓயவில்லை.

ஆனல் பிளிமத், ஸதாம்டன், லிவர்பூல், கிளாஸ்கோ, பெல்பாஸ்ட், மான்செஸ்டர், பிரிஸ்டல், இன்னும் ஆயிரக்கணக்கான பட்டணங்கள், நகரங்கள், கிராமங்கள் முதலியவற்றைப் பற்றிச் சொல்ல மறந்துவிட்டேன். அவைகளில் அநேகம் இடங்கள் பழைய நாட்களில் ஐபர்ஸ் இருந்ததுபோல் காணப்படுகின்றன. ஆகிலும் இந்தப் பாழ்கள் மற்ற தீங்குகளை வெளிப்படுத்தவில்லை. மிகவும் கெடுதலாக இருந்தது சித்தத்தில்தான். சந்தேகமும் இடைவிடாத கண்காணிப்பும்தான் காணப்பட்டன. நாம் ஒவ்வொரு அபாயமும் எவ்விதமான தென்றும் அவற்றை சமாளிப்பது எவ்விதம் என்றும் வெளியிடமுடியாது. எல்லாவற்றையும் எவ்விதம் சமாளித்தோம் என்பது மனித உணர்ச்சியின் அற்புதமாக இருக்கவேண்டும். சிக்ஷை விதிக்கும் நாளில் ஒருவனுடைய மனதில் என்ன தோற்றங்கள் உண்டாகுமென்பதை எவ்விதம் சுருக்கமாகச் சொல்லுவது.

ஸர்ரேயிலுள்ள ஒரு உத்தியான வனத்தையும், அங்குள்ள மிகவும் அழகான வசந்தகால புஷ்பங்களையும், அமைதியையும் நான் ஞாபகப்படுத்துகிறேன். அப்பொழுது 1940-ம் வருஷம் மே மாதம். அங்கிருந்தவர்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டார்கள். ஆனல் ஒன்றும் சொல்லிக்கொள்ளவில்லை. பீரங்கிகள் சப்திப்பதை நாங்கள் கேட்டோம். எங்களுடைய சிற்றுண்டி மேஜைக்கு வெகு சமீபத்திலா? அப்பொழுது நாங்கள் டங்கர்க்கைப் பற்றிக் கேள்விப்படவில்லை. வெகு சீக்கிரத்தில் அந்தத் தகவல் வந்தது. பிரான்ஸ் விழுந்து கொண்டிருந்தது. குறளிவித்தையினல்போல ஹிட்லர் ஐரோப்பாவை ஆக்கிரமித்துவிட்டான். இந்தத் தீவுகள் சிறியவைகள். அந்த நாளில் மாட்ரிட் வியாக்யானி சொன்னது ஞாபகம் வருகிறது. "இங்கிலாந்து, சுற்றி வளைக்கப்பட்டது." நான் தேசப்படத்தை பரிசீலனை செய்தேன். இங்கிலாந்து அப்படித்தான் இருந்தது. பிரான்ஸ் சரணுகதி செய்தபொழுது இதாலியக்கடற்படை நமக்கும் சூயஸுக்கும் மத்தியிலிருந்தது. ஹிட்லரின் நீர்மூழ்கிகள் மேற்கிலிருந்தன. அவனுடைய வெடி விமானங்களும், படையெடுப்புப் படைகளும் கடல் தாண்டி சமீபத்திலிருந்தன. இங்கிலிஷ் சரித்திரத்துக்கு முற்றுப்புள்ளி இல்லாதபோதிலும் ஒரு கலக்கம் ஏற்படுமென்று தோன்றிற்று.

நாம் எதிரிகளின் எந்த ஷரத்துக்களை ஒப்புக்கொள்ளுவதென்று நினைத்தோம் என்று உலகம் எதிர் பார்த்திருந்தது. ஆகிலும் அந்த நாளில் ஒருவரும் அதைப்பற்றி கவலைப்படவில்லை. முன்போல வேலையைச் செய்வதைத் தவிர வேறு ஒன்றுமில்லையென்று ஒவ்வொருவரும் நினைத்தார்கள். எங்கே செல்லவேண்டுமென்றும், எவ்விதம் செல்லவேண்டும் என்றும் எங்களுக்குத் தெரியாது. நாங்களும் கேட்கவில்லை. பிளாண்டர்ஸில் நம்முடைய டாங்கிகளும், பீரங்கிகளும் சிதறிக் கிடந்தபொழுது நாம் கேட்டும் பிரயோஜனமில்லை. ஒவ்வொரு சாயங்காலமும் குடியானவர்கள் கூடும் ஸ்தலங்களுக்குக் கையில் துப்பாக்கிகளுடன் சென்றதை நான் கண்ணுற்றேன். அடுத்தபடியாக என்ன நேரிடுமென்று நாங்கள் கவனித்து வந்தோம். அதன்பின்தான் நம்முடைய ஜனங்களைப் பற்றி ரிப்பன்டிராப்பும் மற்றவர்களும் கொண்ட தவருன அபிப்பிராயம் வெளிப்பட்டது. ஹிட்லருடன் போரை நடத்துவதைத் தவிர வேறு வழியில்லையென்று மிட்டாய் வியாபாரம் செய்யும் கிழவியும்கூட கண்டுகொண்டாள். அவளுக்கும் அபாரமான நம்பிக்கை இருந்தது. இப்பொழுது மறுபடியும் வெளிச்சம் தோன்றிவிட்டது. என்ன அற்புதம்.

உண்மையைச் சொல்லப்போனல் எனக்கு ஒன்றும் விளங்கவில்லை. எனக்கே ஆச்சரியமாக இருக்கிறது. லண்டன் தீப்பற்றி எரிந்தபொழுது ஒரு சில நூற்றுக்கணக்கான தேர்ந்தெடுக்கப்பட்ட வாலிபர்கள்தான் விமானப்போரை நடத்தி இங்கிலாந்தைக் காப்பாற்றினார்கள். இதே சமயத்தில் அவர்கள் அமெரிக்காவுக்கும் ருஷ்யாவுக்கும் அவகாசத்தை அளித்தார்கள். இந்த சிறு கோஷ்டியை சர்வ தேசங்களும பாராட்டவேண்டும். அவர்கள் ஐரோப்பாவைத் தாண்டிச்செல்ல முயன்ற நாஸிகளின் முன்னேற்றத்தை முறியடித்து சரித்திரத்தின் போக்கையும் மாற்றிவிட்டார்கள். அவர்கள் இல்லாவிடில் என்ன நேரிட்டிருக்குமென்று நீங்கள் யோஜித்துப்பாருங்கள். ஆகாயத்தில் பீரங்கி குண்டுகள் கர்ஜித்தன. எதிரியின் விமானங்கள் மேகங்களின் வழியாக சுட்டுவீழ்த்தப்பட்டன. அதன்பின் நீலவர்ணமுள்ள வானத்தில் வெண்மை நிறமுள்ள ஸ்பிட்பையர்கள் எதிரி விமானங்களைத் துறத்தியடித்தன. 1588-ம் வருஷத்தில் ஸ்பானிஷ் கப்பற்படை டிரபால்கர் போரில் துரத்தியடிக்கப்பட்டது. அது மறுபடியும் நிகழ்ந்தது. ஆனல் இப்பொழுது நமது விமானங்கள் ஆகாயமளாவி வெகுதூரம் சென்றன.

கடற்கரையிலும் நாமும் உன்னுடைய தகப்பனும் கிரிக்கெட் விளையாடின இடம் ஞாபகம் வருகிறதா? அந்த இடத்தில் நான்கு வருஷங்களாகச் சுரங்க வெடிகள் பாவப் பட்டிருக்கின்றன. கடற்கரைக்குப் போகும் வழியில் எஃகு சாரங்களும், டாங்கிப் பொறி களும், முள்ளுக்கம்பியும் அமைக்கப்பட்டிருந்தன. கடற்கரையில் நான்கு வருஷங்களாக சாமான்களும் பறவைகளும் குவிந்து இருந்தன.

1940-ம் வருஷம் ஜூன் மாதத்தில் நாம் படையெடுப்பை எதிர்பார்த்து நின்றோம். அங்கு இரவில் சந்திரனும், சாலைகளும், பருவகாலமும் என்ன செய்துவிடுமோவென்று கவனித்துவந்தோம். ஒவ்வொரு தடவையும் ஏன் ஒன்றும் நடைபெறவில்லையென்று நாங்கள் ஆச்சரியப்பட்டோம். எங்களுக்கு அதற்கு காரணம் கபடமாகத் தெரியும். ஹாமர்ஸ்மித்தி லிருந்து போர்ட்லாண்ட் வரைக்கும், கோல்டர்ஸ் கிரீனிலிருந்து ஆர்போர்ட்னஸ் வரைக் கும் உள்ள இடத்தில் ஆகாயத்தில் நாம் வெற்றிபெற்றோம். அங்கு நாங்கள் வெகு ருசிகர மான இரவுகளைக் கழித்தோம். அவைகள் சந்தேகப்படக்கூடியதாக இருந்தன. பிரிஸ்டல், வேல்ஸ், வடக்கு இங்கிலாந்துக்குச் செல்லும் நாஸி விமானங்கள் ஆகாயத்தில் கூட்டம் கூட்ட மாக சப்தமிட்டுச் சென்றன. ஆகாயத்தில் காணப்பட்ட வெளிச்சங்கள் வெகு அழகாக இருந்தன. ஆனால் பயங்கரமானவை. பீரங்கிக் குண்டுகள் நக்ஷத்திரங்களுக்கு மத்தியில் ஆரெஞ்சு வர்ணத்துடன் வெடித்தன. தேடு விளக்குகள் ஜ்வலித்தன. ஒரு சமயத்தில் ஒரு வெடி விமானம் தீப்பற்றி விழுந்துகொண்டிருந்தது. என்னுடைய குடிசை தூக்கி எறியப் பட்டுவிட்டது. மலையிலிருந்த பூஞ்செடிகள் தீப்பற்றி எறிந்தன. ஆகிலும் அந்த நாசம் எவ்விதம் என்று அறியமுடியாது. ஊகித்துத்தான் சொல்லலாம். ஆனால் தவறான அபிப்பிராயங்கள்தான் தோன்றும்.

இப்பொழுது பிரகாசமான பகல் வெளிச்சம் வந்துவிட்டது.

நான் அன்று வேமத்துக்குச் சென்றிருந்தேன். என்னை வரவேற்றார்கள். அதிலுள்ள கடற்கரையும் விளையாட்டு ஸ்தலமும் வெகு நாட்களாக உபயோகப்படுத்தப்படவில்லை. லெவியாதனும்கூட அந்தத் தடங்கல்களை சமாளித்திருக்கமுடியாது. அந்த உல்லாச ஸ்தலத்திலிருந்து உல்லாசம் போய்விட்டதாகத் தோன்றிற்று. அது ஜீவனற்று கால்வாயை நோக்கிக்கொண்டிருந்தது. அங்கு மறுபடியும் சுறுசுறுப்பு ஏற்பட்டுவிட்டது. கடலில் அநேகர்கள் நீந்திக்கொண்டிருந்தார்கள். இதை நான் நம்பக்கூடவில்லை.

மற்றொரு படையெடுப்புக்காக துறைமுகத்தில் அமெரிக்கப் படகுகள் தயாராக இருந்ததைப் பார்த்தபின் மறுபடியும் கப்பலோட்டுவதை அறிந்துகொள்ளவேண்டுமென்று எனக்கு ஆவலுண்டாகிற்று. மூன்றாம் ஜார்ஜுக்குத் தெரிந்த பழைய கப்பல் துறைகளில் வேலை செய்துகொண்டிருந்தாலும் சரி, நகரத்தில் இங்குமங்கும் திரிந்தாலும் சரி, எனக்குப் பக்கத்தில் சாராயக்கடையில் அவர்கள் நின்றுகொண்டிருந்தாலும் சரி, அமெரிக்கர்களை நமது ஜாதியாரென்று எல்லோரும் மதித்தார்கள். இது சரியான முறைதான். வேமத் இதைவிட ரம்யமாக ஒருபொழுதும் இருந்ததில்லை. அதில் சுறுசுறுப்பு ஏற்பட்டதுடன் அது உல்லாச மாகவும் இருந்தது.

ஹிட்லர் முட்டாள்தனமாக ருஷ்யாவைத் தாக்குமுன், படையெடுப்புக்கு லாயக்கு உள்ளதும், மிகவும் அபாயம் பொருந்தியதும் என்று யுத்த ஆபீஸ் நினைத்த இந்தத் தனிமை யான கடற்கரைக்கு நான் மறுபடியும் சென்றேன். நமது ஸாப்பர்கள் சுரங்க வெடிகளை அழித்துவருகிறார்கள். ஆகையால் அங்கு வெகு காலம் வரையில் கிரிக்கெட் விளையாட முடியாது. பிறகு வெகு தூரத்தில் கடற்கரை ஓரமாக ஒரு வாலிபமுள்ள ஸ்திரீ தள்ளு வண்டியைத் தள்ளிக்கொண்டுவந்தாள். அங்கு கண்ட முதல் ஸ்திரீ அவள்தான். அங்கிருந்து சமீப தூரத்தில் நான் வயது முதிர்ந்த போர்மனைப் பார்த்தேன். சேனைகளின் போக்கு வரத்தினால் சீர்கெட்ட ஒரு ரஸ்தாவை அவர் பழுதுபார்ப்பதை மேல்பார்த்துவந்தார். அவருடைய மீசை அமைப்பைக்கண்டு "நீங்கள் சென்ற யுத்தத்தில் ஈடுபட்டிருந்தீர் அல்லவா என்று" அவரிடம் சொன்னேன்.

"எனக்கு மான்ஸில் காயம்பட்டது. ஆகிலும் யுத்தத்தில் நானே வெற்றிபெற்றேன்" என்று அவர் சொன்னார்.

"நீங்கள் அநேக வருஷங்களுக்குமுன் தியாகம் செய்தீர்களா? என்றேன். "அவ்வித மில்லை. டங்கர்க்கில் நான் இரண்டு குமாரர்களை இழந்தேன். என்னுடைய மூன்றாவது குமாரன் திரும்பி வந்துவிட்டான். ஆனால் அவன் இனிமேல் நடக்கமுடியாது" என்று அவர் அமைதியுடன் சொன்னார். அந்த வயது முதிர்ந்தவருக்கு நான் என்ன சொல்லியிருக்க வேண்டுமென்று நீங்கள் சொல்லுங்கள்.

# ஜெர்மனியின் ராணுவ கிரஹணம்.

## உயர்வான திட்டத்தினுலும், சேனுதிபதிகளாலும், போர் திறமையினுலும் முறியடிக்கப்பட்டது.

(பிரிகேடியர் *J. G.* ஸ்மித்.)

யுத்தத்தில் வெற்றிபெருவதற்கு குறிப்பிட்ட இடத்தில் ஏராளமான மனித பலத்தையும், தளவாடத்தையும் குவிப்பதுதான் யுத்ததந்திரம். இரண்டாவது உலக யுத்தத்தை ஜெர்மன் ராணுவ அதிகாரிகள் ஏராளமான மனித பலமுள்ள சௌகரியத்துடன் துவக்கினுர்கள். அவர்களிடம் போதுமான ஆயுதங்களிருந்தபோதிலும் அவர்கள் வெற்றிபெற முடியவில்லை. ஜெர்மனி அருவருப்புடன் மதித்துவந்த நேசதேசத்தலைவர்களிடமுள்ள சேனைகள் ஜெர்மன் பூமிக்குள்ளேயே வெற்றிபெரும் அவமானத்தை ஜெர்மனி அனுபவிக்கவேண்டியதாகிவிட்டது.

இறுதி வெற்றிக்கு படை மிகுதி அவசியமென்றுலும் சங்கிகையைவிட வெற்றிகரமான சேனுதிபத்யம் வேண்டுமென்பதை தற்போதிய யுத்தம் வெளிப்படுத்திவிட்டது. அதாவது: (1) குறுப்பிட்ட காலத்திலும் இடத்திலும் படைகளைக் குவிக்கும் சக்தி. (2) போர்முனையில் அந்தப்படையை திறம்பட உபயோகிப்பது. (3) எப்பொழுது துணிவுகரமான நடவடிக்கைகளை மேற்கொள்ளலாமென்ற அறிவு. (4) எங்கு, எப்பொழுது விட்டுக்கொடுப்பது.

பிரிடிஷ் தலைவர்கள் மிகவும் கெடுதலான சகுனங்களுடன் போரைத்துவக்கினுர்கள். போரின் ஆரம்பகாலத்தில் அவர்கள் சகலவிதமான இடுக்கண்களுடன் போரை நடத்தி வந்தார்கள். போர்முனையிலும், போர்முனைக்கு அப்பாலிலும் அவர்கள் காட்டிய முன் யோசனையும் ஜாக்கிரதையான திட்டமும் அவர்களுக்குக்கிடைத்திருக்கும் சௌகரியமான நிலமைக்கு அஸ்திவாரம் போட்டன.

யுத்தத்தின் ஒவ்வொரு கட்டத்திலும், அதாவது.—திட்டங்களை நிறுவுவதிலும், இழிவான படைகளைக்கொண்டு, போர்புரிவதிலும், அதன்பின் சமமான படைபலத்துடன் போரை நடத்துவதிலும், இறுதியில் மிகுதியான படைகளைக்கொண்டு போர்புரிவதிலும், நேசதேச சேனுதிபதிகள் ஜெர்மானியர்களைவிட உயர்வானவர்கள் என்று ருஜுச்செய்திருக்கிறுர்கள்.

ஜெர்மன் சேனுதிபதிகள் சாதாரணமானவர்கள் என்று நான் சொல்ல முயலவில்லை. அவ்விதம் சொன்னுல் நேசதேச சேனுதிபதிகளுக்கு அதன் மூலம் அதிக கௌரவம் கிடைக்காது. இரண்டு யுத்தங்களுக்கும் நடுவில் ஏற்படும் ராஜியபுரக்ஷியினுல் ஜெர்மன் அதிகாரிகள் 1939-ம் வருடத்திற்குள் உலகத்திலேயே காணப்படாத ஒரு மிகவும் சக்திவாய்ந்த உயர்தரப்பயிற்சிபெற்ற யுத்த யந்திரத்தைத் தயாரித்துவிட்டார்கள். அவைகள் தேவைப்படுவதற்கு நான்கு வருடங்களுக்கு முன்னதாகவே ஹிட்லர் அவற்றை உபயோகப்படுத்தினுன் என்று வைத்துக்கொண்டாலும், அந்த யுத்த யந்திரம் சங்கியையில் மிகுதியாக உள்ளதுதான். ஆகிலும் டங்கர்க்குக்குப்பின் ஜெர்மனி பூராப்படைகளையும் பிரிடனைப் படையெடுப்பதில் ஈடுபடுத்தத் துணியவில்லை. ஆனுல் நன்முகப் பயிற்சிபெற்று முஸ்தீப்புகளுள்ள ஒரு டிவிஷன் உள்ள நாம், நம்மிடமுள்ள டாங்கிகளை மத்திய கிழக்குக்கு அனுப்பத் துணிந்தோம்.

நமது தலைவர்கள் மத்தியதரைக்கடல் போரின் முக்யத்துவத்தை நன்கு மதித்துவிட்டார்கள். ஜெர்மன் ராணுவ அதிகாரிகள் எகிப்தைப்பிடிக்கும் வேலையை முஸோலினியிடம் ஒப்படைத்தார்கள். இதுதான் அவர்கள் இந்த யுத்தத்தில் செய்த பெரும் தவறு.

1941-ம் வருடம் ஜூன் மாதத்தில் ருஷ்யாவை ஜெர்மனி படையெடுத்தது, மற்றெரு ராணுவப்பிழையாகும். இந்த நடவடிக்கைகளுக்கு ஜெர்மன் ராணுவ அதிகாரிகளைத்தவிர ஹிட்லர்தான் அதிகமான ஜவாப்தாரி. ருஷ்யப்போரை நடத்துவதிலும் ஜெர்மன் சேனுதிபதிகள் அநேக தவறுதல்களைச் செய்தார்கள். ஜெர்மன் சேனைகள் கவசம் பூண்ட வாகனங்களின் உதவிகொண்டு போர்புரியக்கூடியவர்கள். இந்த முறையில்தான் ஜெர்மன் சேனை 1941-ம் வருஷம் வேனிர்காலத்தில் ருஷ்ய சேனையை பலமாகத்தாக்கி வந்தது.

ஆகிலும், ஒன்றுபட்ட பான்ஸர் படைத்தாக்குதலின் மூலம் ஆரம்பத்தில் மகத்தான வெற்றிகளைப்பெற்றபின் ஜெர்மனி ஆயிரம் மைல்கள் கொண்ட போர்முனையில் துருப்புகளை பரவலாகவைத்து ருஷ்யாவின் விசாலமான பாகங்களைப் பிடிக்க முயன்றது. அளவற்ற

மனித பலமுள்ள ருஷ்யர்கள் கையில் இதன்மூலம் ஜெர்மனி மாட்டிக்கொண்டது. கடைசியில் கிழக்குப்போர்முனையில் பெரும் நாசத்துடன் ஜெர்மனி பின்வாங்க வேண்டியதாக ஆயிற்று.

1942-ம் வருஷ மத்தியில் ஜெர்மனியிடமிருந்த உயர்வான படைகளை குறிப்பிட்ட முனைகளில் குவித்து வைப்பது என்ற கொள்கையை ஜெர்மன் ராணுவ அதிகாரிகள புறக் கணித்து விட்டதாகத் தெளிவுபட்டது. அதற்குப்பதிலாக மேற்கிலுள்ள ஜெர்மன் படைகள் ஐரோப்பா பூராவிலும் பரவியிருந்தன. ஆனால் பிரிடனின் சேனாதிபதிகள் அவர்களிட முள்ள குறைவான ஐச்வர்யங்களை உபயோகமுள்ள வகையில் பயன்படுத்தி வந்தார் கள். 1942-ம் வருஷம் மாரிகாலத்தில் அவர்கள் மத்தியதரைக்கடல் போர் பகுதியில் உயர் வான விமானப்படையையும், தரைப்படைகளையும் குவித்து விட்டார்கள்.

இதுமட்டும் போதவில்லை. ரொம்மலிடம் ஏராளமான படைகளிருந்தன. அவர் நம்பிக் கையுடனும், வெற்றி இருமாப்புடனும் இருந்தார். ஆனால் ஆறுமாதத்திற்கு சிறிது அதிகமான காலத்திற்குள் அவனுடைய சேனை பூராவாக துறத்தியடிக்கப்பட்டது. ஈஸன்ஹவரின் உயர்தர சேனாதிபத்யத்துக்குட்பட்ட அலெக்ஸாண்டரும், மாண்ட்காமரியும், டெடரும் ஒவ்வொரு இடத்திலும் ஜெர்மன் ஜெனரல்களைப் போரில் முறியடித்து விட்டார்கள். உண்மையாக, இந்த யுத்தத்தில் பிரிடிஷ் கமாண்டர்களான அலெக்ஸாண்டரையும், மாண்ட் காமரியையும் போல் புத்திசாமர்த்தியமும், யோசனையும் உள்ள ஜெனரல்கள் ஜெர்மனியில் காணப்படவில்லை.

---

## டங்கர்க்குக்கும், ஜெர்மனிக்கும் போகும் மார்க்கம்.

### மூன்று வருஷ பிரயாசையின் ரகசியங்கள்.

(லெப்டினன்ட் கர்னல் நைஜல் பால்கின்.)

டங்கர்க்கில் பின்வாங்கின நாள் முதற்கொண்டு பிரிடிஷார்கள் அங்கு திரும்பிச் செல்ல வும், சரித்திரத்திலேயே மிகவும் மகத்தான ராணுவ வெற்றிக்காக ஆயுதங்களையும், திட்டங் களையும் தயாரிக்கவும் பிரிடன் ஏற்பாடு செய்தது. சக்திவாய்ந்த நாடுகள் அவர்களுடன் சேருவார்கள் என்று பிரிடன் அப்பொழுது நினைக்கவில்லை. ஆகிலும் அது திட்டங்களை நிறுவிவந்தது.

சோல்ஜர்கள் அவர்களுடைய அபிப்ராயங்களையும், ஆயுதங்களையும் நவீனமுறையில் திரு த்தியமைத்துக்கொண்டார்கள். எதிர்பார்க்கப்படாதவர்கள் நெருப்பிற்குள்ளும், நிலத்திற் குள்ளும் மூழ்கிக்கிடந்தார்கள். விஞ்ஞான சாஸ்திரிகளும், ராணுவத்தைச் சேராத கணித நிபுணர்களும் புதிய முஸ்திப்புகளைத் தயாரித்தார்கள்.

மூன்று வருஷங்களாக அவர்கள் திட்டம் போட்டார்கள். இப்பொழுது அதன் பலனை நேசதேசத்தார்கள் அடைந்துவிட்டார்கள். அபிப்ராயங்கள் ஒன்று திரட்டப்பட்டன. திட் டங்களில் எல்லோரும் கலந்துகொண்டார்கள். இந்த மூன்று வருஷ பிரயத்தனத்தால்தான் படையெடுப்பு சாத்தியமாயிற்று. அதனால்தான் வெற்றி நிச்சயப்பட்டது.

பிரான்ஸ் வீழ்ச்சிபெற்ற இரண்டுநாளைக்குப்பின் பிரதம மந்திரியான வின்ஸ்டன் சர்ச்சில் பிரிடிஷ் உயர்தர அதிகாரிகளிடம் ஒரு தஸ்தாவேஜியை சமர்ப்பித்தார். அதில் முக்கியமாக தைரியமாகவும், வியாக்யானமன்னியிலும் பிரிடனின் உண்மையான நிலைமை விவரிக்கப்பட் டிருந்தது. ஆனால் அத்துடன் வாசகத்திலும், அர்த்தபுஷ்டியிலும் சிறந்ததான ஒரு குறிப் பும் சேர்க்கப்பட்டிருந்தது. அது பின்வருமாறு.—“இந்த யுத்தத்தில் வெற்றிபெற நாம் எவ்விதம் பிரயாசைப்படவேண்டும் என்பதைப்பற்றி உங்களுடைய அபிப்ராயத்தை ஒரு வாரத்தில் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன்.”

இந்த விருத்தாந்தம் உண்மையா இல்லையா என்று எனக்குத் தெரியாது. அது உண்மை யாகத்தான் இருக்கவேண்டும். ஏனெனில் பிரதம மந்திரியின் குறிப்பு நம்பிக்கையை ஊட்டக் கூடிய செய்திமட்டும் அல்ல. பிரான்ஸின் வீழ்ச்சியினால் தோன்றியுள்ள உண்மையான பெரிய பிரச்னையை அது எடுத்துக்காட்டிற்று.

900 வருஷங்களாக பிரிடன் படையெடுப்பு அபாயத்தைத் தவிர்த்ததுபோல இப்பொ ழுதும் ஜெர்மன் படையெடுப்பை தடுத்துவிடலாம். அவ்விதம் செய்தாலும் அது வெற்றி யாக ஆகாது. 400 லெட்சம் ஜனங்களுள்ள ஒரு தேசம் நண்பர்களும், அடிவைக்கும் இடமும்

இல்லாமல் ஒரு கண்டத்தையே திருப்பிப் பிடிக்க வழிதேடவேண்டும். எப்பொழுதும்போல இப்பொழுதும் பிரிட்டிஷ் கால்வாய் பிரிடனுக்கு ஒரு பெரிய நேசநாடாக இருந்தது. கால்வாயும் எதிரிபோலிருந்து வெற்றி பெறுவதற்குமுன் அதையும் திரும்பிப்பிடிக்கும் அவசியமும் ஏற்படலாம். இந்தப் பிரச்னை எவ்வளவுக்கெவ்வளவு சீக்கிரமாகத் தீர்க்கிறோமோ அவ்வளவுக்கவ்வளவு நல்லது. சிறிதுகாலம் வரையில் இந்தத் திட்டங்கள் விவகாரத்துக்குரியதாகயிருக்காது.

ஆகையால் அநேக அம்சங்களில் 1944-ம்௵ ஜூன்௴ ஆரம்பமான படையெடுப்புக்கு நான்கு வருஷங்களாக திட்டங்கள் போடப்பட்டது. திட்டம் நிறுவப்பட்ட சந்தர்ப்பத்திற்கும், திட்டங்கள் இறுதியில் நிறைவேற்றப்பட்ட சந்நிவேசத்திற்கும் அதிக வித்யாசம் உண்டு.

பிரிடிஷ், கனடியப் படைகளைத் தவிர அமெரிக்கப்படையும் இறங்கியது. ரோமும் தெற்கு இத்தாலியும் நேசதேச வசமாயின. குதூகலம் அடைந்த ஒரு பெரிய ருஷ்யசேனை கிழக்குப்பக்கத்தில் 200 ஜெர்மன் டிவிஷன்களைத் தாக்கிவந்தது. இந்த நடவடிக்கைகளை எல்லாம் பிரிடன் 1940-ம்௵த்தில் எதிர்பார்க்கவில்லை. ஆகிலும் முக்கிய அம்சங்களில் நடவடிக்கைகள் ஒரே மாதிரியானதுதான். அநேக வருஷங்களாக தற்காப்புகளைத் தயாரித்திருந்த எதிரியுள்ள பிரான்ஸின் வடக்குக் கடற்கரையில் நமது படைகள் இறக்கப்பட்டன.

ஆரம்பத்திலிருந்தே யுத்தத்தில் வெற்றி பெறுவதற்கு பிரான்ஸுக்கு சுருக்கமான, பழமையான, மிகவும் சிரமசாத்யமான, மார்க்கமான கால்வாயின் குறுக்கே செல்லவேண்டும் என்பதை பிரிடன் உணர்ந்தது.

இந்த விஷயம் எதிரிக்கும் தெரிந்ததுதான். இவை உலகமும் அறியும். யுத்த சரித்திரத்திலேயே படையெடுப்பை எதிர்பார்த்து போர் புரியும் இரு நாடுகளும் இவ்வளவு ஆயத்தங்கள் ஒருபொழுதும் செய்ததில்லை.

ஆகையால் 1943-ம்௵ முடிவில் நேசதேசப் படைகளின் உயர்தர கமாண்டராக ஜெனரல் ஈஸன்ஹவர் இங்கிலாந்தில் அவருடைய தலைமைக்காரியாலயத்தை அமைத்தபொழுது அவருக்கு பிரான்ஸின் வடக்குக் கடற்கரையில் படைகளை இறக்குவதற்காக மூன்றரை வருஷங்களாக திட்டம்போட்டு ஒத்திகை செய்த நடவடிக்கைகளின் லாபங்கள் அவருக்குக் கிடைத்தன.

நாம் திட்டம் போடுவதைப்பற்றி வெகு அழகாகப் பேசலாம். அநேகர்கள் பெரிய தேசப் படங்களைப்பற்றி யோசித்துவருகிறார்கள். சிலர் ரகசியமான பைல்களைப் படித்துவருகிறார்கள். ஆனால் அந்தப் பைல்களில் எவ்விதமான தகவல்கள் கிடைத்தன. திட்டம்போடுகிறவர்களும், பரீக்ஷை செய்கிறவர்களும் அவருடைய காலத்தை எவ்விதம் கழித்துவந்தார்கள்.

முதன்முதலாக பிரதேச ஆராய்ச்சியும், எதிரியின் தற்காப்பு ஆராய்ச்சியும் நடைபெற்றது. திட்டத்தின் ஒவ்வொரு கட்டத்திலும் இதுதான் முக்கிய அம்சம். ஒருபுறத்தில் தரை அமைப்பு, போக்குவரத்துகள், இயற்கையான செயற்கையான தற்காப்புகள் முதலியவைகள் படையெடுப்புக்கான திட்டங்களையும் தாக்கும் பிரதேசங்களையும் தீர்மானம் செய்ய முக்கியமுள்ளவை.

ஜூலியஸ் ஸீஸரின் நாட்கள்முதல் இதுவரையில் உண்டுபண்ணப்படாதவகையில் இந்த நடவடிக்கைகளுக்காக பிரான்ஸைப்பற்றிய ஏராளமான தேசப்படங்கள் தயாரிக்கப்பட்டன. பிரிடனில் உள்ள தேசப்படம் அச்சிடும் ஒவ்வொரு கம்பெனியும் அவைகளை உற்பத்தி செய்வதில் ஈடுபடுத்தப்பட்டது. பத்திரத்தை உத்தேசித்து தேசப்படங்கள் ஆயிரக்கணக்கான துணுக்குகளாக தயாரிக்கப்பட்டன. அவ்விதம் செய்ததினால் சந்நிவேசங்கள் சரியாக ஒருவருக்கும் புரிபடாததினால் அதன் பாகங்கள் புதிர்போல இருந்தன. இறுதியாக அமைக்கப்பட்ட படங்கள் மகத்தான அளவில் மரங்கள் உள்பட காண்பிக்கும் மாதிரிகளைக் கொண்டு தயாரிக்கப்பட்டன. அச்சிடப்பட்ட பெரிய தேசப்படங்கள் 70 கஜத்துக்கு 1 அங்குல வீத அளவுக்குத் தயாரிக்கப்பட்டன.

சாதாரணமாக ஆராய்ச்சி செய்யமுடியாத ஒரு தேசத்தைப்பற்றி மிகவும் நுட்பமான தகவல்களை அறிவதென்பது ஒரு மகத்தான காரியமாகும். அதற்காக யுத்தத்துக்கு முன்னிருந்த தேசப்படங்களும், ஒளிப்படங்களும் ஏஜண்டுகளிடமிருந்து தகவல்களும், வழிமறிக்கப்பட்ட அல்லது கைவசப்படுத்தப்பட்ட எதிரியின் தளவாடங்களைப் பற்றிய தகவல்களும் சிரமப்பட்டு தொகுக்கப்படவேண்டும்.

ஆகாயத்திலிருந்து எடுக்கப்பட்ட ஒளிப்படங்கள் பேருதவி செய்தன.

தரையைப்பற்றிய தகவல்களை அறிவதென்பது தேசப்படங்களையும், மாதிரிப் படங்களையும் தயாரிப்பதுடன் நின்றுவிடாது. டாங்குகளும் மற்ற வாகனங்களும் எந்த இடத்தில் சுலபமாகச்செல்லும், எங்கு சுலபமாகச் செல்லாது என்பதை தீர்மானம் செய்ய அநேக இடங்களிலுள்ள மண்ணின் அமைப்பு அறியப்படவேண்டும். ஒரு கோஷ்டியார் ஒரு இரவில் கடற்கரையிலுள்ள மண்ணின் நிலைமையை அறிந்துகொள்ள ஒரு துணிவுகரமான சிறிய படையெடுப்பை மேற்கொண்டார்கள்.

சொந்த நாட்டின் பாகங்களைப்பற்றி அவர்களுக்குத் தெரிந்ததைவிட பிரான்ஸில் படைகள் இறங்கும் முன்னரே படையெடுக்கும் கடற்கரையிலும், அதைச் சுற்றிலுமுள்ள பிரதேசத்திலுமுள்ள அமைப்பைப்பற்றி ஆயிரக்கணக்கானவர்களுக்கு அதிக அறிவு ஏற்பட்டது என்பது உண்மையே.

அடுத்தபடியாக பிரிடனின் சேனையை திட்டப்படி அதற்கு அளித்த அலுவலைச் செய்வதற்காக அமைக்கப்படவேண்டியிருந்தது. சேனை உச்சிமுதல் உள்ளங்கால் வரையில் மூஸ்திப்புகளிலும், ஆயுதப்பெருக்கிலும், போக்குவரத்திலும், சப்ளை முறைகளிலும், இன்னும் மற்றவைகளிலும் நன்கு அமைக்கப்பட்டிருக்கவேண்டும்.

ஜெர்மன் படையெடுப்பைத் தடுக்க பிரிடனில் இருந்த சேனை ஐரோப்பாவை படையெடுக்கத் தகுந்ததாகயில்லை. அதைப் போர் புரியும்படி ஏவியிருந்தால் அவைகள் தங்கள் நாட்டிலேதான் அவ்விதம் போர்புரிந்திருக்கும். ரஸ்தாக்களும், இருப்புப்பாதைகளும், டெப்போக்களும், பழுதுபார்க்கும் சாலைகளும் சமீபத்தில் இருந்தன. சேனை பெரும்பாலும் தேசத்தின் உள்நாட்டு சப்ளை திட்டத்தை நம்பியிருக்கக்கூடும்.

அந்தச் சேனை அயல்நாட்டுக்குப் போகவேண்டியதாகயிருந்தால் அது தன்னடக்கம் உள்ளதாகவும், அதற்குவேண்டிய தேவைகளைத் தானே சப்ளை செய்துகொள்ளக் கூடியதாகவும் அது இருக்கவேண்டும். 1941-ம்வருடு இறுதியில் பிரிடிஷ் சேனையானது டங்கர்க்குக்குப்பின் அவசரமாக சேர்க்கப்பட்ட காலாட்படையையும், விமான எதிர்ப்பு தற்காப்புகளிலிருந்த பீரங்கிப் படையாளர்களையும் மறுபடியும் தேர்ந்தெடுத்தும், கலைத்தும், திருத்தி அமைத்தும், மறுபடி மூஸ்திப்புகளை வழங்கியும், மறுமுறை பயிற்சி அளித்தும், சமிக்ஞை செய்கிறவர்களாகவும், யந்திரவேலை நிபுணர்களாகவும், சாப்பர்ஸ்களாகவும், மோட்டார் ஓட்டுகிறவர்களாகவும் தயாரிக்கப்பட்டது. அந்தத் திட்டமானது சரித்திரத்திலேயே பிரமாதமான சேவை, சர்பராப் பிரச்னைகள் அடங்கியுள்ளது. குவார்டர் மாஸ்டர் ஜெனரலும் சேனையின் போக்குவரத்து இலாக்காவும் இந்தப் பிரச்னைகளை திறம்பட கவனித்துவந்தாலும் மனித பலமில்லாமல் அவர்கள் அதை பலப்படுத்த முடியாது.

அடுத்தபடியாக படையெடுப்புக்கு வேண்டிய ஆயுதங்களும், யுத்த தந்திரமும் தயாரிக்கப்படவேண்டும். முக்கியமாக விசேஷமான ஆயுதங்கள், வாகனங்கள், படகுகள் மூஸ்தீப்புகள், முறைகள் இவைகளைப்பற்றி திட்டங்கள் வகுத்து சாமான்கள் தயாரிக்கப்படவேண்டும்

டி-தினத்துக்கு முன்பு ஒரு சிறந்த கால்ப் விளையாடுகிறவர் பின்வருமாறு சொன்னார். "சங்கடங்களை நிவர்த்திக்க எந்த சேனையும் இவ்வளவு மூஸ்தீப்புகளுடன் சென்றதில்லை. எல்லாவிதமான படுகுழிகளையும் சிரமங்களையும் எதிர்பார்க்கவேண்டும். எதிரியிடம் இருப்பவைகளையும் அவனிடம் இருக்கக்கூடியவைகளையும் நாம் அறியவேண்டும்.

இந்த அம்சத்தில்தான் மிகவும் முக்கியமான முயற்சி செய்யப்பட்டது. இந்த வேலை பொதுஜனங்களுக்கு பகிரங்கப்படுத்தவில்லை. பகிரங்கமும் படுத்தப்படாது. உண்மையான முக்கியமான ஆராய்ச்சிகளையும், அபிவிருத்திகளையும் பற்றிய கதைகள் வெளியிடப்படுவதில்லை. அப்படி வெளியிட்டாலும் அவை ஒருவனுடைய செய்கையாகவும் இருக்காது. ஒரு பெரிய பிரச்னையைத் தீர்க்க திட்டம்போட்டு ஆராய்ச்சிசெய்வது ஒருவனுடைய தனிப்பட்ட முயற்சியாக இராது. அநேக துணுக்குகளும், துண்டுகளும் ஒன்றுசேர்க்கப்படவேண்டும்.

என் சம்பந்தப்பட்டமட்டில் இந்த அபிவிருத்திகளுக்குக் காரணமானவர்களைப்பற்றி நான் கவனம் செலுத்துவதில்லை. ஆனால் மத்தியிலுள்ளவர்களைப்பற்றித்தான் எனக்கு அதிக அக்கரை உண்டு. ஒரு சமயத்தில் ஆபீஸர்களும், விஞ்ஞான சாஸ்திரிகளும் கொண்ட ஒரு கோஷ்டி தீப்பிடித்து எரிந்துகொண்டிருந்த ஒரு தற்காப்புப் பெட்டியை கவனித்துக்கொண்டிருந்தார்கள்; திடீரென்று வெண்மை மயிரும், சாம்பல் வர்ணமான உடையும் உள்ள உயர

மான ஒருகிழவன் இதற்குள் உஷ்ண அளவு எவ்வளவு என்று பார்க்கப்போகிறேன் என்று சொன்னான். உடனே தீயை லக்ஷியம பண்ணமல் இந்தத் தற்காப்புப் பெட்டிக்குள் பிசாசு நரகத்தில் நுழைவதுபோல் நுழைந்தான். எல்லோரிடமும் கவலை காணப்பட்டது. ஒருவர் சொன்னார் "இது சரிதான். இதற்குமுன் அவன் இவ்விதம் செய்திருக்கிறான். அவன் தரைக்குச் சமீபத்தில் இருப்பான்.!'

என் பக்கத்திலிருந்த அதிகாரி சாவதானமாகச் சொன்னார். "ஆகிலும் அவர்கள் ஒரு கிழவனை இவ்விதம் செய்யும்படி அனுமதிக்கக்கூடாது. அவன் தகுதியற்றவன்."

"ஆம். இந்த நடவடிக்கை அவனுக்கு ருசிகரமானது" என்று நான் சொன்னேன். அந்த அதிகாரி சொன்னார். "அது அப்படியல்ல. அவன் நேற்றுத்தான் ஆஸ்பத்திரியிலிருந்து வந்தான். இதுபோல் இதற்குமுன்பு அவன் பரீக்ஷை செய்தான். 20 கஜ சதுரத்தில் தீயைவளர்த்து அவன் அதன் பக்கத்தில் நின்றுகொண்டு "அந்தப் போர்வையைக் கொடுங்கள் என்று சொன்னான்". நான் அவ்விதம் கொடுத்தேன். அவன் போர்வையைத் தன்னைச் சுற்றிப் போர்த்திக்கொண்டு நெருப்பின்பேரில் விழுந்து உருண்டான். ஒரு ஓரத்தில் ஆரம்பித்து கடைசிவரையில் அவன் நெருப்பில் புரண்டு சென்றான். அதன்பின் அவன் எழுந்திருந்து நீ இதை செய்துவிடுவாய் என்று நினைத்தேன்" என்றான். அப்பொழுது போர்வை நழுவிவிட ஒரு கை நெருப்பினால் பாதிக்கப்பட்டிருந்தது. உடனே நாங்கள் அவனை ஆஸ்பத்திரிக்குக் கொண்டுபோனோம். அவன் நேற்றுத்தான் வந்தான்."

அப்பொழுது வேர்வையுடனும் நெருப்பினால் பொசுக்கப்பட்டதுமான ஒரு உருவம் தற்காப்புப் பெட்டியிலிருந்து உஷ்ணம் அளக்கும் கருவியுடன் வெளியே வந்தது. அவனைப் பார்த்து ஆபீஸர் அன்புடனும், அருவருப்புடனும் அவனைப் பாருங்கள் என்று சொன்னார்.

அடுத்தபடியாக வாத்துக்காலுள்ள ஒருவன் இருக்கிறான். அவன் சொல்லுகிறான், "படைகளைக் கொண்டுபோகும் படகுகளை கடற்கரைக்குக் கொண்டுபோவதைப்பற்றிப் பேசுவது சரிதான். ஆனால் அவ்விதம் நடைபெறும்போது அநேகர்கள் தண்ணீருக்குள் மூழ்கடிக்கப்படுவார்கள். அவ்விதம் மூழ்குகிறவர்களைக் காப்பாற்றுவது அவசியம்." ஆகையால் அவன் சோல்ஜரைக் கூடுமானவரையில் தண்ணீரில் மூழ்காதபடிக்கும், மிதக்கும்படிக்கும் அமைக்க முயன்றான். சாமான் பையின் அமைப்பினால் ஒருவனைத் தண்ணீருக்குள் மூழ்காமல் மிதக்கும்படி செய்ய அந்தப் பையை பாக்செய்து ஸீல் வைக்கும் முறையும் பரீக்ஷை செய்யப்பட்டது. மேலும் போராடையும் குறைவாக தண்ணீரை உறிஞ்சும்படியாகவும் அமைக்கப்பட்டது. அவனுடைய புதிய சாதகத்தை பகிரங்கப்படுத்த வேண்டும் என்று அவன் விரும்பினான்.

ஜனவரி மாதம் கடுங்குளிரில் ஆடைகளுடனும், மஸ்தீப்புகளுடனும் அவன் ஒரு பெரிய ஏரிக்குள் விழுந்து சில நிமிஷங்கள் நீந்தி வெளியே வந்து அரைமணி நேரம் அவனுடைய முறைகளை விவரித்து விவாதம் செய்தான். அதன்பின் மற்றொரு அம்சத்தை விளக்கிக்காட்ட அவன் மறுபடியும் தண்ணீரில் குதித்தான். டி-தினத்துக்கு சில மாதங்களுக்குமுன் அவன் கால்வாயில் $1\frac{1}{2}$ மைல் தூரம் சென்றான். பூரா சாமான்களுடனும் தகரத் தொப்பியுடனும், துப்பாக்கியுடனும் அவன் தண்ணீரில் குதித்தான். கரையை அடைந்தபின் நனைந்த ஆடைகளுடன் வெகுதூரம் சென்றால் சர்மத்துக்கு கெடுதல் ஏற்படும் என்று அவன் நினைத்தான். அது எவ்விதம் என்று உணர அவன் 10 மைல் தூரம் நடந்து சென்றான். அவன் ஒரு கபடமற்ற மனிதன். அவனுடைய உயிரைப்பற்றி அவன் கொஞ்சம்கூட கவலைப்படவில்லை. அவன் அமெரிக்கர்களுக்கு அவனுடைய முறைகளை விசேஷமாகப் போதித்தான். அவர்கள் அவனை "டக்" என்று கூப்பிட்டார்கள். அவன் பேசுவதோடு மட்டுமல்லாமல் நடத்தியும் காட்டினான் என்று அவர்கள் நினைத்தார்கள்.

பரீக்ஷித்துப் பார்த்து அது உபயோகமுள்ளதா என்று சொல்லும் முறைக்கு மாறாக் பாதி டாங்கியாகவும், பாதி இயந்திரமாகவும், சுரங்கவெடிகள் மூலமாக வழியைக் கற்பிக்க தரையை அடிக்கும் சங்கிலியுள்ள அபூர்வமான சாதகத்தை உண்டுபண்ண எவ்வித முயற்சி எடுத்துக்கொள்ளப்பட்டதென்று கவனிப்போம். இந்த இயந்திரத்தில் உள்ள கணித சாஸ்திர, யந்திர சாஸ்திர பிரச்னைகள் விநோதமானவை. அது என்ன செய்கிறதென்று நமக்குத் தெளிவாகத் தெரியும். சுழன்று வரும் புஜங்களில் உள்ள சங்கிலிகள் பூமியில் அடிக்கும், அந்த அடியினால் சுரங்கவெடிகள் வெடித்துவிடும். ஆனால், சங்கிலி எவ்விதம் பூமியைத் தாக்குகிறது, அங்கிருந்து திரும்பி வருகிறது. மறுபடி சுற்றப்படுகிறது. சுழன்றுவரும் புஜங்களுக்கு எவ்வித சிரமம் ஏற்படுகிறது, இஞ்சினிலிருந்து எவ்வித சக்திகள் தேவைப்படுகின்றன என்ற சில அம்சங்கள் தெளிவுபடவில்லை.

இந்த அமைப்பை கணித ஆசிரியரொருவர் தயாரித்தார். ஆபீஸில் உட்கார்ந்துகொண்டு சூத்திரங்களும், அடையாளங்களும் உள்ள அநேக காகிதங்கள் அவரைச் சுற்றிக் கிடந்தன. அந்த சூத்திரங்களும் அடையாளங்களும் ஒருவருக்கும் விளங்காது, அர்த்தமும் ஆகாது. இதுதான் பின்னணிவேலை.

ஆனால் புதிய அபிவிருத்திகளை புத்திசாலிகளான விஞ்ஞான சாஸ்திரிகள் தயாரித்து சம்புடம்போல் முட்டாள்களான சோல்ஜர்களிடம் ஒப்படைக்கிறார்கள் என்று நாம் எண்ணி விடக்கூடாது. சங்கிலி உள்ள டாங்கியின் மூலாதார மாதிரி மத்திய கிழக்கில் மிகுந்த அனுபவத்தின் பேரில் தயாரிக்கப்பட்டது. ஒரு சமயத்தில் ஆபிரிக்காவில் ஏற்பட்ட அனுபவமானது அபாயம் விளைவிக்கும் முறையில் பிரிடிஷ் ராணுவ அபிப்ராயத்தை வியாபித்துவிடும் என்று தோன்றிற்று. ஆபிரிக்கப் போரில் கிடைத்த அபாரமான அனுபவத்தை தெள்ளி எடுத்து பாலைவனப் போருக்கு உரிய நடவடிக்கையை பொதுவாக யுத்தத்துக்குரிய நடவடிக்கையிலிருந்து பிரிப்பதும் ஒரு பெரிய பிரச்னையாக இருந்துவந்தது. இரண்டு டாங்கு ஆபீஸர்களுக்குள் நடைபெற்ற சம்பாஷணை எனக்கு ஞாபகம் வருகிறது. ஒருவர் டாங்கிகளுக்கு மூடி வேண்டாம் என்றார். நாங்கள் பாலைவனங்களில் திறந்த மாதிரியே சென்றோம் என்றார்.

மற்றொருவர் சொன்னார் “இது ஆபிரிக்கப் போருக்குச் சரிதான். ஆனால் படுக்கையறை ஜன்னலில் உள்ள தூம்பு வழியாக வெடிகுண்டு எறியக்கூடிய பிரான்ஸில் ஒரு சிறிய இடத்தின் வழியாகச் செல்லும் பொழுது திறந்த வெளியாகச் செல்வது சாவதானமல்ல.”

ஆகிலும் பிரிடிஷாரும், அமெரிக்கரும் ஆபிரிக்காவில் முக்கியமாக பீரங்கிக் குண்டு வீச்சாலும், விமான நடவடிக்கையாலும் என்ன சாதகங்கள் ஏற்படும் என்று தெரிந்துகொண்ட அனுபவத்தை நாம் அதிகமாக மதித்துச் சொல்ல முடியாது. படையெடுப்பு ஆரம்பமான பொழுது பீரங்கிப் பிரயோகமானது ஏராளமான வெடிகுண்டுகளை வீசி அதினின்றும் ஒரு பலன் கிடைக்கும் என்று எதிர் பார்க்கக்கூடியதாக இல்லை. அலாமீன், மாரத், பாண்டலேரியா—சிசிலி, ஆன்சியோ, காஸினோ முதலிய இடங்களில் தாக்கியதின் விளைவுகளை ஆராய்ச்சி செய்ததின் மூலம் குறிப்பிட்ட பீரங்கிப் பிரயோகத்தின் மூலம் என்ன சாதிக்கலாம் என்பதைப்பற்றிய சுமாரான அபிப்பிராயம் திட்டம் போட்டவர்களுக்குக் கிடைத்தது. இந்த அறிவு ஆராய்ச்சின் மூலம் உறுதிப்படுத்தப்பட்டு அபிவிருத்தி செய்யப்பட்டது.

ஒரு நாள் பிற்பகலில் ஒரு பெரிய கூட்டத்துக்கு முன்பாக டாங்குகள் ஒரு பெரிய சுரங்க வெடிப் பிராந்தியத்தின் வழியாக விரட்டப்பட்டு டாங்குகளுக்கும், அதன் பிரயாணிகளுக்கும் என்ன நேரிடும் என்று பார்த்தார்கள். மற்ற ஒத்திகைகளில் ஏராளமான வெடி விமானங்கள் மரத்தினால் செய்யப்பட்ட பொம்மைகள்பேரில் வெடிகுண்டுகளை வர்ஷித்தன. இந்த ஒரு ஒத்திகையின் பொழுதுதான் சார்ஜ வகித்த ஆபீஸர் ஒரு விசேஷக் கூட்டத்தில் பேசினார். பொம்மைகளுக்கு ஏற்பட்ட நஷ்டத்தில் ‘X’ கொல்லப்பட்டார்கள். ‘Y’ காயப்பட்டார்கள். ஒருவன் காணப்படவில்லை. அவனுக்கு என்ன நேரிட்டது என்று நிச்சயமாய்த் தெரியவில்லை. பதிவு செய்கிறவர்கள் அவனைச் சந்திக்குமுன் விறகுக்காக அதைத் தூக்கிக்கொண்டு போய்விட்டார்கள் என்று நான் சந்தேகிக்கிறேன்.

மற்றொரு தடவை வெடிகுண்டு வீச்சின் சப்தம் மனிதர்களின் திறமையை எவ்விதம் பாதிக்கிறதென்று அறிய ஸாபர்கள் மழையில் அகழ்களில் உட்கார்ந்துகொண்டிருந்த வாலண்டியர்களைச் சுற்றி அநேக மணிநேரம் கனமான வெடிகளைப் போட்டார்கள். இந்த ஒத்திகை நின்ற உடன் அகிழ்களிலுள்ளவர்கள் உத்தரவுகளுக்குக் கீழ்ப்படிய வேண்டும். சுடும் ஸ்தானங்களுக்கு முன்னேற வேண்டும். குறிப்பிட்ட லக்ஷியங்களைத் தாக்கவேண்டும். அப்பொழுது அவர்கள் அனுபவித்த வெடிகுண்டு சப்தத்தினால் அவர்களுக்கு காதடைப்பும், நடுக்கமும், பீதியும் உண்டாகி இருக்கிறதா என்று அறிந்துவிடலாம்.

மற்றொரு புறத்தில் விமான மூலமாகச் செல்லும் துருப்புகளையும், முஸ்தீப்புகளையும் அபிவிருத்தி செய்ய பிரயாசைப்பட்டு வந்தனர். விமானமூலம் சென்ற படைகள்தான் டி-தினத்தன்று எதிரிக்கு திகைப்பை உண்டுபண்ணின. மனிதர்களையும் அவர்களுக்குத் தேவையான ஆயுதங்களையும் விமானமூலம் போட்டால்மட்டும் போதாது.

திட்டம் போடுகிறவர்களும், தொழிற்பயிற்சி உள்ளவர்களும், விஞ்ஞான சாஸ்திரிகளும் ஏற்பாடு செய்துவந்த பொழுது சாதாரண சோல்ஜர்களும் மகத்தான போருக்குரிய தந்திரங்களைக் கண்டுபிடித்து அதில் பயிற்சியும் பெற்றுவந்தார்கள்.

இப்பொழுது பிரிடனின் யுத்த ஆபீஸில் ஒரு நிர்வாக வேலையும் இல்லாத ஒரு இலாக்கா இருக்கிறது. அதில் உள்ளவர்கள் பூராவாக பிரகிருத யுத்தத்தில் முதல்தர அனுபவம்பெற்ற போர் வீரர்கள். அவர்களில் அநேகர் படைகளின் வாலிப மாஜித்—தலைவர்கள். அவர்கள் யுத்த தந்திரத்தைப்பற்றி யோசிக்கவேண்டும். போர்களில் என்ன நடைபெற்றதென்றும், அவைகளிலிருந்து என்ன படிப்பினை ஏற்பட்டதென்றும், எதிர்காலத்துக்குரிய புதிய முறைகளும் கோட்பாடுகளும் எவை என்றும் அவர்கள் கண்டுபிடிக்கவேண்டும். மேலும் பலமான தற்காப்புள்ள நாஸி அரணை எவ்விதம் தாக்குவது, தற்காப்புப் பெட்டிகளை எப்படி அழிப்பது, எந்தெந்த தற்காப்புகள் பேரில் எந்த ரகக்குண்டுகளை வீசுவது, எப்போது புகைப்படலத்தை உபயோகிப்பது, என்ற அநேக பிரச்னைகளையும் அவர்கள் ஆராய்ச்சி செய்யவேண்டும். ஏராளமான துருப்புகளை உபயோகிக்கும் படிக்கும் விசாலமான பிரதேசம் அவசியமாகவும் நேரிட்டால் அவர்கள் ஒத்திகை செய்ய ஜனநெருக்கமுள்ள சுருசுருப்பான பிரிட்டனைவிட்டு அமெரிக்காவுக்கும், கனடாவுக்கும் சென்றிருக்கிறார்கள்.

அதன்பின் கடைசியாக இவ்விதமான ஏராளமான சிந்தனை, திட்டம் போடுவது, பரிக்ஷை செய்வது முதலியவைகளுக்குப்பின் வேலையைச் செய்துமுடிக்கிறவர்களுக்கும் ஒரு பொறுப்பு ஏற்பட்டது. திட்டமும், ஆயுதங்களும், அமைப்பும், யுத்த தந்திரகோட்பாடுகளும், ரெஜிமெண்டின ஆபீஸருக்கும் சாதாரண சோல்ஜருக்கும் அனுப்பப்பட்டன. அவற்றைப் பயின்று தேர்ச்சி பெறுவது அவர்களின் பொறுப்பு.

படையெடுப்புக்கான நிலைமை தோன்றுமுன் பிரிடிஷ் சேனையின் பயிற்சி உண்மையில் சிலாக்கியமாக இருந்தது. தரையில் இறங்கும் படைகள் காமாண்டோ படையின் அனுபவத்தை பின்பற்றி வந்தன. கடற்படை, சேனை இரண்டுக்கும் படகுகள் மூலமாகவும், ஆட்கள் மூலமாகவும் ஒத்துழைப்பு ஏற்பட்டது. பயிற்சியின் போது விரிவான கடல் நோயும், ஆகாய நோயும் பரவின. திறந்துள்ள தாக்கும் படகுகளின் குளிர் சிரமமாக இருந்தது. அவற்றையும் ஆராய்ச்சி செய்து நிவர்த்தித்தோம். போரைக் கற்றுக்கொடுக்கும் பள்ளிக்கூடங்களில் முன்னேறித் தாக்குவதற்கான வகுப்புகளும் நிஜமான வெடி மருந்துகளை தாராளமாக உபயோகித்து குண்டுவீச்சை சகித்துக்கொள்வதற்கு மனிதர்களுக்கு பயிற்சியும் அளிக்கப்பட்டது. சுளுந்துகளை சமாளிப்பதற்கும், குழிகளில் படுத்துக்கொண்டிருக்கும் போது மேலே செல்லும் டாங்கிகளின் நடமாட்டத்தை அறிவதற்கும் எல்லாவற்றையும்விட சோர்வு, பசி, குளிர், இருட்டு, மழை முதலியவற்றை அனுபவிப்பதற்கும் அவர்கள் பயிற்சி அளிக்கப்பட்டார்கள்.

டி-தினத்துக்கு சில வாரங்களுக்கு முன் என்னுடைய வாலிபமுள்ள சொந்தக்காரர் வந்தார். நீங்கள் சௌக்கியமா என்று நான் அவரைக் கேட்டேன். அவர் பதில் சொன்னார். "ஆம். நாங்கள் சமீபகாலம் வரையில் செய்துவந்த பயிற்சியின் மூலம் எங்களுடைய வாழ்க்கையில் எப்பொழுதுமிருந்ததைவிட இப்பொழுது திடமுள்ளவர்களாகவே இருக்கிறோம். அவ்விதம் இல்லாவிடில் நாங்கள் இறந்துபோய்விடுவோம்." அதேபோல எல்லோரும் என்னிடம் சொன்னார்கள்.

பிரான்ஸ் டங்கர்க்கின் வீழ்ச்சி ஒரு பெரிய ராணுவ நாசம். ஆனால் அதிலிருந்து பிரிடிஷ் சேனைக்கு ஒரு லாபம் கிடைத்தது. அதன் மூலம் பிரிடனுக்கு இருந்த அலக்ஷிய புத்தி மறைந்தது. புதிய எண்ணங்கள் அவசியமில்லை என்பதும் ஒழிந்தது. ஆகிலும் புதிய எண்ணங்கள் இல்லாமல் பிரான்ஸுக்கு திரும்பமுடியாது என்றும் உணரப்பட்டது. சேனைகள் ஒரு பொழுதும் விஷயங்களை உணரும் ஸ்தாபனங்களல்ல. அவைகள் பிரும்மாண்டமானவை. மாறுதல்களைச் செய்வதென்பதும் சிரம சாத்தியமானது. ஆகிலும் 1940-முதல் 1944-ம் வருஷம் வரையிலும் நேசதேச சேனைகளைப்போல் எந்த சேனையும் அபிப்பிராயங்களையும், ஆராய்ச்சிகளையும் ஏற்றுக்கொள்ளவில்லை, அல்லது நடவடிக்கைகளை பரிஷ்காரமாகவும் அணுஅணுவாகவும் விவரமாக நடத்தியதில்லை. அமெரிக்கத் துருப்புகள் பிரிடனுக்கு வந்தபொழுது அமெரிக்க சிப்பந்திகளுடன் என்னுடைய சிநேகிதர் ஒருவரும் நியமிக்கப்பட்டார். இது உங்களுக்கு பிடித்தமா என்று அவரை நான் கேட்டேன்.

அவர் உத்ஸாகத்துடன் சொன்னார். "அவர்கள் சுத்தமான காற்றுப்போலிருக்கிறார்கள். நாங்கள் அதை சதாகாலமும் அனுபவித்து வந்ததால் இப்பொழுது அது புதிதாகத் தோன்றவில்லை.

அதன்பின் அவர் சற்றுத் தயங்கிநின்று யோஜனையுடன் சொன்னார். ஆகிலும் நாம் அபாரமான முயற்சிகளைச் செய்திருக்கிறோம். நம்முடைய உற்பத்திகளை ஒரு அமெரிக்கரிடம் காட்டினேன். அவர் சொன்னார்.

"இதைச்செய்து முடிக்க அநேக வருஷங்கள் ஆயிருக்குமே!" "ஆம் அதற்கு மூன்று வருஷங்கள் ஆயிற்று. எவ்வளவுகாலம் பிடிக்குமென்று அதற்குமுன் எனக்குத் தெரியாது."

ஒருவரும் நேசதேச வெற்றிக்கு ஆயத்தம் செய்யப்பட்ட வேலைகளில் 100-ல் ஒரு பங்கைப் பற்றியாவது அறியவுமாட்டார்கள், கேள்விப்பட்டிருக்கவுமாட்டார்கள்.

நான் எனக்குத் தோன்றிய சில விஷயங்களைப்பற்றிச் சொல்லிவிட்டேன். ஆகிலும் அவைகளில் ஒவ்வொன்றும் படையெடுப்பு சமயத்தில் இருந்த நெருக்கடிக்கு பேருதவி செய்திருக்கின்றன.

வாத்துக்கால் உள்ளவர் சொல்லியதுபோல படகுகளில் சென்றவர்கள் தண்ணீருக்குள் அனுப்பப்பட்டார்கள். கணித ஆசிரியர் சொன்ன பிரகாரம் டாங்குகளின் சங்கிலிகள் சுரங்க வெடிகள் மூலம் சென்றன. மண் ஆராய்ச்சி செய்பவர்களின் சேவை மூலமாக கடற்கரைக்கு சென்ற டாங்குகள் சிக்கிக்கொள்ளாதபடி எச்சரிக்கை செய்யப்பட்டது. பயிற்சி காலத்தில் மரப்பொம்மைகளை அழித்ததுபோல விமானப்படை, கடற்படை குண்டுவீச்சின் மூலம் ஜெர்மன் தற்காப்புகளும், அதன் வேலைக்காரர்களும் நொருக்கப்பட்டார்கள். கடைசியாக யுத்தம் புரிந்தவர்களும், யுத்தத்தில் அனுபவம் பெற்றவர்களுமான சோல்ஜர்களால் பயில் விக்கப்பட்ட படைகள், எதிரிகளால் நிறுத்தமுடியாமல் முன்னேறிச் சென்றன.

இவை ஒவ்வொன்றிலும் ஜெர்மனியின் இறுதித் தோல்விக்காக மூன்று வருடங்களாக பிரிடன் போட்ட திட்டங்களுடையவும், ஆயத்தங்களுடையவும் அடையாளங்கள் காணப் படுகின்றன.

---

# வெற்றியைச் சம்பாதித்தவர்கள்

## மிகப்பெரிய மூவர்.

### (1) வின்ஸ்டன் சர்ச்சில்—வெற்றியின் சிற்பி.

**பீடர் மாத்தியூஸ்.**

இந்த நூற்றாண்டின் ஆரம்ப வருஷங்களில் பிரிடனில் ராஜீய விஷயங்களில் முற்போக் கடைய மார்ல்பரோ பிரபுவின் பேரப் பிள்ளையாகவும் அப்பொழுதுள்ள முகான்மையான ராஜீய வாதிகளின் ஒருவனின் மகனாகவும் இருப்பது ஒரு சிறந்த ஐசுவரியமாகும்.

1911-ம் வருஷம் அக்டோபர்மீ உலக விஷயமறிந்த உற்றுநோக்காளர் கெய்ஸரின் ஜெர்மனியுடன் யுத்தம் ஏற்படலாம் என்று கவலைப்பட்டுக்கொண்டிருக்கும்போது 37-வது வயதில் வின்ஸ்டன் சர்ச்சில் கடற்படை இலாகா முதல் பிரபுவாக ஆனதற்கு பிறவி உயர்வு ஒரு முகாந்திரம் இல்லை. ஏனென்றால் சர்ச்சில் கன்ஸர்வேடிவ் கட்சியிலிருந்து விலகி விட்டார். அந்தக் கட்சியில் இருந்திருந்தால் அவரும் செல்வாக்குள்ளவராகவே இருந்திருப் பார். அப்பொழுது டோரிகள் தடையற்ற வியாபாரத்துக்கும் ரக்ஷணை வியாபாரத்திற்கும் உள்ள பிரச்னையைப்பற்றி மனப்பான்மையை மாற்றிக்கொண்டார்கள். அவருடைய கட்சியைவிட அவர்தான் ஒரே மனப்பான்மையாக இருந்தார் என்று சொல்லிக்கொண்டா லும் ராஜீய விஷயத்தில் கட்சியை மாற்றிக்கொள்வது லாபகரமானதல்ல. மேலும் மார்ல்பரோ பிரபுவின் பேரன், பிரபுக்கள் சபையில் நடைபெற்ற விவாதத்தில் முக்கியமான பங்கெடுத்துக்கொண்டார். அதன் பயனாக காமன்ஸ் சபையின் அபிப்பிராயங்களை மாற்றி விடும் சக்தியை பிரபுக்கள் சபை இழந்தது.

இன்று சர்ச்சிலை நாம் யுத்தத் தலைவராகத்தான் முக்கியமாக அறிவோம். உண்மை யாக யுத்தத்திலும் ராஜீயத்திலும் அவர் ஒரு சிறந்த போர் வீரர். 1911-ம் வருஷத்தில் வியாபாரச் சங்கத்தின் தலைவரென்றும், லாயிட் ஜார்ஜுடன் உத்தியோகமில்லாதவர்களுக்கு இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தை ஏற்படுத்தியவரென்றும், 65 வயதுஅடைந்தவர்களுக்கு உபகாரச் சம்பளமும், விதவைகளுக்கும் பெற்றோரை இழந்தவர்களுக்கும் உபகாரச் சம்பளமும் வழங் கியவரென்றும் பெயர் பெற்றிருந்தார். அப்பொழுதும் அவருடைய ராஜீய வாழ்க்கைக்குச் செருக்கு ஏற்பட்டது. ஓல்ட் ஹாமிலும், வடமேற்கு மான்செஸ்டரிலும் நடைபெற்ற தேரு தலில் அவர் தோல்வியுற்றார். இன்னும் அநேகங்களிலும் அவர் தோல்வி பெற்றார்.

37-வது வயதில் ராஜீயத்துறையில் அவர் கியாதி பெற்றிருந்தபோதிலும் அதற்கு முன் தொடர்ச்சியாக குடியேற்ற நாடுகளின் உதவி காரியதரிசியாகவும், வியாபார சங்கத்தின் பிரஸிடெண்டாகவும், உள்நாட்டுக் காரியதரிசியாகவும், கடற்படை இலாகாவின் முதல் பிரபுவாகவும் அவர் வேலை பார்த்திருந்தார். அதைத்தவிர அநேக நன்மைகளைச் செய்திருந்தார்.

சேனையில் நாலாவது ஹஸ்ஸார்ஸ் படையில் கீழ்தர ஆபீஸராகச் சேர்ந்தார். அப்பொழுது போர் நடந்த கியூபாவுக்குச் சென்று அங்கு சுருட்டுப் பிடிக்கும் பழக்கத்தையும் பிற்பகல் ஓய்வையும் கற்றுக்கொண்டார். (பிறகு கடற்படை முதல் பிரபுவாக, சிற்றுண்டிக்குப் பிறகு ஒரு மணி நேரம் தூங்கினால் இரண்டு மணி உபரியாக வேலை செய்யலாமென்று கண்டு பிடித்தார்). இந்தியாவின் வடமேற்கு எல்லைச் சரகத்தில் போர் புரிந்து மலைவாசிகளின் வெடிகுண்டிலிருந்து அகஸ்மாத்தாக தப்பிப் பிழைத்தார்.

இவ்விதமாக 37-வது வயதில் சர்ச்சில் நான்கு உயர்தர அரசாங்க உத்யோகங்களைப் பார்த்திருந்தார். ஐந்து இடங்களில் போர் புரிந்து இருந்தார். அவருடைய தகப்பனாரான ராண்டால்ப் சர்ச்சில் பிரபுவின் ஜீவிய சரித்திரத்தைப்பற்றி இரண்டு புஸ்தகங்களும், எகிப்தில் கிச்சனர் போர் புரிந்ததைப்பற்றி இரண்டு புத்தகங்களும், வடமேற்கு எல்லைச் சரகப் போரைப்பற்றி ஒரு சிறிய புத்தகமும், ஒரு கட்டுக்கதையும் எழுதியிருந்தார். "சதா காலமும் கட்டுக்கதையைப் படிக்காதீர்கள் என்று நான் சிநேகிதர்களிடம் சொன்னதுண்டு" என்று அவருடைய வாழ்திசையின் பின் காலத்தில் சொல்லிவந்தார். 37-வயதுள்ள ஒருவர் அநேக காரியங்களைச் செய்திருக்கிறார். அவருடைய வெற்றிக்கு சிரமப்படுவதற்கு அவருக்குள்ள ஆர்வமும், அவருடைய அபாரமான சக்தியும்தான் காரணங்களாகும்.

நான்கு வருஷங்களுக்குப் பின் 1915-ம் வருஷம் நவம்பர்மீ அவர் வேலையை விட்டுச் சென்று ஆக்ஸ்பர்ட் ஷயர் யோமான்ரீப்படையில் மேஜராக அமர்ந்தார். அவருடைய ராஜீய வாழ்க்கை முடிந்து விட்டது என்று அநேகர் நம்பினார்கள்.

முதல் உலக யுத்தத்தின் நெருக்கடியான சில வாரங்களில் ஜெர்மானியர்கள் பாரீஸுக்கு முன் தடுக்கப்பட்டபொழுது பிரிடனின் பூராசேனையையும் பிரான்ஸுக்கு அனுப்பவேண்டும் என்ற முடிவை சர்ச்சில் ஆதரித்தார். பிரிடனின்பேரில் படையெடுப்பு ஏற்படாமல் தற்காப்பு செய்யும் பொறுப்பை பிரிடிஷ் கடற்படை ஏற்றுக்கொள்ளுமென்று அவர் நிர்வாக சபை அங்கத்தினர்களுக்குச் சொன்னார். அந்த முடிவும் நியாயமுள்ளதுதான். ஆண்ட்வர்ப்புக்கு அபாயம் ஏற்பட்டபொழுது அவர் பிரிடிஷ் கடற்படையில் ஒரு பகுதியை அந்தத் துறைமுகத்தைக் காக்க அனுப்பினார். மூன்று நாள் அவகாசம் சம்பாதிக்கப்பட்டது. எதிரிக்கு ஏற்பட்ட இந்த தாமதம்தான் இங்கிலீஷ் கால்வாயிலுள்ள துறைமுகங்களைக் காப்பாற்ற பிரயோஜனப்பட்டது என்று சரித்திரக்காரர்கள் ஒப்புக்கொள்ளுகிறார்கள்.

பிரிடிஷ் கடல்-விமானப்படையை சர்ச்சில் அமைத்தார். முதல் உலக யுத்தம் ஆரம்பித்த பொழுது பிரிடிஷ்கடற்படைதான் விமானங்களை அனுப்பி மீன் வெடிகளைப்போட்டு வந்தது. யுத்தம் மூளுவதற்குமுன் மூன்று வருஷங்கள் அவர் கடற்படையில் பிரயாசை எடுத்துக்கொண்டதால் கடற்படை தயாராகி விட்டது.

டார்டனெல்ஸில் இகழ்ச்சி ஏற்பட்டதற்கு கடற்படை இலாகாவின் முதல் பிரபு என்ற முறையில் சர்ச்சில் பொறுப்பேற்றுக்கொண்டார். அவருடைய திட்டம் முறிவுபட்டதற்கு அதைச்சரியானபடி நடத்தாததுதான் காரணமே அல்லாது திட்டத்தில் ஒரு குறைவும் இல்லை. அதற்குப்பின் அவர் சேனையில் மேஜர் பதவி வகித்து பிரான்ஸுக்கு ரெஜிமெண்டு ஆபீஸராகச்சென்று அங்கும் மறுமுறை தப்பிப் பிழைத்தார். அகிழிலிருந்து வெளியே சென்று உயர்தர காரியாலய ஆபீஸரைச் சந்திக்க காத்துக்கொண்டிருந்தபொழுது அவர் இருந்த அகிழ் எதிரியின் பீரங்கிக் குண்டால் முற்றிலும் அழிக்கப்பட்டது.

யுத்தத்தின் பிற்பகுதியில் சர்ச்சில் மறுபடியும் நிர்வாகத்தில் வெடிமருந்து இலாகா மந்திரி பதவி வகித்தார். இது அப்பொழுது முக்யத்துவம் உள்ளதாக இருந்தபோதிலும் யுத்த ஆரம்பம் முதல் அவர் வகித்து வந்த இலாகாவைவிட குறைவான முக்கியத்வமுள்ளது தான். யுத்த நிறுத்த சமயத்தில் 8 வருடங்களுக்கு முன் இருந்ததைவிட அவருடைய ராஜீய மேன்மை அவ்வளவு சிலாக்கியமாகக் காணப்படவில்லை. ஆகிலும் அவர் செய்யக் கூடிய வேலைகள் பாக்கியிருந்தன. படைகளைக் கலைப்பது ஒரு சிரமமான பிரச்னையாக இருந்தது. சர்ச்சில் யுத்த ஆபீஸுக்கு மாற்றப்பட்டார். அதன்பின் குடியேற்ற நாடுகள்

ஆபீஸுக்குச்சென்று 1915-ம் வருஷத்தில் உதவி காரியதரிசியாக முக்கியமான சேவை செய்திருக்கிறார்.

ஆனால் சர்ச்சில் ஒரு பொழுதும் சிறந்த கட்சிப்பற்றுள்ளவரல்ல. தானாகவே விஷயங்களை ஆலோசிப்பார். பிறர் சொல்லுவதை ஒப்புக்கொள்ளமாட்டார். யுத்தத்தில் வெற்றியடைந்த கூட்டு மந்திரி சபையின் கலைப்புக்குப் பின்னும் 1924-ம்வருஷம் பொதுத்தேர்தலில் தொழிலாளர்கள் வெற்றி பெற்ற பின்னும் ஜனசமூகக் கட்சியை ஆதரித்துவந்த தாராளக் கட்சியினரின் அனுதாபத்தை அவர் இழந்தார். தாராளக் கட்சியினரைக் காட்டிலும் கன்ஸர்வேடிவ் கட்சியினர்தான் சர்ச்சிலுக்குப் பிடித்தமாக இருந்தது. ஸ்வதந்திரக் கட்சியைச் சேர்ந்தவராக சிறிது காலம் பார்லிமெண்டில் அங்கத்தினராக இருந்தும் இரண்டு தொகுதிகளில் தேர்தலில் தோல்வியுற்ற பின்னும் அவர் மறுபடியும் கன்ஸர்வேடிவ் கட்சியில் சேர்ந்து கொண்டார்.

அவர் மறுபடியும் நிர்வாக சபையில் கோசாதிகாரி பதவியை ஏற்றுக்கொண்டார். தகப்பனாரைப்போல அவரும் ராஜீய ஏணியின் மேல் வளைக்கு ஏறிவிட்டார். பிரதம மந்திரி வேலையை விட்டு நீங்கியபொழுது கோசாதிகாரி அவ்வேலையை ஏற்றுக்கொண்டவர்களில் அவரும் ஒருவர்.

ஆகிலும் அவருடைய தகப்பனாரைப்போல் வின்ஸ்டன் சர்ச்சிலும் ஏணியின் உச்சியை அடைய மாட்டார் என்று தோன்றிற்று. 1929-ம் வருஷத்தில் தேர்தலில் கன்ஸர்வேடிவ்கள் தோற்றுப்போனார்கள். தொழிலாளர்கள் நிர்வாகம் அமைக்கப்பட்டது. அதுவும் மறைந்த உடன் மறுபடியும் கூட்டு நிர்வாகம் தலைகாட்டிற்று. ஆனால் சர்ச்சில் அதில் ஒரு அங்கத்தினரல்ல. ஏனென்றால் நாஸி ஜெர்மனி ஆயுதங்களை அதிகப்படுத்திக்கொள்வதிலிருந்து பிரிடனுக்கும், ஐரோப்பாவுக்கும், உலகத்துக்கும் அபாயம் வந்துவிட்டதென்று முதல்முதலில் அவர்தான் உணர்ந்தார். ஹிட்லரும், கோயரிங்கும் ஒரு பெரிய விமானப்படையை தயாரித்து வருகிறார்கள் என்றும் அந்த அபாயத்தைத் தடுக்கப்போதுமான அளவிற்கு பிரிடிஷ் விமானப் படைவிருத்தி அடையவில்லை என்றும் அறிந்தார்.

யுத்தத்தைத் தடுக்க வேண்டுமென்றால் பிரிட்டன் வலுவுடன் இருக்கவேண்டும் என்றும் ஜெர்மன் அபாயத்துக்குட்பட்ட தேசங்கள் ஒன்றுபட வேண்டுமென்றும் சர்ச்சில் சொன்னார். ஹிட்லர் ஒவ்வொருவராக விழுங்கும் யுத்த தந்திரத்துக்கு கூட்டுறவு பத்திரம்தான் தகுந்த பரிகாரம் என்று அவருக்குத் தோன்றிற்று. 1935-ம் வருஷத்தில் முஸோலினி அபிஸீனியாவுக்கு சோல்ஜர்களை அனுப்பியபோது சங்கடத்தில் மாட்டிக்கொள்வாய் என்று இத்தாலிய யதேச்சாதிகாரிக்கு அவர் எச்சரிக்கை செய்தார். 1940—1941-ம் வருஷத்தில் லக்ஷக்கணக்கான இதாலிய சோல்ஜர்கள் பிரிடிஷ் கைதி முகாம்களுக்குள் சென்றபொழுது சர்ச்சில் சொன்னது யதார்த்தமாயிற்று.

ஜெர்மனியிடமிருந்து அபாயத்தை எதிர்பார்த்தவர்களுக்கு சர்ச்சில் தலைவராகவும், பிரமுகராகவும் ஆகிவிட்டார். 1939-ம் வருஷம் செப்டம்பர் 3-ம்வ அன்று யுத்தம் துவங்கிய பொழுது கடற்படையிலுள்ள அவருடைய பழைய உத்தியோகத்திற்கு அவர் அழைக்கப்பட்டார். ஒரு மாதத்துக்குப் பின் யுத்தத்தைப்பற்றிய முதல் ஒலிபரப்பு சொற்பொழிவில் அவர் பின்வருமாறு சொன்னார். "குழப்பமும் நிச்சயமும் இல்லாத இக்காலத்திலும் நாம் இங்கிலாந்துக்கும், பிரான்ஸுக்கும், ருஷ்யாவுக்கும் உள்ள பொதுப் படையான அக்கரைகளை நாம் தெளிவுபடக்காணலாம்." 18மீனங்களுக்குப் பிறகு அவருடைய வார்த்தை மறுபடியும் யதார்த்தமாகி விட்டது.

ஜெர்மானியர்கள் நார்வேயைப் படையெடுத்தார்கள். விமானப்படை பலம் மிகுதியாக இல்லாததினால் உதவி குறைவாகயிருந்த கடற்படை ஜெர்மன் படையெடுப்பைத் தடுக்க முடியவில்லை. பொதுஜனங்களின் கோபாவேசத்தின் மத்தியில் சர்ச்சில் ஒருவர்தான் தேசத்தில் தலைமை வகிக்கமுடியுமென்று நிச்சயப்பட்டது. மேமீ 10-ம் தேதியன்று காலையில் ஜெர்மானியர்கள் பெல்ஜியம், ஹாலந்து, பிரான்ஸில் படையெடுத்ததாக உலகம் கேள்வியுற்றது. அன்று சாயங்காலம் மன்னர் சர்ச்சிலைக் கூப்பிட்டு நிர்வாகத்தை நடத்தும்படி உத்தரவிட்டார்.

"இந்த நிர்வாகத்தில் சேர்ந்தவர்களுக்குச் சொன்னதுபோல் இச்சபைக்கும் சொல்லுகிறேன். நான் ரத்தமும், பரிச்ரமும், கண்ணீரும், வியர்வையும்தான் தருகிறேன்." மற்றவர்களிடமிருந்து பிரிடிஷ் மக்கள் கேட்ட உருக்கமான அழகான வார்த்தைகளுக்கும் இதற்கும் வித்யாசமுண்டு.

பிரெஞ்சுப் படைகளிடமிருந்து துணிக்கப்பட்ட பிரிடிஷ் படை டங்கர்க்குக்குப் பின் வாங்கிற்று. சர்ச்சில் உலகத்தாருக்குப் பின்வருமாறு சொன்னார். "நாம் பிரான்ஸில் போரை நடத்துவோம். நாம் கடல்களிலும், சமுத்திரங்களிலும் போரை நடத்துவோம்; நாம் ஆகாயத்திலிருந்து அதிக நம்பிக்கையுடனும் அதிக வலிமையுடனும் போர்புரிவோம்; எப்பாடுபட்டும் நாம் நமது தீவைக்காப்பாற்றுவோம்; நாம் கடற்கரையிலும், படைகளிறங்கும் இடங்களிலும், வயல்களிலும், தெருத்தெருவாகவும், மலைகளிலும் போரை நடத்துவோம்; நாம் ஒரு பொழுதும் சரணடைய மாட்டோம்."

பிரான்ஸ் விழுந்தது. பிரிடன் தன்னந்தனியே நின்றது. ஆனால் சர்ச்சில் பிரான்ஸிடமிருந்த அவருடைய நம்பிக்கையை இழந்து விடவில்லை. தன்னந்தனியே பிரிடன் நின்று போரை நடத்தும் என்பதிலும் அவர் நம்பிக்கையை இழக்கவில்லை. "நம்முடைய கடமையை நாம் ஊக்கத்துடன் செய்வோம். தைரியமாக இருப்போம். பிரிடிஷ் சாம்ராஜ்யமும், குடியேற்ற நாடுகளும் ஆயிரம் வருஷங்கள் நிலைத்திருந்தால் இதுதான் பிரிடனின் சிலாக்கியமான தருணம்" என்று உலகம் சொல்லக்கூடும்.

ஒரு வருஷம் வரையில் பிரிடனும் பிரிடிஷ் சாம்ராஜ்யமும் சர்ச்சிலின் தலைமையில் தன்னந்தனியே போரை நடத்தின. அதன்பின் ஜெர்மனி ருஷ்யாவையும், ஜப்பான் பெர்ல் துறைமுகத்தையும் தாக்கின. பிரிடனில் ஒரு பெரிய ஒப்பந்தம் ஏற்பட்டது. சர்ச்சில் சதாகாலமும் கனவுகண்டிருந்த உலக சமஷ்டியை நிறுவ சர்ச்சில் பிரயாணம் செய்ய ஆரம்பித்தார். இந்த ஒப்பந்தம் சரியான காலத்தில் ஏற்பட்டிருந்தால் சமாதானத்தைக் காப்பாற்றியிருக்கும்.

நேசதேசத்தார்கள் தற்காப்பிலிருந்து முன்னேறித்தாக்க ஆரம்பித்தார்கள். 1944-ம் வருஷம் நவம்பர் மாதம் 11-ம் தேதியன்று 70-வது வயதில் சர்ச்சில் பாரிஸுக்கு வந்து பிரான்ஸிடம் அவருக்குள்ள நம்பிக்கையைப் பிரசுரம் செய்தார்.

## (2) ரூஸ்வெல்ட்.

[குறிப்பு:—இச்செய்தி ரூஸ்வெல்ட் இறப்பதற்குமுன் வெளியிடப்பட்டது—பத்திராதிபர்].

தீர்க்கமுடியாத பிரச்னைகளிருக்கின்றன என்பதை ரூஸ்வெல்ட் ஒப்புக்கொள்ளுவதில்லை. தேக அசௌகரியத்தை எதிர்த்துப் போராடிய அவர் ஜனசமூகத்தின் ஒவ்வொரு கஷ்டத்தையும் இறுதியில் நிவர்த்திசெய்துவிடலாமென்ற எண்ணம் கொண்டிருந்தார். ஜனநாயக நிர்வாகத்தின் முக்கியமான அலுவல் நாசத்திலிருந்து ஜனங்களை ரக்ஷிப்பதுதான் என்று அவர் நம்பியிருந்தார்.

அவர் ஆற்றிய இரண்டாவது சொற்பொழிவில் "ஜனங்களுக்கு சந்தோஷமாக ஜீவிக்க அவசியமான பத்திரமும் சமாதானமும் ஏற்படும் நாளை துரிதப்படுத்துவது என்ற எண்ணத்தை பூர்த்திசெய்ய நானும் என்னுடைய நிர்வாகமும் கங்கணம் கட்டிக்கொண்டிருக்கிறோம்" என்று அவர் சொன்னார்.

திட்டம்போடவேண்டுமென்று எண்ணினாலும் ரூஸ்வெல்ட் யதேச்சாதிகாரத்தை வெறுக்கிறார். அதற்கு அவர் மூன்று காரணங்களைச் சொல்லுகிறார். அவை பின்வருமாறு. "யதேச்சாதிகாரியாக இருக்க எனக்கு விருப்பமில்லை. வெற்றிகரமான யதேச்சாதிகாரியாக இருக்க எனக்கு யோக்யதை இல்லை. சரித்திர பூர்வமாகவும், தற்பொழுதுள்ள யதேச்சாதிகாரிகளின் அனுபவத்திலிருந்தும் அமெரிக்கா போன்ற ஒரு நாட்டிற்கு எவ்வித யதேச்சாதிகாரமும் வேண்டுமென்று நான் விரும்புவதற்கில்லை."

சர்வதேச விஷயங்களில் அவர் பொழுதுபோக்குக்காகத் தலையிட்டுக்கொண்டாலும், ஜனாதிபதி என்ற முறையில் ஆரம்ப வருஷங்களில் அது அவருடைய கொள்கையின் முக்கியமான அம்சமாக இருக்கவில்லை. நாஸி தத்துவத்திலிருந்தும் அக்கிரமப் போரிலிருந்தும் அபாயம் நேரிடும் என்று பொது ஜனங்கள் உணரும் வரையில் அமெரிக்காவின் அயல்நாட்டுக் கொள்கைகளில் மாறுதல் ஏற்படுத்தவேண்டுமென்று அவருக்குத் தோன்றவில்லை. சர்வதேச சம்பந்தமான நடவடிக்கையில் அவர் எடுத்துக்கொண்ட பிரயாசைகளில் அமெரிக்க பொது ஜன அபிப்பிராயத்துக்கு விரோதமன்னியிலும் அகலக்கால் வைக்காமலும் அவர் ஜாக்கிரதையுடனிருந்துவந்தார்.

கிரைமியா மகாநாட்டில் ரூஸ்வெல்டின் சொந்தச் செல்வாக்கின் காரணமாக ஏற்பட்ட முடிவுகள் எல்லாம் 1937-ம் வருஷம் அக்டோபர் மாதம் 5-ம் தேதியன்று சிகாகோவில் அவர் ஆற்றிய சொற்பொழிவில் காணப்படுகின்றன.

பிரான்ஸ் வீழ்ச்சிபெற்றபின் ஜனாதிபதி ரூஸ்வெல்ட் முதன்முதலாக பொதுஜன அபிப் பிராயத்தைத் தாண்டி முன்செல்ல முற்பட்டார். ஏனெனில் மேற்கில் இங்கிலாந்துதான் பாக்கியான தற்காப்பாக இருக்கிறதென்றும், அதுவும் வீழ்ச்சிபெற்றால் அமெரிக்காவுக்கும் படையெடுப்பு பீதி ஏற்படுமென்றும் அவர் உணர்ந்தார். ஆகையால் அவர் துரிதமாக நடவடிக்கைகளை மேற்கொண்டார்.

பொருளுக்கு பதிலாக நாசகாரிகளை அனுப்புவது, குத்தகைக் கடன் திட்டத்தை அமைப்பது, சர்ச்சிலுடன் அட்லாண்டிக் சாஸனத்தைத் தயாரிப்பது, எந்த நெருக்கடியையும் சமாளிக்க அமெரிக்க ஐச்வர்யங்களையும், மனித பலத்தையும் பூராவாகத் திரட்டுவது என்ற நடவடிக்கைகளை அவர் பூர்த்திசெய்தார். இதே சமயத்தில் உலக வியவகார சம்பந்தமாக பொதுஜன அபிப்பிராயத்தை மாற்றியமைக்க அவர் இரக்கமன்னியில் முயற்சி செய்துவந்தார். யுத்தகால அவசியத்தைவிட பலமான ஒப்பந்தத்துக்கும் அவர் ஜனங்களைத் தயார் செய்து வந்தார்.

டிசம்பர் 7-ம் தேதிக்குப்பின் அவர் எதற்காகத் தயார் செய்துவந்தார் என்று தெளிவு பட்டது. சர்வதேசங்களடங்கிய சாச்வதமான உலக ஸ்தாபனத்தை அமைக்கத்தான் அவர் ஆயத்தம் செய்துவந்தார். அமெரிக்காவின் பொதுஜன அபிப்பிராயத்துக்கு ஒத்தவகையில் சர்வதேசங்களின் கவனத்துக்காக கொள்கைகளையும் நடைமுறைகளையும் தயாரிக்கவேண்டு மென்பதுதான் மிஸ்டர் ரூஸ்வெல்டின் அபிப்பிராயம். ஆகையினால்தான் சில சமயங்களில் அவர் நேசதேச அபிவிருத்தியில் சிறிது தாமதம் காட்டினார். ஏனெனில் அவருக்கு அச்சமயங்களில் சில சந்தேகங்கள் ஏற்பட்டது.

ஆகிலும் கடைசித் தேருதல் பிரசாரத்தில் உலக ஸ்தாபன பிரச்னையும் அதை யுத்தத்துக்குப்பின் உபயோகப்படுத்தும் பிரச்னையும்தான் அமெரிக்க பொது மக்களின் முக்கியமான நோக்கமென்று ஜனாதிபதி உணர்ந்தார். இவ்விரண்டும் திறமையுள்ள உலக ஸ்தாபன அமைப்பைப் பொருத்ததென்று அறிந்து அவர் அந்த ஸ்தாபனத்தை அமைக்கும் உறுதியுடன் யால்டாவுக்குச் சென்றார். ஜனங்கள் அதற்குத் தயாராக இருக்கிறார்கள் என்றும் அவர் நம்பினார்.

## (3) ஸ்டாலின்.

ஜோஸப் ஸ்டாலினின் வாழ்க்கை வேறுவிதமான சந்தர்ப்பங்களிலும் முற்றிலும் மாறு பாடான கொள்கைகளுடனும் ஆரம்பிக்கப்பட்டது. அவருடைய வாலிபத்தில் அவருக்கு பத்திரம் ஏற்படவில்லை. அவருடைய ராஜிய அபிப்பிராயங்கள் பூர்ணமான விவாதத்தின் பேரில் ஏற்பட்டவையல்ல. அவருக்கு கொடுங்கோன்மையுள்ள ஸாரின் போலிஸிடமிருந்து அடிக்கடி அபாயம் ஏற்பட்டது. அவர் ஒளிந்துகொண்டு சதிசெய்து வந்தார். அவர் சொல்லும் ஒவ்வொரு பேச்சுக்கும் அவரைச் சுட்டுக்கொல்லவும், தூக்கிலிடவும், காவல் முகாமில் வைக்கவும் கூடும்.

நாம் புதிதாக ஒரு காரியத்தை சிருஷ்டனை செய்துவருகிறோம் என்ற எண்ணத்தைக் கொண்டு அவர் அதிகாரத்துக்கு வரவில்லை. நவீன பொது உடமைக் கொள்கையுள்ள அவருடைய எஜமானர்களின் அபிப்பிராயங்களை நிறைவேற்றுவதுதான் அவருடைய சிறந்த விருப்பம். அவர்களின் சிஷ்யன் என்று சொல்லிக்கொள்ள அவர் அடிக்கடி பிரியப்படுவார். "ஸ்டாலினிஸம்" என்று பதத்தை உபயோகிக்க அவர் இச்சைகொள்ளவில்லை. ஏனென்றால் ஒரு புதிய கொள்கையை ஆரம்பித்தவர் என்று சொல்லிக்கொள்ள அவருக்கு இஷ்டமில்லை,

ஸ்டாலின் ஒரு சமயத்தில் பின்வருமாறு சொன்னார். "ஒரு தலைவரைத் துன்புறுத்தக் கூடிய வியாதி, பொது ஜனங்களிடமிருந்து ஏற்படும் பீதிதான்."

வாலிபத்தில் ஏற்பட்ட அனுபவமும், அதிகாரத்துக்கு வந்த ஆரம்பத்தில் அவருக்கு ஏற்பட்ட சிரமங்களும்தான் ஸ்டாலினின் மனப்பான்மையை உருவாக்கியிருக்கின்றன. அவர் சதாகாலமும் ஆபத்துக்குட்பட்டிருந்ததால் அவர் தற்காப்பிலிருந்துவரத் தயார் செய்து கொண்டிருக்கிறார்.

புதிய எண்ணங்களையும், அவைகளை வெளியிடும் முறைகளையும், நூதன ஆராய்ச்சி களையும் அவர் விரும்புவார். உண்மைகளை விவரித்துச் சொல்லவேண்டுமென்றும் அவர் விரும்புவார், அவர் சொல்லுவதற்கும் செய்வதற்கும் தகுந்த காரிய காரணங்களை அவர் எடுத்துரைப்பார்.

# அநேக நாடுகளுக்கு அவர் திட்டம் போட்டார்.

## ஈஸன்ஹவர் சரசியான கமாண்டர்.

எமில் லெங்கியேல், (ஸ்டார் வீக்லி).

மகா அலெக்ஸாண்டர் முதல் மகா நெப்போலியன் வரையிலுள்ள சரித்திரத்தில் காணப்படும் கீர்த்திபெற்ற ராணுவ அதிகாரிகளை எல்லாம் சேனாதிபதியான ட்வைட் டேவிட் ஈஸன்ஹவரின் படை முகாம்களில் ஒரு மூலையில் வைக்கவேண்டியதுதான். மாஜி பண்ணை வேலைக்காரரான இந்தச் சேனாதிபதியைப்போல் எவரும் சர்வதேசங்களிலிருந்து வந்த அநேகம் படைகளுக்கு சேனாதிபத்யம் வகிக்கவில்லை.

ஐந்து வருஷங்களுக்குமுன் அவர் அமெரிக்க சேனையிலுள்ள அநேக ஆயிரம் ஆபீஸர்களில் ஒருவர். அவருடைய பெயர் 1940-41ம் வருஷத்தில் அமெரிக்காவில் வெளிவந்த பிரமுகர்கள் பதிப்பில் சேர்க்கப்படவில்லை. இன்று அவருடைய பெயர் சரித்திரப் புகழ்பெற்றுவிட்டது.

சாதாரண மனிதருக்கும் அவருக்கும் தோற்றத்தில் அதிக வித்யாசம் காணப்படாது. விடுகதைகளில் காணப்படும் யுத்த வீரரைப்போல் அவர் தோன்றமாட்டார். அவர் நடுவயதுள்ளவர். 5 அடி 10 அங்குலம் உயரமுள்ளவர். 175 பவுண்டு எடை உள்ளவர். சர்ச்சிலைப்போல் தீக்ஷண்யமான கண்களைப் பெற்றவரல்ல. அவருடைய கண்கள் பளபளப்பான நீலவர்ணமுள்ளவைகள்.

அவர் சிநேக பாவம் உள்ளவராயும், புன்சிரிப்பு உள்ளவராயும் இருந்தாலும் திறமையின்மையையும், அலக்ஷிய புத்தியையும் சோம்பேறித்தனத்தையும் அவர் பொறுக்கமாட்டார். அவருடன் ஒத்துப்போவது சுலபமானது. ஆனால் அவர் ஒரு கர்கசர்.

யுத்த தந்திரத்தில் அவர் ஊறினவர். போரைப்பற்றி எல்லா விவரங்களையும் அவர் அநேக பள்ளிக்கூடங்களில் கற்றுக்கொண்டிருக்கிறார். புதிய பிரச்னைகளை வரவேற்று அவைகளை வெகு அழகாகவும் அவர் தீர்த்துவிடுவார். திட்டம் போடுவதும் ஏற்பாடு செய்வதும் தான் ஈஸன்ஹவரின் சிறந்த குணங்கள். அவர் ஒவ்வொரு நுட்பமான விவரங்களையும் தயார் செய்துவிடுவார். அகஸ்மாத்தாக ஏற்படும் என்று அவர் ஒருபொழுதும் நம்பமாட்டார். எதிர்பாராமல் ஏற்படக்கூடியதற்கும் மனித இயல்பில் இருக்கக்கூடிய குறைவுபாடுகளுக்கும் இடங்கொடுத்துத்தான் அவர் திட்டம் போடுவார்.

ஜனரல் ஈஸன்ஹவர் ஒரு ஆச்சரியமான யுத்த நிபுணர் மட்டும்தான் என்று நினைப்பது தவறாகும். அவர் மத்திய, மேற்கு குடியானவர்களைப்போல் அனுதாபம் உள்ளவர். அந்தரங்க சுத்தி உள்ளவர். அவர் இயற்கையாக நன்கு சம்பாஷணை செய்யக்கூடியவர். அவர் யுத்தத்தில் ஈடுபட்டு புகழ் பெறாவிடில் அவர் உலகத்திலுள்ள ஒரு பெரிய யுத்த தந்திர நிபுணராக இருந்திருப்பார். அவருக்குப் பேசுவதில் பிரியமுண்டு. ஒருவரும் இல்லாவிடில் அவருடைய நாய்க்குட்டியான டெலக்குடன் அவர் சம்பாஷணை செய்வார்.

ஒரு நாள் அவருடைய தலைமைக் காரியாலயத்தில் உள்ள சிப்பந்திகளை சேனாதிபதி நாய் வைத்துக்கொள்ளக்கூடாது என்று ராணுவ விதிகளில் இருக்கிறதா என்று கேட்டார். நான் சம்பாஷணை செய்ய எனக்கு ஒருவர் வேண்டும். "அப்போர்வழி யுத்தத்தைப் பற்றி என்னைக் கேள்விகள் கேட்கக்கூடாது. நான் சொல்வதையும் அவர் திருப்பிச் சொல்லக் கூடாது என்று அவர் சொன்னார்". சிப்பந்திகள் அந்தக் கேள்விக்கு விடையளிக்கும் முறையில் டெலக் என்ற நாயை அவருக்கு கொடுத்தார்கள். யுத்த காலத்தில் அவர் பொழுது போக்குகளில் காலங்கழிப்பதில்லை. ஏதாவது ஒரு சமயம் கால்ப் அல்லது சீட்டோ விளையாடுவார். யுத்தத்துக்குமுன் கான்ஸாஸில் அவர் விளையாடுவதுண்டு. ஆனால் சீட்டாட்டத்தில் தோற்றுவிடுவார். ஏனென்றால் அவர் சாஸ்திரத்தை அதிகமாகப் பின்பற்றுவதுண்டு. மனிதர்களிடத்தில் அக்கரையும் பிரியமும் ஒத்தாசை செய்யவேண்டும் என்ற எண்ணமும் காணப்படுவதால் அவரிடத்தில் மானிட வர்க்கத்துக்குரிய நற்குணங்களும் இருக்கின்றன என்று வெளியாகும்.

# பீல்டு-மார்ஷல் மாண்ட் காமரி.

## I

## ஒரு முதல் தரமான புராணம்.

**ஜேம்ஸ் மாக்டனுல்ட்.**

(நியூயார்க் டைம்ஸ் சஞ்சிகை).

[சுறு சுறுப்புள்ள ஸோல்ஜரின் உருவப்படம், போர்முனையிலிருந்தது போல் தனித்திருப்பவர், ஸ்நேகபாவமுள்ளவர், முரட்டு சுபாவமுள்ளவர்].

அவர் மெல்லிய சரீர முள்ளவர். அநேகரின் புகழைப்பெற்றவர். எதிரி சம்பந்தப்பட்ட மட்டில் அவர் வதை செய்கிறவர்—அடக்கப்படாத புலியைப்போல் மூர்க்கத்தன முள்ளவர். இளம் மான்போல் அமைதியுள்ளவர். அவரைச்சுற்றி நாய்க்குட்டிகளும், கானரி பறவைகளும், பன்றிக்குட்டிகளும், எதிரியின் டாங்கிகளும் காணப்படும்.

ஒரு சமயம் அவர் அமைதியுள்ள நண்பராக இருப்பார். அடுத்த சமயத்தில் நெருங்கிப் பழகமுடியாத தெய்வம் போலிருப்பார். அவர் பிரிடிஷ் பாங்கி குமாஸ்தாவின் ஆடையையோ, தொழிலாளர்களின் சல்லடங்களையோ, அல்லது சாப்பாடு உடையையோ, அல்லது வேனிர் கால சாதாரண உடையையோ, அல்லது ஸ்நானம், வேட்டை, அல்லது பந்து விளையாடும் ஆடையையோ, எதையாகிலும் அவர் அணிந்து கொண்டாலும், அவர் உத்தம புருஷர் என்று எல்லோர் மனதிலும் படும்.

இவர்தான் பீல்ட்-மார்ஷல் மாண்ட்காமரி. இவரை ஆபீஸர்களும் ஸோல்ஜர்களும் அன்பு மிகுந்து மாண்டி என்று சொல்லுவார்கள். அவருடைய நெருங்கிய நண்பனுகவும் மதிப்புப்பெற்றவருமான ஜெனரல் ட்வைட் டி ஈஸன்ஹவரைத் தவிர, மாண்ட்காமரியைப் போல எந்த சேனை ஆபீஸரும் இவ்வளவு பிரயாசை எடுத்துக்கொள்ளவில்லை.

அவசியமானுல் ஒரு நாளைக்கு 24 மணி நேரம் வேலைசெய்ய அவர் தயார். எல்லோரும் அவ்விதம் வேலைசெய்ய வேண்டுமென்று அவர் எதிர்பார்க்கிருர். கஷ்ட சாத்யமான அபாயம் பொருந்திய வேலையையும் உடனேசெய்து முடிக்கவேண்டும். அவருடன் ஒத்து உழைத்துவரும் ஸோல்ஜர்களும் ஆபீஸர்களும் ஓய்வெடுத்துக்கொண்டால் அவர்கள் தன்னைப் போல் அதன் பிரயோஜனத்தை அடையவேண்டுமென்று அவர் விரும்புவார்.

மாண்டி அவருடைய ரகசியமான கூடாரத்திற்குள் சென்று ஆலோசனை செய்யும் பொழுது ஒருவரும் அங்கு செல்லத்துணிய மாட்டார்கள். வெளிப்புறத்திலுள்ள காவல்காரர்களைத்தாண்டிச்செல்ல ஒருவர் முயன்ருல் அவர் வெகு சீக்கிரத்தில் பின்வாங்கி ஓடும்படி நேர்ந்துவிடும்.

மாண்ட்காமரிக்குப் பிடித்தமான மேஜர் ஜெனரல்களில் ஒருவர் இதைக்கண்டு பிடித்தார். இந்த நிருபரும், ஒரு ஜெனரல் பின்வாங்குவதைக் கண்ணுற்று, காரில் ஏறிக் கொண்டு துரிதமாகச்சென்று விட்டார்.

மாண்ட்காமரி தனிமையாக இருக்கும் பொழுது அவரை ஒருவரும் அணுகமுடியாது. அவர் அவருடைய கூடாரத்திலிருந்து வெளியே வரும்பொழுது மிகவும் மனோக்யமானவராகக் காணப்படுவார்.

மாண்ட்காமரி ஆடம்பரமன்னியில் வாழ்க்கையை நடத்தி வருகிருர். சாதாரணமாக ஒன்றும் நடைபெருவிடில் அவர் 10-மணிக்கு தூங்கச்சொல்லுவார். மிகவும் முக்கியமான அவசரமிருந்தாலொழிய அவரைத் தொந்தரவு செய்ய ஒருவரையும் காவலாளர்கள் அனுமதிக்கமாட்டார்கள். அவர் அதிகாலையில் எழுந்திருப்பார். நடப்பைப்பற்றி ரிபோர்ட்டுகளை கவனிப்பார். அதன்பின் 8 மணிக்கு காலை போஜனம் அருந்துவார்.

மகத்தான போர் நடைபெற்ருல் அவர் தலைமை காரியாலயத்திலிருப்பார். போரில் அயர்வு ஏற்பட்டால் அவர் யுத்த நிருபர்களுக்கு பேட்டியளிப்பார். ஸோல்ஜர்களைப் பார்வையிடுவார்.

பத்திரிகாசிரியர்களுடன் நடத்தும் மகாநாட்டில் அவர் மிகவும் ஸரஸமாகப் பேசுவார். முகாம் மணையில் உட்கார்ந்துகொண்டு மெதுவாகவும் குறிப்பாகவும் அவர் பேசுவார். பேசும்பொழுது ஒரு கோரையைப் பிடிங்கிக்கொண்டு அத்துடன் விளையாடிக்கொண்டிருப்பார். அவர் பதங்களையும், சொற்றொடர்களையும், வாக்கியங்களையும் பிறர்மனதில் பதியும்படி திருப்பித் திருப்பிச் சொல்லுவார். அவர் ஒவ்வொரு விஷயத்தையும் கோர்வையாகவும் தெளிவாகவும் புத்தி சாதுர்யத்துடனும் வெளியிடுவார். இதைத்தான் அவருடைய பிரிகேடியர்களும் மேஜர் ஜெனரல்களும் பாராட்டுகிறார்கள்.

இந்த புராணத்துக்குரிய ரூபம் எதிர்பாராத சமயங்களில் போர்முனையில் எந்த இடத்திலும் காணப்படும். அவர் எங்கு சென்றாலும் இரண்டு அடையாளங்களுள்ள கருப்புக் குல்லாவைப் போட்டுக்கொண்டுபோவார். ஒரு சமயம் அவர் அந்தஸ்து அடையாளங்கள் இல்லாமல் பிரிடிஷ் யுத்த உடுப்பைபோட்டுக்கொள்ளுவார்.

ஆகிலும் சதாகாலமும் அவர் பருத்தியினால் செய்யப்பட்ட சல்லடங்களையும் மேல் சட்டையையும், இடது மார்பில் அமெரிக்க கௌரவ அடையாளத்தையும் அணிந்து இருப்பார். அதை அணிவதில் அவருக்கு கௌரவம் ஏற்படுவதாலும், நேசதேச சமஷ்டி வேலையிலும் அவருக்கு உள்ள மதிப்பை அது வெளிபடுத்துவதாலும் அதை அவர் அணிந்துகொள்ளுவார். நேசதேச சமஷ்டியைப்பற்றி அவர் அடிக்கடி பிரசாரம் செய்வார். அவர் முன்னணி துருப்புகளுக்குச் செல்லும்பொழுது அவர் திறந்த மோட்டாரில் செல்வார். அவருக்கு முன்னால் மற்றொரு மோட்டாரில் மூன்று ராணுவ போலீஸ்காரர்கள் சென்று சங்குகளை ஒலித்து ஜெனரல் செல்லுவதற்காக வழியை சுத்திசெய்யவேண்டுமென்று சொல்லுவார்கள். சங்கு ஒலியைக்கேட்டு மாண்டியின் மெய்க்காப்பாளர்களைப் பார்ப்பவர்கள் கழுத்தைத் திருப்பிக்கொண்டு வந்தனம் செய்வார்கள். ஜெனரலும் திருப்பி புன்சிரிப்புடன் பதில் வந்தனம் செய்து எல்லாவற்றையும் கவனத்துடன் ஆராய்ச்சி செய்வார்.

சில சமயங்களில் ஜீப்பை நிறுத்தி விட்டு பீதி அடைந்திருந்த பிரிடிஷ் ஸோல்ஜரைக் கூப்பிட்டுப் பேசுவார். ஸோல்ஜர் வாய் பேசாமல் சமிக்ஞை காட்டினாலும் அல்லது துணிவாக நல்ல முறையில் பதிலுரைத்தாலும் அவருக்கு திருப்தி ஏற்படும். ஏனென்றால் தனிப்பட்ட ஸோல்ஜர் சுகமாக இருந்தால் மேல் அதிகாரிகளும் சௌக்கியமாக இருப்பார்கள் என்று அவர் அபிப்பிராயப்படுவார். ஒருவர் யுத்தத்துக்கு முன் எந்த ஸ்திதியிலிருந்தார் என்றும் அவருடைய சம்சாரமும் குடும்பமும் எவ்விதம் ஜீவித்து வருகிறார்களென்றும் அவர் கேட்பார். அதன்பின் அந்த ஸோல்ஜருக்கு ஒரு சுருட்டு பாக்கிட்டைக்கொடுத்துவிட்டு வந்தனத்தைப் பெற்றுக்கொண்டு செல்லுவார்.

ஒவ்வொருவருக்கும் அவர் ஸிகரெட்டுகளை வழங்குவது சாத்தியமில்லை. ஆகையினால் அரியசேவை செய்த ஒரு டிவிஷனை அவர் பார்வையிடும்பொழுது அதன் கமாண்டரிடம் 10,000 சுருட்டுகளைக்கொடுத்து ஆபீஸர்களுக்கும் ஸோல்ஜர்களுக்கும் அவைகளைப் பங்கிடு செய்யும்படி சொல்லுவார். இந்த சுருட்டுகளின் கிரயத்தை அவரே கொடுத்து விடுவார்.

தீரச் செய்கைக்காக ஆபீஸர்களையும், ஸோல்ஜர்களையும் அவர் கௌரவிக்கும் பொழுது தான் அவருடைய நற்குணம் வெளிப்படும். பதக்கங்களை போர் முனையிலேயே வழங்க அவர் பிரியப்படுவார். அதற்கு அதிக ஆடம்பரமும் கிடையாது. பார்ப்பவர்களுக்கு அந்த வைபவம் நன்றாகத் தெரியும்படிக்கும் அவர் ஏற்பாடு செய்வார். கௌரவ அடையாளங்கள் பெற்றவர்களையும் அவர்கள் இருந்த பட்டாளத்தையும் அல்லது டிவிஷனையும் சேனைப்பகுதியையும் அவர்கள் கௌரவிக்கவேண்டுமென்று அவர் பிரியப்படுவார்.

வெகுமதியைப்பெற முன்வரும் ஒவ்வொருவருக்கும் அவர் இரண்டொரு வார்த்தைகளைச் சொல்லுவார். உன் பெயர் என்ன, உன்னுடைய ஊர் என்ன, உனக்கு கலியாணம் ஆகிவிட்டதா, குழந்தைகள் உண்டா, யுத்தத்துக்கு முன் ஜீவனத்துக்கு என்ன செய்து கொண்டிருந்தாய் என்றெல்லாம் கேட்பார். வட ஆபிரிக்க யுத்தத்தில் எட்டாவது சேனையுடன் இருந்ததற்காக ஒரு அடையாளத்தை ஒருவர் போட்டுக்கொண்டிருந்தால் "நாம் இதற்கு முன் ஒன்றாக நின்று போர் புரிந்தோம்." என்று அவனிடம் மாண்டி சொல்லுவார். எட்டாவது சேனையிலிருந்த பழைய ஸோல்ஜர்களும் ஆபிரிக்காவில் அவருடன் இல்லாத ஸோல்ஜர்களும் அவரைப் பாராட்டுகிறார்கள். ஒரு நாள் அவர் ஸோல்ஜர்களைப்பற்றி யுத்த நிருபர்களிடம் சொன்னார்.

"அவர்கள் சிறந்தவர்கள், ராணுவப் பதக்கம்பெற்ற ஒருவனை இதற்கு முன் உன்னுடைய பிழைப்பென்னவென்று கேட்டேன். நான் மாஞ்சஸ்டரில் ஐஸ்கிரீம் விற்பனை செய்தேன் என்று அவன் சொன்னான். அவர் இப்பொழுது முதல்தரமான ஸோல்ஜராகி விட்டார். இதுபோல் தான் பொதுஜன வாழ்வில் அநேக வேலைகளிலீடுபட்டவர்கள் இப்பொழுது அழகிய ஸோல்ஜராகிவிட்டார்கள்."

மாண்ட்காமரியின் பார்ச்வகதாளிடம் மாண்ட்காமரியைப்பற்றி பரிகாசமாகவோ அல்லது இழிவாகவோ வார்த்தைகளை ஒரு சிலர்தான் சொல்லக்கூடும். மாண்டி நம்பிக்கையை வளர்ச்சி செய்யும் தலைவர் என்ற அருத்தத்துடன் மாண்டி ஒரு சிறிய பிசாசு என்று ஒருவர் சொன்னால் அவரைக்கண்டு எல்லோரும் சிறவார்கள் அல்லது கேலிசெய்யும் முறையில் புன்னகை செய்வார்கள்.

---

## II

# இம்மனிதன் மாண்டி.

### ஏ. பி. ஹெர்பர்ட் எம். பி.

(டெயிலி டெலகிராப்).

போர்முனையிலுள்ள பீல்டு மார்ஷல் மாண்ட்காமரியை இரண்டு தடவை நார்மண்டியில் சந்தித்தேன். அப்பொழுது அவரிடம் ஒரு தேசப்படம் இருந்தது. வெற்றி பெறுவதற்கான திட்டமும் அவரிடம் காணப்பட்டது.

இங்கு ஒரு ரகசியத்தைக் கூறுவோம். போர் நடைபெறும்போது ஒரு பெரிய ஜெனரலின் தலைமைக்காரியாலயம் அதிக சுறுசுறுப்பும், சப்தமும், சிப்பந்திகள் அங்குமிங்கும் நடமாடுவதும், டெலிபோன்களில் மணி அடித்துக்கொண்டும், தகவல்களைக் கொண்டுபோகிறவர்கள் வந்துகொண்டும் போய்க்கொண்டும் ஏராளமான கிளார்க்குகளும் நிருபர்களும் காணப்படுவதாகவும் இருக்குமென்று நாம் நம்பலாம்.

எனக்குத் தெரிந்தமட்டில் மேற்சொல்லிய தோற்றம் மற்ற இடங்களில் காணப்படலாம். ஆனால் மாண்ட்காமரியின் தலைமைக்காரியாலயத்தில் அவ்விதமில்லை. போர்முனையிலுள்ள சேனாதிபதி ஆலோசனை செய்யவேண்டுமென்றும் அதற்குத் தேவையான காலமும் சந்நிவேசமும் வேண்டுமென்றும் அவர் சொல்லுவார்.

இதிலிருந்து இரண்டு விஷயங்கள் புலப்படும். அவர் ஏராளமான விவரங்களைப்பற்றி கவலைப்படுவதில்லை. அவரைச்சுற்றி கூட்டமும் காணப்படாது. அவரிடம் சதாகாலமும் இருக்கும் ஆபீஸர்கள் ஒரு சிறிய பொறுக்கி எடுக்கப்பட்ட சந்தோஷம் நிரம்பிய சிப்பந்திகள்தான். மற்ற இலாகாத் தலைவர்களும் அவர்களின் சிப்பந்திகளும் வேறு இடங்களில் இருப்பார்கள்.

ஆகிலும் அந்த ஜெனரல் வெகு தூரத்தில் சுகமாக உட்கார்ந்துகொண்டு போர்முனையை மறந்து அது எக்கேடு கெட்டுபோகட்டும் என்று சொல்லும் நிலைமையை நான் வர்ணிக்கவில்லை. மாண்டி தனித்திருப்பது காரணத்துடனும் சாஸ்திர முறையை ஒட்டியதும்தான். அவர் திட்டங்களைப் போடுவார். ஜெனரல்களும், சிப்பந்திகளும் விவரங்களைக் குறித்து அதை நடத்துவார்கள்.

அவருடைய கொள்கைகளின்படியே ஒரு வேலையை அவருடைய சிப்பந்திகள் செய்து முடிப்பார்கள் என்று அவருக்கு நன்றாய்த் தெரியும். இயற்கைக் குணமாக அமையும் வகையில் அவருடைய சிப்பந்திகள் அவ்விதமான நடவடிக்கைகளில் போதிக்கப்பட்டிருக்கிறார்கள். அவைகள் அடங்கிய ஒரு சாஸனத்தை நான் பார்க்க நேரிட்டது.

ஒரு வேலையை ஆரம்பிக்குமுன் அவர் ஆலோசனை செய்வார். அந்த சமயத்திலும் அவர் தன்னுடைய சொந்த நாட்டிற்கு கடிதங்களைத் தானே எழுதுவார். நார்மண்டிக்கு என்னை வரும்படி அழைத்த கடிதத்தையும் அதில் காணப்பட்ட விவரமான போதனைகளையும் நான் அடிக்கடி கண்ணோக்குவதுண்டு.

ஆகிலும் போரை அவர் மறந்துவிடுவதில்லை. நுட்பமான விவரங்களை அவர் கவனியா விட்டாலும் சமிதியில் கவனிக்கக்கூடிய முறையில் அவைகளை அவர் வைத்திருப்பார்.

நவம்பர்மீ ஹாலந்தில் அவர் தனித்து இருப்பதையும் அவருடைய படைகளிடையே அவருடைய ஆத்மசக்தி வியாபகத்தையும், அவருடைய புத்தி கூர்மையையும், சொல்வன்மை யையும் நான் கண்டு ஆச்சரியமடைந்தேன்.

ஒருநாள் காலையில் மியூஸ் நதிப் பகுதிப்போர் ஆரம்பித்தது. அன்று காலையில் லண்ட னிலிருந்துவந்த ஏழு பத்திரிகாசிரியர்களை பீல்டு மார்ஷல் வரவேற்றார். அவர் ஒரு சிறிய அறையிலிருந்தார். வெளிப்புறத்தில் டாங்குகள் கர்ஜித்துக்கொண்டிருந்தன. ஒரு மணி நேரம் யாதொரு குறிப்பன்னியிலும் அவர் சம்பாஷணை செய்தார். டி.-தினம் முதற்கொண்டு போர் நடவடிக்கையைப்பற்றிய அழகான விருத்தாந்தத்தையும் ஜெர்மன் ஜெனரல்கள், ஜெர்மன் சேனை முதலியவற்றைப்பற்றியும் அவருடைய யுத்த முறைகளைப்பற்றியும் டாங் கிகளைக் கட்டுவதைப்பற்றியும் இன்னும் மற்ற அநேக விஷயங்களைப்பற்றியும் அவர் பேசினார். வெகுகாலம் பயிற்சிபெற்ற நிர்வாக சபை மந்திரியும்கூட இவ்வளவு அழகாகப் பேசியிருக்க மாட்டார். ஒரு ஸோல்ஜர் இவ்விதம் பேசுவதைக்கண்டு எனக்கு ஆச்சரியம் உண்டாயிற்று. சாராயம் குடிக்காதவும், சுருட்டுப் பிடிக்காதவும், புஸ்தகங்களைப் படிக்கிறவும், வேத நூளிலுள்ள மேற்கோளை அடிக்கடி சொல்லுகிறவும் ஆன இந்த சந்யாசிபோன்றவும் கிராம் வெல்லைப் போன்றவும் ஆன உருவத்தைப்பற்றி அநேக கட்டுரைகள் எழுதப்பட்டிருப்பதால் அநேகர்களுக்கு இவரைப்பற்றி தப்பு அபிப்பிராயம் ஏற்பட்டிருக்கிறது. அவர் சதாகாலமும் துக்கம் கொண்டாடுகிறவர் அல்ல. அவரிடம் மிருதுவான ஆத்மிய குணமும் அமைதியான பரிகாசமும் காணப்படும். அவர் எழுதியுள்ள புஸ்தகத்தைப் பார்த்தாலே இது வெளியாகும்.

ருன்ஸ்டெட் தாக்கியபொழுது மாண்ட்காமரி மிகவும் திரமையுடன் இருந்தார், என்று அவருடைய சிப்பந்தி ஒருவர் சொன்னார். அப்பொழுதும் அவர் பரிகாசம் செய்து வந்தார். நெருக்கடி பலமாக இருந்தபோதும்கூட அவர் சிற்றுண்டிக்கு வரும்போது பின்வருமாறு சொன்னார். "இது ரொம்ப அபாயம். இந்தத் தடவை நாம் டங்கர்க் வழியே செல்லமுடியாது. அங்கு ஜெர்மானியர்கள் இருக்கிறார்கள்." நிலைமை கெடுதலாக இருக்கும் பொழுதும் அவர் உத்ஸாகத்துடன் இருப்பார்.

அவர் மதுபானங்களைக் குடிப்பதில்லை. ஆகிலும் போஜனகாலத்தில் மற்றவர்கள் குடிக் கலாம். அவர் இந்த சமயங்களில் பிறரை சுருட்டு பிடிக்கும்படிக்கும் வற்புறுத்துவார்.

அவர் அநேக புஸ்தகங்களைப்படிப்பார். $9\frac{1}{2}$ மணிக்கு தூங்கச்செல்வார். மற்றவர்கள் அவ்விதம் செய்யவேண்டும் என்று அவர் எதிர்பார்ப்பதில்லை. அவருக்கு எல்லா விஷயத்திலும் அபிருசி உண்டு. ஆனால் மற்ற சில பிரமுகர்களைப்போல் பிறருக்கு அவர் உபதேசம் செய்வ தில்லை. அவர் செவி கொடுப்பார். பேசவும் பேசுவார். சோல்ஜரைத் தவிர மற்ற விஷயங் களிலும் அவருக்கு அபிப்பிராயங்கள் உண்டு. பிரிட்டனுடையவும் ஐரோப்பாவினுடையவும் எதிர்காலத்தைப்பற்றி அவருக்குச் சொந்த அபிப்பிராயம் உண்டு. ஆனால் அவர் சொல்லுவது போல் ராஜீயத்தில் கலந்துகொள்ளமாட்டார் என்று நான் சொல்லுகிறேன்.

ஆகிலும் பிரபுக்கள் சபையில் அவர் அங்கத்தினராக ஆவதை ஒருவரும் தடுக்கமுடியாது. அப்பொழுது அச்சபைக்கு நாம் நன்றி செலுத்த முகாந்திரம் ஏற்படும். ஏனெனில் அங்கு இப்பெரியார் அநேக விஷயங்களை எடுத்துச் சொல்லக்கூடும்.

---

## டெட்டர்—விமானப்படை உதவிக்கு திட்டம் போட்டவர்.

(ரோனல்ட் வாக்கர்).

காலை போஜனத்தின்பொழுது வாலிபமுள்ள ஸ்காட்டிஷ் சோல்ஜர் ஒருவர் எனக்கு முன்னாலிருந்த நாற்காலியில் உட்கார்ந்து சாப்பாட்டுத்தட்டை தொட்டுக்கொண்டு பத்திரிகையை காபி ஜாடியின் மேல் வைத்து சீட்டி அடித்தார்.

டெட்டர் என்ற விமானி டெபுடி உயர்தரத்தலைவராக நியமிக்கப்பட்டிருக்கிறார் என்று சொல்லி மறுபடியும் சீட்டி அடித்தார்.

பிரிடிஷ் விமானப்படையைச்சேர்ந்த ஆபீஸர் மூன்று சேவைப்படைகளுக்கும் உயர்தர கமாண்டராக நியமிக்கப்பட்டதைக்கண்டு வியப்புற்று இவ்விதமாக எவ்வளவு பேர் சீட்டி அடித்திருப்பார்கள் என்று நான் ஆச்சரியப்படுகிறேன்.

ஜெனரல் ஈஸன்ஹவருக்கு டெபுடியாக விமானப்படை சீப் மார்ஷல் ஸர் ஆர்தர் டெட்டரின் நியமனம் வெளியிடப்பட்டபொழுது அவர் மத்ய கிழக்கிலும், வடக்கு ஆபிரிக்காவிலும், ஸிஸிலியிலும் நிறுவப்பட்ட விமானப்படையின் டாக்டிகல் ஸ்ட்ராடஜிகல் நடவடிக்கைகளை ஐரோப்பாவிலும் அபிவிருத்தி செய்வார் என்று நிச்சயமாகச் சொல்லப் பட்டது.

வட ஆபிரிக்காவிலுள்ள டெட்டரின் தலைமைக்காரியாலய ஆபீஸில் நான் அவருடன் ஒரு மணி நேரம் பேசிக்கொண்டிருந்தேன். அந்த அறையில்தான் ஸிஸிலி, இதாலியின் படையெடுப்புக்கு திட்டம் போடப்பட்டது. மடக்கு மர நாற்காலிகளால் சூழப்பட்ட சாதாரணமான கறுப்பு சாப்பாட்டு டேபிளில் ஆறும் ஜார்ஜ் மன்னரும், மிஸ்டர் வின்ஸ்டன் சர்ச்சிலும் உண்டி சாப்பிட்டிருக்கிறார்கள். சுவர்களில் யுத்தத்தைப்பற்றியுள்ள அநேகம் படங்கள் தொங்கவிடப்படுகின்றன. இவைகளைக்கண்டு ஜெர்மானியர்களுக்கு ஆனந்தம் உண்டாயிருக்கும்.

ஸர் ஆர்தர் டெட்டர் இரும்புக்கம்பிகள் உள்ள ஒரு ஜன்னல் பக்கம் முதுகை வைத்துக் கொண்டு உட்கார்ந்து இருந்தார். அதற்குப்பின் மத்தியதரைக்கடலில் சூரியன் பிரகாசித்துக் கொண்டிருந்தது. யுத்தத்திலேயே புகழ்பெற்ற டெட்டரின் தோற்றமும் நடைமுறையும் அவருக்குப் பொருத்தமானதல்ல. சாதாரண உயரத்துக்குக் குறைவும், வெண்மையான செங்குத்தான மெலிந்த மயிரும் உள்ள ஸர் ஆர்தர் டெட்டரின் தோற்றம் அமைதியும் சந்தேகமும் உள்ளதாகத் தோன்றும். அவர் சுருட்டுப் பிடித்துக்கொண்டே மெதுவாகப் பேசுவார். அவர் உற்றுக் கேட்பார். அவ்விதம் செய்கிறார் என்று முதலெடுப்பில் ஒருவரும் அறியமுடியாது.

பிரிடிஷ் விமானப்படையில் இப்பொழுதுள்ள அநேக பிரமுகர்களைப்போல அவரும் ஜோல்ஜராக இருந்து விமானியாகமாறி முதல் உலக யுத்தத்தில் பிரிடிஷ் விமானப்படையில் அமர்த்தப்பட்டார். இரண்டு யுத்தங்களுக்கும் நடுவில் பிரிடிஷ் விமானப்படையில் அநேக வேலைகளில் அமர்ந்தபின் 1941-ம் வருஷம் மேமீ மத்திய கிழக்கில் விமானப்படை கமாண்டராக டெட்டர் நியமிக்கப்பட்டார். அப்பொழுதுதான் சேனைக்கு விமானப்படை உதவி திட்டத்தை அவர் நிறுவினார். அதன்பின் அது பரிஷ்காரமடைந்து இறுதியில் தரைப்படை, கடற்படை, விமானப்படை ஒத்துழைப்பாக பூர்த்தி அடைந்தது. அதன் பயனாகத்தான் வட ஆபிரிக்காவிலிருந்து ஜெர்மன் இதாலியப்படைகள் துரத்தி அடிக்கப் பட்டன. ஸிஸிலி, இதாலியப் படையெடுப்பின் வெற்றியும் உறுதிப்பட்டது. அன்று டெட்டர் பேசியபொழுது நான் டெட்டரையும் கவனித்துவந்தேன். அவரைப்பற்றி விவரங்கள் எனக்கு ஞாபகம் வந்தன. அவர் சாதாரணமான அபிலாஷைகளும் பழக்கமும் உள்ளவர். சேனாதிபதிக்குள்ள ஆடம்பரங்களைக் களைத்துவிட தயாராக உள்ளவர். அவர் மனித இயல்பு, அன்பு, விநோத மனப்பான்மை உள்ளவர். ஆபீஸர்களையும் விமானிகளையும் ஆதரிப்பவர். பிரயாசைப்படுவதில் அவர் பின்வாங்கமாட்டார்.

ஒரு நடவடிக்கையின் பொழுது அவர் காக்கிடிரில் சல்லடங்களையும் காக்கி மேலங்கியையும் அணிந்து விமானப்படை அடையாளமும் அல்லது நாடாக்களும் அவருடைய அந்தஸ்துக்குரிய தோள் அடையாளங்களையும் போட்டுக்கொள்ளாமல் வெளியே செல்வார். எந்த ஜெனரலும் இவ்வளவு சாதாரணமாகவும் பிறரை ஏமாற்றக்கூடியவகையிலும் ஆடை அணிந்துகொள்ள மாட்டார்.

டெட்டர் அவருடைய அமைதியான உறுதியான முறையில் விமானிகளுடையவும் தரைப்படையினருடையவும் மதிப்பையும் அன்பையும் ஆழ்ந்த விசுவாசத்தையும் சம்பாதித்து விட்டார்.

அன்று டெட்டருக்கு சமீபத்தில் ஜெனரல் ஈஸன்ஹவரும் உட்கார்ந்திருந்தார். அவ்விருவரும் தரைப்படையினுடையவும் விமானப்படையினுடையவும் ஒத்துழைப்பைப் பற்றியும் தவறுதல்களின் மூலம் ஜெர்மானியர்கள் நமக்கு உபயோகமுள்ள படிப்பினைகளை போதித்திருக்கிறார்கள் என்றும் பேசிக்கொண்டிருந்தார்கள்.

மெதுவாக் ஸர் ஆர்தர் டெட்டர் இதுவரையில் வெற்றிகரமாக முடிந்த ஒத்துழைப்பை விவரித்தபின் ஒத்துழைப்பின் கொள்கைகளை விளக்கிச் சொன்னார். சில சமயங்களில் அதை நிறுத்திக்கொண்டு சுருட்டுக்குழாயை மேஜையின்மேல் தட்டுவார். சில சமயங்களில் ஈஸன் ஹவர் "ஆர்தர், நான் ஒப்புக்கொள்ளுகிறேன். ஆனால்" என்று குறுக்கிடுவார்.

நண்பர்களும், போர்முனை நண்பர்களும் ஆன இருவருக்கும் அநேக வித்யாசங்கள் உண்டு

ஈஸன்ஹவர் பருத்த சரீரம் உள்ளவர். சிவப்பு நிறம் உள்ளவர். அழுத்தமான கம்பீரத்வனி உள்ளவர். டெட்டர் மெல்லிய சரீரமுள்ளவர், வெளுத்தவர், இனிமையான குரலுள்ளவர். சுருட்டுப்பிடித்துக்கொண்டு அவர் கனவு காணுவதுபோல் தோன்றினாலும் அந்த மாயையை அகற்றி திடீரென்று பேச ஆரம்பித்து பேச்சில் உள்ள அனாவசியமான பாகத்தைத் தள்ளிவிட்டு குறிப்பான விஷயத்தைப்பற்றி பேச ஆரம்பிப்பார். இதிலிருந்து சம்பாஷணையின் ஒரு வார்த்தையைக்கூட அவர் கவனியாமல் இல்லை என்று தெரியவரும். அவர் எல்லாவற்றையும் மனதில் பதிவு செய்துகொண்டு அவற்றை பாகுபாடு செய்து அவற்றைப்பற்றி சுருக்கமாக குறைகூறிவிடுவார்.

டெட்டர் ஆரம்பத்தில் சிறந்த படிப்பாளி, பிறகு அவர் ஜோல்ஜர் ஆனார் பிரிடிஷ் விமானப்படையின் முதல் 25 வருஷ வளர்ச்சியில் டெட்டர்தான் மிகவும் பெரிய தலைவர் என்று சரித்திரம் பதிவு செய்யும். ஏனெனில் அவர் காலத்தில்தான் யுத்தத்தில் விமானப் படையின் சக்தி திறம்பட உபயோகப்படுத்தப்பட்டது.

---

# பாம்பர் படைத்தலைவர் ஹாரிஸ்.

**ஹவார்ட் மார்ஷல்.**

(B. B. C. ஒலிபெருக்கு).

ஜெர்மனியையும் ஆக்கிரமிப்பு ஐரோப்பாவையும் நொருக்கும் வேலையில் ஈடுபட்ட பிரிடிஷ் பாம்பர் கமாண்டின் சேனாதிபதியான விமானப்படை சீப் மார்ஷல் ஸர் ஆர்தர் ஹாரிஸைப்பற்றிக் கூறுவோம்.

அவர் 1892-ல் செல்டன்ஹாமில் பிறந்தார். அவருடைய பால்யத்தில் அவர் அநேக துணிவுகரமான நடவடிக்கைகளில் ஈடுபட்டு அனுபவம் பெற்றார். அவரை சேனையில் சேர்ப்பதாக அவருடைய தகப்பனார் நினைத்திருந்தார். ஹாரிஸுக்கு வேறு எண்ணங்கள் இருந்தன. ஸாண்ட்ஹர்ஸ்டுக்குச் செல்லாமல் தங்கம் விளையும் ஆபிரிக்காவுக்கு அவர் சென்றார்.

ஆனால் அவருடைய எண்ணம் நிறைவேறவில்லை. ரோடீஷியாவிலுள்ள தங்கப் பிரதேசங்களில் சிறிது காலம் இருந்துவிட்டு தபால் வண்டிகளை ஓட்டும் வேலையில் அவர் அமர்ந்தார். முதலில் அவைகள் குதிரை பூட்டிய வண்டிகள். பிறகு மோட்டார்கள் வந்தன. ரோடீஷியாவில் சொந்தக் கார்களில் முதல் வண்டியை ஓட்டியவர் ஹாரிஸ்தான்.

அடித்தபடியாக புகையிலை பயிரிடுவதில் அவர் ஈடுபட்டார். 1914-ம் வருஷத்தில் யுத்தம் மூண்டபொழுது அவர் முதலாவது ரோடீஷிய சேனையில் சேர்ந்துகொண்டு தெற்கு, தென்மேற்கு ஆபிரிக்காவில் சேனையிலிருந்துவந்தார்.

1915-ல் இங்கிலாந்துக்குத் திரும்பிவந்து பிரிடிஷ் விமானப்படையில் சேர்ந்துகொண்டார். அடுத்த இரண்டு வருஷங்களில் அவர் மேற்குப் போர்முனையில் விமானப்படை நடவடிக்கையில் ஈடுபட்டார். விமானப்படை பதக்கம் பெற்றார். யுத்த நிறுத்த முறையில் விமானப்படைகளுக்குத் தலைமை வகித்தார். யுத்தத்துக்குப்பின் பிரிடிஷ் விமானப்படையில் படைத்தலைவராக நிரந்தரமான கமிஷன் உத்தியோகம் பெற்றார். சேனையுடன் ஒத்துழைக்கும் விமானப்படையுடன் அவர் இந்தியாவில் வேலைபார்த்தார். அதன்பின் அந்தப்படை இராக்கிலும், மத்திய கிழக்கிலும், பிரிடனிலும் வேலை செய்துவந்தது.

அவர் எங்கு வேலை பார்த்தாலும் அவருக்கு பெரிய யந்திரங்களில் அதிக அக்கரை உண்டு. அந்நாளிலேயே வருங்கால யுத்தங்களில் வெடிகுண்டுகள் பெரும்பங்கு எடுத்துக் கொள்ளுமென்று அவருக்கு தோன்றிற்று. இங்கிலாந்துக்குத் திரும்பிவந்தபின் அவர்

உயர்தர ஆபீஸர்களின் பயிற்சிபெற்ருர். அதன்பின் அவர் கனமான வெடி விமானப் படையின் தலைவராக நியமிக்கப்பட்டார். சேனை சிப்பந்திகளின் கல்லூரியில் பயிற்சி பெற்ற பின் அவர் நடவடிக்கைகளினுடையவும், தப்பறியும் வேலையினுடையவும், டிபுடி டிரக்டராக விமான இலாகாவில் வேலை பார்த்தார். 1937-ம் வருஷத்தில் அவர் விமானப்படை கமோடார் என்ற பதவிக்கு உயர்த்தப்பட்டார். அடுத்த வருஷத்தில் விமான இலாகா தூதுகோஷ்டியுடன் அவர் அமெரிக்காவுக்கும் கனடாவுக்கும் சென்ருர். அதிலிருந்து திரும்பி வந்தபின் பாலஸ்டினிலும், டிரான்ஸ்ஜோர்டானிலும் விமானப்படைத் தலைவராக நியமிக்கப்பட்டார். 1939-ம் வருஷம் ஜுலை மாதம் அவர் விமானப்படை உதவி மார்ஷலாக நியமிக்கப்பட்டார். நியமிக்கப்பட்டவுடன் இங்கிலாந்துக்குத் திரும்பி வந்தார். யுத்தம் துவங்கிய ஒன்று அல்லது இரண்டு நாட்களுக்குப்பின் அவருக்கு வெடிவிமானப்படையில் ஒரு பகுதியின் கமாண்டு கொடுக்கப்பட்டது. அதன் பிறகு விமானப்படை இலாகாவில் சிப்பந்திகளின் டிபுடி தலைவராக அவர் விமான இலாகாவுக்குச் சென்ருர். ஆறு மாதத்துக்குப்பின் அமெரிக்காவுக்கு உபரி விமானங்களை வாங்கச் சென்ற விமானப்படை கோஷ்டியின் தலைவராக மறுமுறை சென்ருர். 1942-ம் வருஷம் பிப்ரவரி மாதத்தில் பாம்பர்படையின் சேனாதிபதியாக ஆனார். அதற்கு ஒரு வருஷத்துக்கு முந்தியே ஆக்டிங் விமானப்படை மார்ஷலாக அவர் உத்தியோகம் வகித்தார்.

ஹாரிஸ் நேர் வழியில் செல்பவர். சமயம் வரும்போது உடன்காலத்திலேயே அவர் நடவடிக்கைகளை ஆரம்பிப்பார். வேலைக்குக் குதாவடை செய்யும் ஆபீஸ் பழக்கங்களையும் அல்பமான கட்டுப்பாடுகளையும் அவர் பொறுக்கமாட்டார்.

1915-ம் வருஷத்தில் பிரிடிஷ் விமானப்படையில் அவர் சேர்ந்துகொண்டதுமுதல் கடல் விமானம் முதல் இரவு சண்டை விமானம் வரையில் சகலவிதமான விமானங்களிலும் அவர் சென்றிருக்கிருர். ஆகிலும் ஜெர்மனியை பிரிடிஷ் விமானங்கள் தாக்குவதில் மேன்மையான நிலைமையை ஏற்படுத்தியவர் என்பது ஹாரிஸ்தான். எதிரியை ஸ்தம்பிக்கச் செய்யும் வெடி குண்டு வீச்சை ஆரம்பித்தவர் அவர்தான். லக்ஷியத்தை துலக்கிக்காட்டும் விமானப்படை முறையைப் பரிஷ்காரம் செய்தது அவர்தான். இதுதான் ஹாரிஸைப்பற்றிய விவரம்.

---

## வெற்றிபெற்ற மூவர்.

### சூகோவ், ராகோஸோவ்ஸ்கி, கோனியேவ்.

**H. J. அக்ஸ்லென்.**

மாஸ்கோத் தெருவிலுள்ள ஒலிபெருக்கும் கருவிகள் சேனையைப்பற்றிய அறிக்கைகளை வெளியிடும்பொழுதும் புதிய வெற்றிகளைப்பற்றிச் சொல்லும்பொழுதும் அவைகள் பின் வருமாறு துவக்குகின்றன. "மார்ஷல் ஸ்டாலினின் செய்தி", அதன்பின் வெற்றிபெற்ற சேனைத்தலைவர்களின் பெயர்கள் சொல்லப்படும். இவ்விதமாக செஞ்சேனையின் வெற்றிகளுடன் மார்ஷல்களின் பெயரும் பொதுமக்களின் மனதில் பதியவைக்கப்படும்.

முதல் செய்தி, மாஸ்கோவுக்குமுன் ஜெர்மன் படைகள் பின்துறத்தியடிக்கப்பட்ட பொழுது வெளியிடப்பட்டது. அது கிரிகரி கான்ஸ்டாண்டினேவிச் சூகோவுக்கு விடுவிக்கப் பட்டது.

இது 1941-ம் வருஷம் இலையுதிர்காலக் கடைசியில். அக்டோபர் மாதம் 3-ம் தேதியன்று ருஷ்ய சேனைகள் நிச்சயமாக நிர்மூலமாக்கப்பட்டன என்று ஹிட்லர் வெளியிட்டான். மார்ஷல் ஸ்டாலினைத் தவிர ருஷ்ய நிர்வாகம் குபிஷேவுக்குச் சென்றுவிட்டது. மாஸ்கோ சில வாரங்களில் விழுந்துவிடுமென்று தோன்றிற்று. அந்த நெருக்கடியான நாளில் சூகோவ் சேனைத் தலைவர் பதவியை ஏற்றுக்கொண்டார். கிரெம்லினிலுள்ள அவருடைய விடுதிக்கு அவர் சிப்பந்திகளை அழைத்து பின்வருமாறு சொன்னார். "கையைத் தூக்குங்கள். நான் சொல்லுவதுபோல் சொல்லுங்கள். மாஸ்கோ ஒருபொழுதும் வீழ்ச்சிபெருதென்று பிரமாணமாகச் சொல்லுகிருேம்".

அது நிறைவேறிவிட்டது. 48 வயதுள்ள சூகோவ் அப்பொழுதுதான் ஜனங்களின் மத்தியில் தோன்றினர். 1897-ம் வருஷத்தில் ஒரு சிறிய ருஷ்ய விவசாயியின் குடிசையில் தோன்றிய ஒருவரின் வாழ்க்கை உச்சநிலையை அடையத் துவங்கிற்று. 1915-ம் வருஷத்தில்

18 வயதுள்ள ஜுகோவ் முதல் முதலில் ஸோல்ஜரின் ஆடையணிந்து ருஷ்ய சேனையில் சேர்ந்துகொண்டார். 1918-ம் வருஷத்தில் ஜுகோவ் செம்படையில் ரெகுலர் ஸோல்ஜராகச் சேர்ந்துகொண்டார். டிமோஷன்கோவின்கீழ் அவர் முதலாவது குதிரைப்படையுள்ள சேனையுடன் உள்நாட்டுப் போரை நடத்தினர். உள்நாட்டுப் போரில் செம்படை வெற்றி பெற்றது.

புதிதாக அமைக்கப்பட்ட நிர்வாகம் வெளிநாட்டு எதிரிகளிடமிருந்து அபாயத்துக்குட் படாமல் பத்திரமாக இருக்கவேண்டுமென்றும் அறிந்தது. ருஷ்ய தற்காப்பு கமிஸாரியட்டின். திட்டத்தில் திறமையுள்ள ஆபீஸர்களைப் பயில்விப்பதுதான் ஒரு முக்கிய அம்சமாக இருந்தது. ஷாபோஷ்னிகோவும், வொரொஷலாவும் ராணுவ அகாடமியில் போதகர்கள். ஜுகோவ் அவர்களின் மாணக்கனுன். ராணுவ அதிகாரிகள் வேலைக்குப் பயிற்சி செய்வதற்காக பிரான்ஸ் ராணுவ அகாடமிக்கு அனுப்பப்பட்டவர்களில் அவரும் ஒருவர். 1933-ம் வருஷத்தில் அகாடமியிலிருந்து உயர்வான கௌரவங்களுடன் வெளியேறினர்.

1937-ம் வருஷத்தில் குதிரைப்படையின் தலைவராக இருந்தார். ஒரு வருஷத்திற்குப் பின் அவர் மங்கோலியாவில் சாகிங்கோலுக்கருகில் போர் அனுபவம் பெற்ருர். எல்லைச் சரகத்தில் நடைபெற்ற ஒரு சம்பவத்தில் அவருடைய டாங்கிகள் ஜப்பானியர்களை ஓடும்படி செய்தன. 1940-ம் வருஷத்தில் கீவிலுள்ள ராணுவப் பகுதிக்கு சேனைதிபதியாக நியமிக்கப் பட்டார். கொஞ்ச காலத்திற்கு அவர் காரியாலய சிப்பந்திகளின் தலைவராக இருந்தார். 1941-ம் வருஷத்தில் அவர் டிபுடி தற்காப்பு கமிஷனராக நியமிக்கப்பட்டார். அந்த வருஷம் அக்டோபர் மாதத்தில் அவரை மாஸ்கோவின் தற்காப்புப்படையின் தலைவராக ஸ்டாலின் நியமித்தார்.

ஸ்டாலினைச் சேர்ந்தவர்களுக்கு இந்த நியமனத்தில் அதிக நம்பிக்கை இல்லை. "ஜுகோவ் சூக்ஷ்ம புத்தியுள்ளவரில்லை, அவரை ஏன் நியமிக்கவேண்டும்" என்று அவர்கள் கேட்டதற்கு ஸ்டாலின் பதிலுரைத்தாராம். "இருக்கலாம். ஆனால் அவருக்கு திடமான சித்தமுண்டு" என்று.

ஸ்டாலினுக்கு ஏற்பட்ட நம்பிக்கை பூர்ணமாக நிறைவேறிவிட்டது. யுத்த தந்திரத்தை நிறுவுவதிலும், அல்லது போர்முனையில் போரை நடத்துவதிலும், ஸ்டாலின்கிராடில் ருஷ்ய வெற்றிக்கும், லெனின்கிராடின் விடுதலைக்கும் ஜுகோவ் புகழ்பெற்ருர். அவருடைய சேனை தான் ஜெர்மனியின் வீழ்ச்சிக்கு முக்கிய காரணமாக இருந்தது.

அக்டோபர் மாதத்தில் மாஸ்கோவின் கதியும் யுத்த முடிவும் சந்தேகமாக இருந்த பொழுது ஜுகோவிடம் இரண்டு லெப்டினண்ட் ஜெனரல்கள் இருந்தார்கள். அவ்விருவரும் இன்னும் அவருடன்கூட இருந்து போர்புரிகிருர்கள். அவர்களும் மார்ஷல் பதவியை அடைந்துவிட்டார்கள்.

ஒருவர் கான்ஸ்டண்டைன் கான்ஸ்டாண்டினேவிச் ரோகோஸோவ்ஸ்கி. அவர் மெல்லிய சரீரமும், உயரமான ஆகிருதியும் உள்ளவர். அவரை 50 வயது ஆனவர் என்று சொல்ல முடியாது. வார்ஸாவில் இஞ்ஜின் ஓட்டுகிறவரின் மகனை அவர் முதல் முதலில் சாரின் 5-வது டிராகூன் படையில் சேர்ந்துகொண்டார். புரட்சி ஏற்பட்டபொழுது அவருடைய ராணுவத் திறமையைக் காண்பிக்க அவருக்கு சந்தர்ப்பம் கிடைத்தது. 30-வது டிவிஷனிலுள்ள குதிரைப்படையின் தலைவராக அவர் கோல்ட்சாக்கை எதிர்த்துப் போராடினர். அதற்குப் பின் சமாதான காலங்களில் அவர் ராணுவ சாஸ்திரங்களை ஆராய்ச்சி செய்துவந்தார்.

ராணுவ அகாடமியில் அவர் ஜுகோவின் கவனத்தைக் கவர்ந்தார். படிப்பு முடிந்தபின் அவர் குதிரைப்படை பிரிகேடின் தலைவராக நியமிக்கப்பட்டார். 1941-ம் வருஷம் ஜுன் மாதத்தில் அவர் டாங்கிப்படையின் தலைவராக இருந்தார். அதன்பின் மாஸ்கோவின் தற்காப்பில் முக்கியமான பங்கெடுத்துக்கொண்ட சேனைக்குத் தலைமை வகித்தார்.

மாஸ்கோவுக்கான போர் ஆரம்பித்தபொழுது அவர் போர்முனையிலுள்ள ஆஸ்பத்திரியில் காயம்பட்டுக் கிடந்ததாகவும் போர்முனைக்குப் போகும்படி அனுமதி தரவேண்டுமென்று அவர் ஸ்டாலினை வேண்டிக்கொண்டதாகவும் சொல்லப்படுகிறது. அது எவ்விதமிருப்பினும் மாஸ்கோவில் காண்பிக்கப்பட்ட ஒரு படம் அதிகமாக ஜனங்களின் மனதைக் கவர்ந்தது. அந்தப் படம் மாஸ்கோ போரின்பொழுது மார்ஷல் ஸ்டாலின் சேனைத் தலைவர்களுடன்

மகாநாடு நடத்தினதாக வெளியிட்டது. அந்தப் படத்தில் ஸ்டாலினுக்குப் பின்புறத்தில் தலையில் கட்டுடன் ரோகோஸோவ்ஸ்கி நின்றுகொண்டிருந்ததாகக் காணப்பட்டது.

ஸ்டாலின்கிராட்டுக்கான போரில் ரோகோஸோவ்ஸ்கி சரித்திரப் புகழ்பெற்றார். ஸ்டாலின்கிராட் படைகளை விடுவித்ததும் ஜெனரல் பீல்ட் மார்ஷல் பாலஸைச் சரணடையும் படிக்கும் செய்த சேனைகளுக்கு அவர் தலைமை வகித்தார்.

மாஸ்கோவில் சூகோவுடன் போரில் ஈடுபட்ட மற்றொரு வாலிபமுள்ள ஜெனரல் இவான் ஸ்டெபனேவிச் கோனியேவ். சூகோவையும், ரோகோஸோவ்ஸ்கியையும் போல அவரும் முதலில் சாரின் படையில் சேர்ந்துகொண்டார். ருஷ்யப் புரட்சிமூலம் தோன்றிய வாலிபமுள்ள ராஜீய ஸோல்ஜர்களில் அவர் குறிப்பானவர். அவரும் ருஷ்ய சேனையில் படிப்படியாக கியாதிபெற்றார்.

சூகோவ் வெளியிட்ட ஒரு செய்தியிலிருந்து கோனியேவைப்பற்றி அவருடைய சகாக்கள் என்ன நினைக்கிறார்கள் என்று காணலாம். "கோனியேவ் நினைக்கிறபடி அவர் செய்துவிட்டால் அவருக்கு சமமாக ஒரு ஜெர்மானியரும் இருக்கமுடியாது". அவருடைய யுத்த தந்திரத்தைப்பற்றி கோனியேவே பின்வருமாறு சொன்னார். "எதிரி நம்மிடம் எதை எதிர் பார்க்கிறான் என்று நாம் நிச்சயமாக அறிந்துகொள்ளவேண்டும். அதன்பின் அதற்கு மாறாக நடவடிக்கைகளை நாம் செய்துவரவேண்டும்."

ஸ்டாலின்கிராட் போரில் ரோகோஸோவ்ஸ்கி பேர்பெற்றதுபோல, கோனியேவும் கோர்ஸனில் ஜெர்மன் 8-வது சேனையை வளைத்துக்கொண்டு அதை நிர்மூலமாக்கினார் என்றும் நீபர் நதிக்குப் போகும் மார்க்கத்தைத் திறந்துவிட்டார் என்றும் புகழ்பெற்றுவிட்டார். அதற்குப்பின் ஒரு வருஷத்திற்குள் கோனியேவின் சேனை வெகுதூரம் முன்னேறி நீபரிலிருந்து ஜெர்மனிக்குள் வந்துவிட்டது.

---

# ஸ்திரீகள் நிலைமையை அபிவிருத்தி செய்தார்கள்.

## உபரி மனித பலத்தை அவர்கள் தந்தார்கள்.

### காரெலைன் ஹாஸ்லெட்.

இந்நாட்டில் ஸ்திரீகள் பேருதவி செய்தார்கள். தொழிற்சாலைகளுக்கு ஸ்திரீகளின் உதவி என்ற மூல சக்தியும், சாமார்த்தியமும் நமக்கு கிடைத்திராவிட்டால் ஜெர்மனியின் ராணுவ சக்தியை சமாளித்து நாம் தலைதூக்கி இருக்கமுடியாது.

இது ஒரு ஸ்திரீ தலைவரின் வார்த்தைமட்டுமல்ல. பிரிடனின் தொழிலாளர் தேசீய சேவை மந்திரியான மிஸ்டர் ஏர்னெஸ்ட் பெவினும் இதே மாதிரி அபிப்பிராயப்பட்டிருக்கிறார்.

யுத்தம் காரணமாக ஸ்திரீகளின் வாழ்க்கையில் தானாகவே மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. டன்கர்க்குக்குப் பிறகு பிரிடன் தன்னந்தனியே நின்றபொழுதும், சேனைக்கு உள்ள முஸ்தீப்பு பூராவும் இழந்தபொழுதும், அவசரமாக அமைக்கப்பட்ட உள்நாட்டு தற்காப்பு வாலண்டியர் படைகள் துடைப்பங்களைக் கொண்டு கவாத்து செய்துவந்தபோதும், படையெடுப்பு பீதி மிகுதியாக இருந்தபொழுதும் பிரிடன் பிழைத்திருக்க போதுமான யுத்த தளவாடங்களை உற்பத்தி செய்வதற்காக எல்லா ஜனங்களின் பூரா ஐசுவரியத்தையும் திரட்ட வேண்டுமென்று உணர்ச்சி ஏற்பட்டது.

ஆகையால் பிரிடிஷ் ஸ்திரீகள் தங்களுடைய சுயேச்சையை ஒரு சிறிது விட்டுக்கொடுத்தார்கள். நாடெங்கும் சம்மதத்தின்பேரில் கட்டாயமுறை அமுலுக்கு வந்தது. சரித்திரத்திலேயே முதன் முதலாக குடித்தன பாந்தவ்யமில்லாத பிரிடிஷ் ஸ்திரீகள் வீட்டை விட்டுச் சென்று நூற்றுக்கணக்கான மைல்கள் தாண்டி வேலைசெய்ய வேண்டுமென்று உத்தரவிடப்பட்டது.

பிரிடனில் ஸ்திரீப் படைகளைத் திரட்டியதைப்பற்றிய தகவல்கள் பத்திரிகைகளில் வெளியிடப்பட்டிருக்கின்றன. இந்த நடவடிக்கையின் உண்மைகளையும், ஞாபகத்தையும் பிரிடனுக்கு வெளியே உள்ளவர்கள் அறிவது மிகவும் சிரமம்.

வேலைக்கு அமர்த்தும் உத்தரவு பிரகாரம் 18 வயது முதல் 50 வயது வரை உள்ள ஒவ்வொரு ஸ்திரீயும் வேலைக்கு பதிவு செய்துகொள்ள வேண்டும். 60 வயது வரையுள்ள ஸ்திரீ தொழிலை மாற்றிக்கொள்ள வேண்டுமானால், தொழிலாளர் மந்திரி இலாகாவுக்கு அறிமுகப்படுத்த வேண்டும். குடித்தனத்தை நடத்தக்கூடிய 50 வயது வரையிலுள்ள ஸ்திரீகள் அரைகுறையான கால அளவு வேலைசெய்ய வேண்டும். ஸ்திரீகள் இவ்விதமாக தங்களுடைய சுதந்திரத்தை விட்டுக் கொடுக்க வேண்டியதாயிருப்பதால் தனிப்பட்ட கேஸ்களில் சிரமம் ஏற்படாமல் பார்த்துக்கொள்வதற்காக முன் ஜாக்கிரதைகள் செய்யப்பட்டிருக்கின்றன. அதற்காக உள்நாட்டு அப்பீல் சங்கங்களும், கஷ்டத்தைக் கவனிக்கும் நியாய ஸ்தலங்களும் அமைக்கப்பட்டன. இதுதான் அமைப்பு. அதன் விளைவுகள் என்ன?

18 முதல் 40 வயது வரைஉள்ள தனித்திருக்கும் ஸ்திரீகளில் 91 சத விகிதமும், குழந்தை பெருத விவாகமான ஸ்திரீகளில் 81 சத விகிதமும் யுத்த முயற்சியில் பூர்ாகாலமும் ஈடுபட வேண்டும். பூராநாளும் வேலை செய்ய முடியாத 8,40,000 ஸ்திரீகள் அரைவேலை செய்ய வேண்டும். சிறு குழந்தைகள் உள்ள மற்ற பத்து லக்ஷம் குடித்தன ஸ்திரீகள் ஸ்திரீகளின் வாலண்டரி சேவைப் படைகளிலும் அல்லது பொதுஜன தற்காப்புகளிலும் தானுகவே உழைத்துவருகிருர்கள்.

பிரிடனில் ஜனத்தொகை சொற்பமானதென்று நினைத்தால் இந்த புள்ளி விவரங்களின் முக்கியத்வம் புலப்படும். பிரிடனில் 14 முதல் 64 வயதுக்குட்பட்டவர்கள் 3,31,30,000. அவர்களில் 1,72,30,000 ஸ்திரீகளும் பெண்களும். அவர்களில் 1,00,00,000 கல்யாணமானவர்கள் அல்லது அவசியமான குடித்தன வேலைகளில் ஈடுபட்டவர்கள்.

ஆட்களைத் திரட்டும் பதிவு செய்யும் அமைப்பு ஊக்கமும் பிரியமும் உள்ள போதுமான யுத்த தொழிலாளர்களை வழங்கிற்று. ஆகிலும் அந்த வேலைக்குரிய சாமார்த்தியம் ஒருவரிடமும் காணப்படவில்லை. ஆகையால் தொழிலாளர் தேசிய சேவை இலாகா பயிற்சி முகாம்களை அமைத்தது. அவைகளில் நான்கு முதல் ஒன்பது வாரங்கள் வரையில் 140 லக்ஷம் ஸ்திரீகள் பயிற்சி பெற்றிருக்கிருர்கள். இன்னும் அநேகர்கள் தொழிற்சாலையிலேயே பயிற்சி பெற்ருர்கள்.

போர்ப் படைகளுக்கு மூன்று பெரிய உதவிப் படைகள் ஒத்தாசை செய்துவந்தன. உதவி டெரிடோரியல் படையும், ஸ்திரீகளின் உதவி விமானப்படையும், ஸ்திரீகளின் கடற்படை உதவிப் படையும் அமைக்கப்ப்ட்டன. இந்த வேலைகளுக்கு மனிதர்களை உபயோகிக்காமலும் ஏற்பாடு செய்யப்பட்டது.

அதிக சாமர்த்தியமுள்ள ஸ்திரீகள் விமான எதிர்ப்பு பீரங்கிகளைச் சுடும் நுட்பமான வேலைகளில் ஈடுபட்டார்கள். 1943-ம் வருஷத்தின் முடிவில் ஏ. டி. எஸ். ஐச்சேர்ந்த 212 லக்ஷத்தில் மூன்றில் ஒரு பாகம் நுட்பமான தொழிலில் தேர்ச்சி பெற்றுஇருந்தார்கள். டபிள்யூ. ஏ. எப். எப்பில் உள்ள அங்கத்தினர்களில் 70 சத விகிதம் தேர்ச்சி பெற்ற வேலைகளில் ஈடுபட்டிருக்கிருர்கள். புகைக்கூண்டு கமாண்டில் உள்ளவர்களில் 47 சத விகிதம் டபிள்யூ. ஏ. எப். எப். படையைச் சேர்ந்தவர்கள். யுத்தத்தின் நான்காவது வருஷ முடிவில் ஸ்திரீகளின் கப்பற் சேவைப் படையைச் சேர்ந்தவர்கள் மீன் வெடிகளை சீர்படுத்துவது, லேசான இஞ்சின்களைப் பிரித்து பூட்டுவது என்ற தொழில்களில் ஈடுபட்டிருந்தார்கள். எல்லா உதவிப் படைகளுக்கும் கடல்தாண்டி கிளை ஸ்தாபனங்கள் இருக்கின்றன. தொழிற்சாலைகளிலும் ஸ்திரீகள் யுத்த தளவாட உற்பத்தியில் அதிக ஒத்தாசை செய்திருக்கிருர்கள். கப்பல்கள், படைகளை இறக்கும் படகுகள், டாங்குகள், விமானங்கள், பீரங்கிகள் முதலியவற்றை அமைக்க ஒத்தாசை செய்திருக்கிருர்கள். படம் எழுதுகிறவர்களாகவும், மின்சார இன்ஸ்பெக்டர்களாகவும் உலோக ஆராய்ச்சி செய்கிறவர்களாகவும் இன்னும் மற்ற ஆயிரக்கணக்கான வேலைகளிலும் அவர்கள் ஈடுபட்டிருக்கிருர்கள். பீரங்கி உற்பத்தி சாலைகளில் உள்ள தொழிலாளர்களில் 60 சத விகிதமும், விமானங்களைக் கட்டும் தொழிற்சாலைகளில் 40 சத விகிதமும், இஞ்ஜினியரிங் அதற்கு சம்பந்தமான தொழிற்சாலைகளில் உள்ளவர்களில் 35 சத விகிதமும் ஸ்திரீகள்தான்,

யுத்த தளவாட உற்பத்தியைத் தவிர உணவுப் பொருள், ஆடைகளைத் தயாரிப்பதிலும் ஸ்திரீகள் முக்கியமான பங்கெடுத்துக் கொண்டிருக்கிறார்கள். தரைப்படையில் 80,000-க்கு மேற்பட்ட ஸ்திரீகள் இருந்துவருகிறார்கள். இந்தக் கணக்கில் யுத்தத்துக்கு முன் விவசாய அனுபவம் பெற்றவர்களும் அல்லது சாதாரணமாக விவசாயத் தொழிலை நடத்தி வருகிறவர்களும் சேர்க்கப்படவில்லை. ஸ்காண்டிநேவியா நாடுகளிலிருந்து யுத்தம் காரணமாக சர்ப்பராக்கள் வருவது நின்று விட்டதால் மரம் அதிகத் தேவைப்பட்டது. காடுகளில் வேலை செய்வதற்கும் ஸ்திரீகளின் டிம்பர் கோர் (படை) அமைக்கப்பட்டது.

சில்லரை வியாபாரமும் சாமான் விநியோகமும் ஸ்திரீகளின் உதவிகொண்டு நடத்தப்பட்டு வந்தது. இந்த முயற்சியில்தான் அரைநாள் வேலை செய்கிறவர்களும் விருதாப்பியம் அடைந்த ஸ்திரீகளும் விசேஷ சேவை செய்து வந்தார்கள்.

ஸ்திரீகள் போக்குவரத்துப் படைகளிலும் பேருதவி செய்திருக்கிறார்கள். விமானப் படை போக்குவரத்தில் விமானிகளாகவும், ரெயில்வே மூட்டை தூக்கிகளாகவும், லாரிகளை ஓட்டுகிறவர்களாகவும், பஸ் கண்டக்டர்களாகவும், வழியில் பரிசோதகர்களாகவும், கிளீனர்களாகவும், மற்ற வேலைக்காரர்களாகவும் ஸ்திரீகள் சேவை செய்திருக்கிறார்கள். 114 ஆயிரம் ஸ்திரீகள் ரயில்வேக்களில் வேலைக்கு அமர்ந்திருக்கிறார்கள். லண்டனிலுள்ள பிரயாணிகள் போக்குவரத்து சங்கத்தில் மட்டும் ஆடவர்களுக்குப் பதிலாக 12,000 ஸ்திரீகள் வேலைக்கு அமர்த்தப்பட்டிருக்கிறார்கள்.

பொதுஜன தற்காப்புக்கு ஸ்திரீகள் செய்த பேருதவியை மதிப்பிடமுடியாது. ஏனென்றால் ஒவ்வொரு தெருவிலும் ஒவ்வொரு வட்டாரத்திலும் ஸ்திரீகள் தீயணைக்கும் படைகளும், A. R. P. வார்டன்களும் பிரிடனுக்காக நடைபெற்ற விமானத்தாக்குதலின்பொழுது ஏராளமாகத் தோன்றியிருக்கிறார்கள். தேசிய தீயணைப்புப் படையில் 73,000 பேர்கள் இருக்கிறார்கள். செஞ்சிலுவையைச் சேர்ந்த 50,000 அங்கத்தினர்களும், ஸெயின்ட்ஜான் ஆம்புலன்ஸ் பிரிகேடைச் சேர்ந்த 44,000 அங்கத்தினர்களும் பொதுஜன தற்காப்பில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

ஜனங்களின் தேக ஆரோக்கியத்தை பரிபாலிப்பதும் யுத்தத்தின் மகத்தான பிரச்னைகளில் ஒன்றாகும். சுகாதாரப் படைகள் செய்திருக்கும் சேவை புராணத்திற்குறியது. தாதிகளின் அரியசேவையும் அவர்களின் அழகான ஐதீகங்களுக்கு ஒத்ததாகும்.

யுத்த காலத்தில் பிரிடனிலுள்ள ஸ்திரீகள் செய்திருக்கும் வேலையைப்பற்றி இவை சில குறிப்புகள். இதைத் தவிர நாட்டிலுள்ள ஏராளமான மக்களின் தினசரி வாழ்க்கை நடைபெற வேண்டும். நாட்டை விட்டு ஓடியபொழுது குழந்தைகளைக் காப்பாற்றவேண்டும். அபாயத்துக்குட்பட்டிருந்த வட்டாரங்களிலிருந்து வரும் தாய்களுக்கும், குழந்தைகளுக்கும் அபாயம் குறைவாக உள்ள இடத்தில் உள்ள ஸ்திரீகள் இடவசதி அளிக்கவேண்டும். சேவைப் படைகளுக்கும், ஸ்திரீகளுக்கும், யுத்த தொழிலாளர்க்கும் இடவசதி அளிக்கவேண்டும். மேலும் ஆசிரியர் தொழிலில் உள்ளவர்கள் பள்ளிக்கூடத்தில் போஜனம் செய்விப்பது, பருமனான குழந்தைகளுக்கு உபரி ஆடை கூபன்களுக்கான பாரங்களை பூர்த்தி செய்து கொடுப்பது என்ற பொறுப்பையும் ஏற்றுக்கொண்டார்கள்.

ஸ்திரீகளின் வாலண்டரி ஸ்தாபனங்கள் உள்நாட்டுப் போர்முனையிலும் கவனம் செலுத்தி வந்திருக்கிறார்கள். முக்கியமாக உற்பத்தி செய்வது, பழுது பார்ப்பது, ஆகாரம், எண்ணெய் சிக்கனம், கெட்டுப்போகும் பொருள்களைச் சேமிப்பது, படைகளுக்கு வசதி ஏற்படுத்துவது, தேசீய சேமிப்புக்காக முயற்சி செய்வது.

பிரிடனின் போர்க்கோலம் பிரிடனுக்கு மட்டும் அன்வயிக்கக்கூடியதில்லை. எவ்வளவு சேவை செய்திருந்தாலும் அது அநேக முறைகளில் ஈடுபட்டிருக்கும் நேசதேசங்களின் ஒன்றுபட்ட முயற்சியின் மகத்தான ஒரு தோற்றத்தில் ஒரு அம்சம் என்றும் பிரிடனிலுள்ள ஸ்திரீகள் அறிவார்கள்.

# கடற்பலம் தான் மூலாதாரம்.

## வெற்றி தரும் யுத்த தந்திரம்.

(மேஜர் ஜெனரல் ஆர். எச். ஆலென்).

இரண்டாவது உலக யுத்தத்தில் காணப்படும் பிரிடிஷ் யுத்த தந்திரம் எவ்வித சர்ச்சையையும் திருப்தி செய்யும்.

இதை இரண்டு இனங்களாகப் பிரித்து கவனிக்கவேண்டும். எங்கு பலத்தை உபயோகப் படுத்துவது என்பது முக்கியமான யுத்த தந்திரம். நடவடிக்கைகளுக்காகப் பொருக்கி எடுக்கப் பட்ட பிராந்தியத்தில் அதை எவ்விதம் உபயோகிப்பது என்பது அதற்குக் கொஞ்சம் குறைவான யுத்த தந்திரம்.

இந்த இரண்டு முறைகளிலும் ஆரம்பத்தில் பிரிடனுக்கு சிறிது நாசம் ஏற்பட்ட போதிலும் பின்பு பிரிடனின் யுத்த சக்தியானது நல்ல பயனளிக்கும் முறையில் கையாளப்பட்டது.

ஆரம்பத்தில் பிரிடனின் முயற்சி பிரதிகூலமாகவே இருந்தது. கடற்படையின் பலத்துடன் ஒரு சரியான சேனையை முஸ்தீப்புகளுடன் தயார் செய்து அதன் பிறகு அந்த சேனையைப் பயனளிக்கக் கூடிய ஒரு இடத்திற்கு அனுப்புவதற்குப் பதிலாக பிரிடன் முன் கூடியே ஐரோப்பிய நடவடிக்கையில் தலையிட்டு பிரெஞ்சு சேனைக்கு உதவி அளிக்கும் படியாக கைவசமிருந்த படைகளையும் தளவாடங்களையும் அனுப்பிவிட்டது. இந்த திட்டம் 1940-ம் வருஷம் வேனிற்கால ஆரம்பத்தில் பிரான்ஸின் பலமான தோல்வியுடன் முறிவடைந்தது. அதன்பின் டங்கர்க்கிலிருந்து பிரிடனின் சிறிய சேனையானது உபயோகமுள்ள தளவாடங்களை இழந்து பின்வாங்கும்படி நேரிட்டது.

ஆனால் அதிலிருந்து ஜெர்மானியர் கை ஓங்கும்படிக்கும் போரை எங்கு நடத்துவது என்பதை நிர்த்தாரணம் செய்வதற்கும் பிரிடன் அவகாசம் அளிக்கவில்லை.

1940-ம் வருஷம் ஜுன்மீ பிரிடிஷ் தொழிற்சாலைகள் ஒரு சிறிய அளவுக்குத் தான் தளவாடங்களை உற்பத்தி செய்து வந்தன. அந்த தளவாடங்களை பிரிடனின் தற்காப்புக்கு வைத்துக்கொண்டு ஜெர்மன் படையெடுப்பை எதிர்பார்த்து நிற்காமல் நாட்டின் தற்காப்பை கடற்படை விமானப்படையிடம் ஒப்படைத்து விடுவதென்றும் கைவசமுள்ள எல்லா தளவாடங்களையும் சூயஸ் கால்வாய்க்கு இதாலியிலிருந்து ஏற்பட்ட அபாயத்தைத் தடுக்க எகிப்துக்கு அனுப்புவதென்றும் பிரிடன் துணிவுகரமாக முடிவு செய்தது.

இதுவே ஒரு சிறந்த யுத்த நடவடிக்கையாகும். மகத்தான யுத்த தந்திரம் என்ற முறையில் அச்சு நாடுகளை ஐரோப்பாவிலேயே தாக்குவது தான் உசிதம் என்று உறுதி செய்யப்பட்டது. அடுத்தபடியாக பீல்ட் மார்ஷல் வேவல் பிரபு அவரிடம் இருந்த சிறிய படைகளை அநேக நடவடிக்கைகளில் ஈடுபடுத்தினர். மேற்கிலிருந்து எகிப்தை நோக்கி இத்தாலியர்கள் ஏராளமாக முன்னேறி வந்தார்கள். கிழக்கில் வேவலுக்குப் பின்னால் அபிஸீனியாவில் மற்றொரு பெரிய சேனை இருந்து வந்தது.

ஆகிலும் வேவல் செம்மட்டிக்கும் அடிகல்லுக்கும் நடுவில் அகப்பட்டுக்கொண்டு நசுங்கி விடும் வரையில் காத்திருக்கவில்லை. சூடானிலும், எகிப்திலும் பேருக்காக ஒரு படையை வைத்துவிட்டு பாக்கியுள்ள படைகளை மேற்கிலுள்ள இத்தாலியப் படையைத் தாக்கும்படி அவர் ஏவினார். இதாலியப் படைகள் நன்றாய் அணிவகுத்து இருக்கவில்லை என்பதைக் கண்டுபிடித்து அவர் தாக்கி அவைகளை ஒன்றன் பின் ஒன்றாக அழித்துவிட்டார்.

சில வாரங்களுக்குப் பின் லிபியாவிலிருந்த இதாலிய சேனை பூராவும் அழிக்கப்பட்டு விட்டது. பிறகு அபிஸீனியா பக்கம் திரும்பி அவர் ஒன்றன் பின் ஒன்றாக அநேக வெற்றிகளைப் பெற்றார். இதே சமயத்தில் 1941-ம் வருஷம் வசந்த காலத்தில் கிரீஸில் உள்ள சிறிய சேனை ஒத்துழைக்காது என்று இத்தாலி தெரிந்து கொண்டது. ஆகையால் ஜெர்மனியும், பல்கேரியாவும் கிரீஸைத் தாக்கின. பிரிடன் கிரீஸுக்கு அபயப்பிரதானம் செய்திருந்தது. யாதொரு தவக்கமன்னியிலும் ஜெர்மனியை எதிர்த்துப் போராட வேவலுடன் இருந்த படையின் பெரும்பாகத்தை பிரிடன் கிரீஸுக்கு அனுப்பியது. ஆகிலும் கிரீஸ் ஜெர்மன் வசம் ஆகுவதை அவைகள் தடுக்கக்கூடவில்லை. ஆகிலும் நெருக்கடியிலும் பிரிடன் அதன் வாக்குறுதியை நிறைவேற்றும் என்பதை அது உலகத்தாருக்கு வெளிப்படுத்தியது.

பிரிடன் போர்முனையில் தோற்கடிக்கப்பட்டாலும் இந்த நடவடிக்கையின் மூலம் யுத்த முறையில் அநேக மாறுதல்கள் ஏற்பட்டன.

1940-ம் வருஷம் மாரிகாலத்தில், அடுத்துவரும் வசந்த காலத்தில், ருஷ்யாவைத் தாக்குவதென்று ஹிட்லர் முடிவு செய்திருந்தான். அந்த வஞ்சக நடவடிக்கைக்கு எந்தத் தேதி குறிப்பிடப்பட்டிருந்ததென்று ஒருவரும் சொல்லமுடியாது. அநேகமாக அது மேமீ முதல் பாதியில் இருக்கலாம். ஆகிலும் ஜூன்மீ கடைசியில் தான் ஜெர்மனி ருஷ்யாவைத் தாக்கிற்று என்று நாம் அறிவோம். பால்கன் நாடுகளிலும் கிரீட்டிலும் ஏற்பட்ட நாலைந்து முதல் ஆறு வார தாமதம் ஹிட்லருக்கு நவம்பர்மீ-த்தில் இடையூறாக இருந்தது.

அடுத்த 18 மாதங்களில் கடல் மார்க்கங்களில் ஆதிக்கம் பெறுவதில் பிரிடனின் கவனம் செலுத்தப்பட்டு வந்தது. கடலாதிக்கம் இல்லாவிடில் பிரிடனின் பலத்தை சரியான முறையில் உபயோகிக்க முடியாது. இதற்காக பிரிடனின் தரைப்படைகள் மத்திய தரைக் கடலின் தென் கரையான ஆபிரிக்கா கடற்கரையை திரும்பிப்பிடிக்க உபயோகப்படுத்தப்பட்டன. இதே சமயத்தில் நீர்மூழ்கி அபாயத்தைத் தடுக்க பிரிடன் ஏராளமான சிறிய படகுகளைக்கட்டி கடற்படையைப் பலப்படுத்தவேண்டியதாயிற்று.

நீர்மூழ்கிகளை அழிப்பதென்றால் ஒரு பெரிய விமானப்படை வேண்டும். அத்துடன் ஜெர்மன் யுத்த உற்பத்திகளையும் அழிப்பதற்கு கனமான வெடி விமானங்களும் கட்டப்பட வேண்டும்.

எந்த தேசத்தின் உற்பத்தி சக்திக்கும் வரம்புகள் உண்டு. இப்பொழுது நாம் ஆராய்ச்சி செய்யும் பொழுது பிரிடனின் யுத்த முயற்சிகள் ஒரு வகையிலும் குறைவாக இருக்கவில்லை என்பது தெரியவரும். ஏனெனில் 1943-ம் வருஷம் மேமீ மூன்று லக்ஷியங்களும் சித்தி அடைந்துவிட்டன. மேலும் உற்பத்தியின் ஒரு பெரும் பாகத்தை பிரிடன் நேச நாடான ருஷ்யாவுக்கும் கொடுத்து உதவி வந்தது.

இந்த உற்பத்தி அளவை விமானங்கள், பீரங்கிகள் மற்ற முஸ்தீப்புகளின் சங்கியைக் கொண்டு மட்டும் மதிக்கக்கூடாது. அவைகளை ருஷ்யாவுக்கு அனுப்பவேண்டுமென்றால் அதற்கு ஏராளமான கப்பல்களும், விமானிகளும் முக்கியமாக மாலுமிகளும் தேவைப்பட்டன.

1941-ம் வருஷம் முடிவில் சக்தி வாய்ந்த அமெரிக்காவின் வருகையினால் நேசதேசக் கட்சிக்கு அளவற்ற உதவி கிடைத்தது. தூரக்கிழக்கில் ஜப்பானைத் தாக்கும் பெரிய பளுவை அமெரிக்கா ஒப்புக்கொண்டு அதை நடத்தும் திட்டங்களைப் போட்டு வந்தது. அதனால் தான் ஆரம்பத்தில் ஏற்பட்ட பிற்போக்குகளிலிருந்து பிரிடன் புத்துயிர்பெற வசதி ஏற்பட்டது. ஆகிலும் ஐரோப்பியப் போர்முனையில் அமெரிக்கர்கள் பிரிடனின் யுத்த தந்திரத்தை ஒப்புக்கொண்டார்கள். சுருங்கச் சொன்னால் அவர்களின் முயற்சிகள் பிரிடனின் யுத்த தந்திரத்துடன் ஒன்று சேர்க்கப்பட்டன.

இவ்விதமாக 1942—43-ம் வருஷங்களில் திட்டம் வெற்றிகரமாக கையாளப்பட்டது. அதாவது வட ஆபிரிக்காவிலிருந்து அச்சு நாட்டாரை சுத்தி செய்வது. நீர்மூழ்கிகளைப் பொருட்படுத்தாமல் கடலாதிக்கம் பெறுவது. இதே சமயத்தில் பிரிடிஷ் வெடி விமானப் படை வளர்ச்சி பெற்று ஜெர்மனியின் மர்ம ஸ்தானங்களையே தாக்கிவந்தது.

பொருக்கி எடுக்கப்பட்ட யுத்த முனையில் ஒரு சமயம் ஜெயமும் ஒரு சமயம் தோல்வியும் ஏற்பட்டு கடைசியாக ரொம்மலின் சேனைகளின் முன்னேற்றம் தடுக்கப்பட்டு அவைகள் எல் அலாமீனில் முறியடிக்கப்பட்டன. தங்குதடையன்னியில் பிரிடிஷ் துருப்புகள் லிபியா வழியாக டிரிபோலிக்கு முன்னேறின. இங்கு மற்றொரு யுத்த தந்திரம் கையாளப்பட்டது. படைகள் ஆல்ஜீரியாவில் இறங்கின. அதன் பின் டியூனிஸ் போரில் வெற்றி கிடைத்தது. இங்கு தான் முதன் முதலில் பூராவாக ஜெர்மானியர்கள் கொண்ட ஓர் சேனை முறியடிக்கப்பட்டது. இது ஒரு பூரணமான வெற்றி.

அதன் பிறகு கடலாதிக்கம் ஓங்கவும் படைகளை இறக்கும் படகுகள் அதிகரிக்கவும் நல்ல முஸ்தீப்புகளுள்ள ஓர் சேனையின் உதவியுடன் பிரிடன் அமெரிக்காவுடன் சேர்ந்து ஐரோப்பாவில் படையெடுக்க தயாராக இருந்தது. இப்பொழுது இதாலியப் பிராந்தியம் பொருக்கி எடுக்கப்பட்டது. ஸிஸிலியைக் கைப்பற்றியப் பின் படைகள் இதாலியில் இறங்கிய

பொழுது முஸோலினி வீழ்ச்சி பெற்ருன். அச்சுக் கட்சியிலிருந்து இதாலி விலகிக் கொண்டது. இந்த நடவடிக்கையினுல் ஜெர்மன் படைகளுக்கு சிரமம் அதிகரித்தது. இதாலிய தீபகற்பத்திற்கு ஹிட்லர் 125 டிவிஷன் படைகளை அனுப்பவேண்டியதாக ஏற் பட்டதுடன் பால்கன்ஸிலிருந்த இதாலியர்களுக்கு பதிலாகவும் கிரீஸையும் அதைச் சேர்ந்த தீவுகளையும் அடக்கி ஆளவும் 20-க்கு மேற்பட்ட டிவிஷன்களை அனுப்பவேண்டியதாயிற்று.

கடைசியாக கடைசி நடவடிக்கையைப் பற்றி சொல்லுவோம். அதாவது நார்மண்டி யில் படையெடுப்பு. அதை ஒட்டி தெற்கு பிரான்ஸில் படையெடுப்பு.

இந்த நடவடிக்கையிலும் பிரிடனின் யுதத தந்திரம் தான் உபயோகப்பட்டது. பிரிடன் போர்முனையையும் போரை நடத்தும் திட்டத்தையும் நிறுவியது. இந்த நட வடிக்கைகளை மாண்ட்காமரி கையாண்டு வந்தார். அமெரிக்காவின் பூரா பிரயத்தினமும் பிரிடிஷ் திட்டத்துடன் ஒன்று படுத்தப்பட்டு விரிவாக்கப்பட்டது.

போர்முனையை தேர்ந்தெடுத்த முறையிலும் போரை நடத்துவதிலும் பிரிடன் எடுத்துக்கொண்ட பங்கு பெருமை பாராட்டக்கூடியது. பிரிடிஷ் படைகள் கேயனிலுள்ள நார்மண்டி முன்னேறும் வாசலில் உள்ள கேந்திர ஸ்தானத்தைப்பற்றி உக்கிரமான போரை நடத்தினுர்கள். இந்தக் கடும் போரில் பிரிடிஷ் படைகள் கையாண்ட யுத்த தந்திரம் தான் ஜெர்மன் படை வரிசைகளை இறுதியில் ஊடுருவிச் செல்வதற்குப் பேருதவி செய்தது.

அடுத்தபடியாக சந்தர்ப்பம் வாய்த்த பொழுது பிரிடிஷ் படைகள் ஐந்து நாட்களில் செய்ன் நதியிலிருந்து ஆண்ட்வர்புக்கு 250 மைல்கள் முன்னேறி, சென்ற இரண்டு வருஷங் களில் ருஷ்யாவும் அமெரிக்காவும் முன்னேறியது போல் பிரிடிஷ் படைகளும் மின்னல் வேகத்துடன் செல்லக்கூடும் என்பதை பிரிடன் வெளிப்படுத்தியது.

சந்தர்ப்பங்களையும் விமானப்படை ஐசுவர்யங்களையும் நல்ல முறையில் பயன்படுத்து வோம் என்று பிரிடன் பாத்தியம் கொண்டாடலாம். பிரான்ஸின் வீழ்ச்சியினுல் கலங்கி விடாமல் தன்னந்தனியே நின்ற போதிலும் அது படையெடுப்பை எதிர்பார்த்து சும்மா இருக்காமல் வட ஆபிரிக்காவில் போரைத் துவக்கியது. அதன் பின் அது அதன் பலத்தைப் பெருக்கிக் கொண்டது. முதலில் பூராவாக கடலாதிக்கம் பெற்றது. நீர்மூழ்கிகளை அழிக்க கடற்படை மூலமாகவும் விமானப் படை மூலமாகவும் பெரும் முயற்சி எடுத்துக்கொண்டது. ஜெர்மன் யுத்த தளவாட உற்பத்தியை அழித்துவிட கனமான வெடி விமானப்படையையும் அவைகளுக்கு வேண்டிய விமானிகளையும் தயார் செய்தது. சமமான அந்தஸ்துடன் இருந் தால் ஜெர்மானியர்களை முறியடித்து விடலாம் என்று ருசுச் செய்த ஏராளமான தரைப்படை களைத் திரட்டி அவைகளுக்கு முஸ்தீப்புகளையும் வழங்கியது.

இதே சமயத்தில் பிரிடன் ருஷ்யாவுக்கு உதவி அளித்து வந்தது. 1941-ம் வருஷம் அக்டோபர்மீ முதல் 1944-ம் வருஷம் மார்ச்சுமீ முடிய 5,000 டாங்கிகளும், 7,000 விமானங்களும் இயற்கைப் பொருள்களும் சர்பராக்களும் 800 லட்சம் பவுன் பொருமான முள்ள மற்ற சாமான்களும் அனுப்பப்பட்டன. அவைகளை அனுப்ப தேவையான கடல் முயற்சியும் வெற்றிகரமாக நடந்தேறியது.

மூன்று வருஷங்களாக ருஷ்யாதான் தரைப் போரின் பளுவை ஏற்றுவந்ததென்று பிரிடன் நன்கு மதித்திருக்கிறது. பல கஷ்டங்களுக்குப் பின் ஸ்டாலின்கிராட்டில் யுத்தப் போக்கை மாற்றிய ஓர் தேசத்திற்கு பிரிடன் வந்தனம் அளிக்கிறது. இந்த கோரமான சிரமத்தை முன் கூடியே தீர்த்துவிட உதவலாம் என்று பிரிடன் பிரியப்பட்டது. ஆனுல் பிரிடன் சரியாக மதித்துப்பார்த்ததென்றும் உசித காலத்திலேயே அதன் பூரா பலத்தை யும் அது உபயோகித்ததென்றும் காலக்கிரமத்தில் தெரியவரும்.

அகாலத்தில் ஐரோப்பாவில் நாம் படையெடுத்து வந்தால் அது நாசகாரியாக முடிந் திருக்கும். ஆனுல் இது சாத்தியம் என்று தோன்றிய பொழுது பிரிட்டன் அதன் பூரா பலத்தையும் உபயேகித்து வந்தது.

'ஒத்துப்பார்ப்பது சாவதான மற்றது' என்ற ஓர் ஆங்கிலப் பழமொழி உண்டு. ஆகை யால் நான் பின் வருமாறு சொல்லி கட்டுரையை முடித்துக்கொள்கிறேன். ஜெர்மனியையும் ஜெர்மனிக்கு ஆதீனமாக இருந்தவர்களையும் முறியடித்ததில் ஏதாவதொரு தேசம் அதிக முயற்சி செய்ததென்று ஒருவரும் பாத்தியம் கொண்டாடக்கூடாது. ஆனுல் பெரிய அல்லது சிறிய நேசதேசங்களெல்லாம் நேசக்கட்சிக்கு தங்களால் இயன்ற அளவு ஒத்தாசை செய்தன.

தனிப்பட்டவர்களைவிட சமஷ்டி தான் வெற்றி பெற்றது.

# பிரிடனின் மகத்தான கடற்படை அத்தியாயம்.

## வெற்றிக்கான கடல் மார்க்கங்கள் காப்பாற்றப்பட்டன.

**ஏ. ஜே. மாக்வின்னி.**

பிரிடனின் நீண்ட புகழ்பெற்ற கடற்படை சரித்திரத்தின் மகத்தான அத்தியாயம் இப்பொழுது வரையப்பட்டுவிட்டது. இந்த அத்தியாயம் இது வரையில் உலகம் அறியாத கோரமான கடல் போர் நடைபெற்ற ஐந்து வருஷ சம்பவங்கள் உள்ளது. நம்பிக்கை போய்விட்டதென்று தோன்றியபொழுது ஜனங்களிடம் உறுதியும், பிழைத்திருப்பதற்கு சந்தர்ப்பம் குறைவாக இருந்தபொழுது அழிவற்ற தைரியமும் காணப்பட்ட அத்தியாயம் இது.

பிரிடனின் கடற்படை உபயோகப்படாமல் இருந்தால் இன்று ஹிட்லர் அஹம்பாவத்துடன் ஐரோப்பியத் தலைநகரங்களில் நடமாடுவான் என்று பிரிடன் நம்பியிருந்ததை எவரும் ஆக்ஷேபிக்கமுடியாது. ஜெர்மனி ஜப்பானுடன் ஒன்றுபட்டிருக்கும் என்பதையும், இப்பொழுது புது உலகத்தின் வாசற்படியில் அவன் தாக்கக்கூடும் என்பதையும் எவரும் மறுக்கமுடியாது. மூன்று அல்லது நான்கு வருஷங்களுக்குமுன் யுத்தத்தில் ஏற்பட்ட நெருக்கடியான நிலைமையை நாம் மதித்துப் பார்ப்போம்.

பிரான்ஸ் வீழ்ச்சிபெற்ற பின்னும் சங்கியையில் அதிகமாக இதாலி, மத்தியதரைக்கடலில் ஆதிக்கம் பெற்றிருந்தபொழுதும், பிரிடிஷ் கடற்படை தன்னந்தனியே இருந்து தீரத்துடன் கடல் மார்க்கத்தைக் காப்பாற்றி இராதிருந்தால் இங்கிலாந்து படையெடுக்கப்பட்டிருக்கும்.

பிரிடனில் ஹிட்லர் ஆதிக்கம் பெற்றுவிட்டால் மேற்கில் நடவடிக்கைகளை துவக்குவதற்கு முக்கியமான தளங்கள் நேசதேசத்தாருக்குக் கிடைத்திருக்காது.

விடுதலைக்குப் பாய்ச்சல் ஸ்தலம்போலுள்ள பிரிடிஷ் தீவுகளை இழந்திருந்தால் நாஸிகள் அமெரிக்காவைத் தாக்க வசதி ஏற்பட்டிருக்கும். அப்பொழுது அமெரிக்க கனடிய கடற்படைகளின் பலம் இப்போது இருக்கும் நிலைமையில் இருந்துவரவில்லை.

அடுத்தபடியாக, கடற்போரென்றால் ஜெர்மன் யூ-படகுகளைப்பற்றிச் சொல்லவேண்டும். அவைகளைத்தான் ஜெர்மானியர்கள் கடலாதிக்கத்துக்கு நம்பி இருந்தார்கள். அவைகள்தான் பிரிடிஷ் போக்குவரத்து மார்க்கங்களுக்கு மிகுந்த அபாயம் உண்டுபண்ணி வந்தன. ஆனால் இது நடவடிக்கையின் ஒரு அம்சம்தான்.

1939-ம் வருஷத்தில் ஜெர்மானியர் போட்டிருந்த கடல் யுத்த திட்டமும் இதுதான்.

பிரான்ஸ் சரணகதி செய்ததாலும், இதாலி யுத்தத்தில் சேர்ந்துகொண்டதினாலும், பிரிடிஷ் கடற்படை மத்தியதரைக்கடலிலிருந்து துரத்தியடிக்கப்படும் என்று ஜெர்மனி நினைத்தது. மத்தியதரைக்கடலைவிட்டு துரத்திவிட்டால் மத்திய கிழக்குக்கும், தூர கிழக்குக்கும் செல்லும் பிரிடிஷ் கப்பல்கள் நன்னம்பிக்கை முனையைச்சுற்றிச் செல்லவேண்டியிருக்கும். குறைந்து வரும் பிரிடிஷ் கடற்படைக்கு அதிக சிரமம் ஏற்படும். ஆகையால் மகத்தான கடல் மார்க்கமான பிரிடனுக்கும் அமெரிக்காவுக்கும் உள்ள போக்குவரத்தை நடத்தக் கப்பல் குறைவு ஏற்பட்டுவிடும். ஜெர்மனியிடம் உள்ள யுத்தக் கப்பல்களும், சிறிய யுத்தக் கப்பல்களும், சஞ்சாரிகளும், யூ-படகுகளும், வெகுதூரம் செல்லும் விமானப்படையும் சாமான் கப்பல்களை அழிக்க நடவடிக்கைகளைத் துவக்கும்.

அகஸ்மாத்தாக நேரிடும் என்று நாம் ஒன்றையும் எதிர்பார்க்கக்கூடாது. பிரிடிஷ் கப்பல்கள், யூ-படகுகள், விமானப்படை, கொள்ளைக் கப்பல்கள் முதலியவற்றிலிருந்து தப்பித்துச் சென்றால் அவைகளை நாட்டைச்சுற்றியுள்ள சமுத்திரங்களிலேயே நிர்மூலமாக்க வேண்டும். பிரிடனில் உள்ள எல்லா துறைமுகங்களிலும் நதிகளிலும் புதிய நாசம் விளைவிக்கக்கூடிய சுரங்க வெடிகள் ஏராளமாகப் பாவப்படவேண்டும். அவ்விதம்கூட செய்யப்பட்டது.

இந்த இடையூறுகளையும் அபாயங்களையும் தாண்டி இருக்கும் பிரிடிஷ் கப்பல்கள் துறைமுகங்களுக்கு வரமுடியாதபடி துறைமுகங்கள் ஆகாயத்திலிருந்து வெடி விமானங்களால் பலமாகத் தாக்கப்படவேண்டும்.

ஜெர்மனியின் இவ்விதமான திட்டத்தை பிரிடிஷ் கடற்படையும் சாமான் கப்பல்களும் முறியடித்ததற்கு உறுதியும், தைரியமும், ஊக்கமும், விஞ்ஞான சாஸ்திர மேதாவித்தனமும் தான் காரணங்கள். அவைகள் யூ-படகுகளை எதிர்த்தன. யுத்தக் கப்பல்களும், சஞ்சாரி

களும் ஜெர்மன் கப்பல்களுடன் போரை நடத்தின. பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகளும் கடற்படை தொழிற்பயிற்சி மெம்பர்களும் சுரங்க வெடிகளுக்கு மாற்றுகளை கண்டுபிடிக்க அபாயத்துக்குட்பட்டார்கள். தரையிலிருந்து செல்லும் விமானங்களின் வட்டாரத்தைத் தாண்டி சமுத்திரத்தில் சென்ற பிரிடிஷ் விமானிகள் கப்பல்களிலிருந்து சென்று ஜெர்மன் வெடி விமானங்களைத் தாக்கிவந்தார்கள். போர் முடிந்தபின் சமுத்திரத்தில் விழவேண்டியது தான் என்பதை அந்த விமானிகள் நன்கு அறிவார்கள். பிரிடிஷார்கள் சக்திவாய்ந்த நண்பர்கள் கிடைக்கும் வரையில் தன்னந்தனியே போரை நடத்தி காலஹரணம் செய்து வந்தார்கள்.

முதன் முதலில் ஜெர்மனி கிராப்ஸ்பீ என்ற சிறிய கொள்ளைக் கப்பலை இழந்தது. அடுத்தபடியாக 'மூழ்கடிக்க முடியாதது' என்று ஹிட்லர் பீத்திக்கொண்ட பிஸ்மார்க் கப்பல் வடக்கு அட்லாண்டிக்கில் மூழ்கியது. வியாபாரக் கப்பல்களைக் கொள்ளை அடிப்பதில் கொள்ளைக் கப்பல்களை ஈடுபடுத்துவது எதிர்பார்த்ததற்கு மேல் மிகுந்த அபாயம் பொருந்திய தென்று ஜெர்மன் கடற்தளபதிகள் உணர்ந்தார்கள்.

பிரிடிஷ் கப்பல்கள்பேரிலும், பிரிடிஷ் துறைமுகங்களிலும் பிரிடிஷ் மாலுமிகளுக்கு பிழைப்புக்கு வழியில்லை என்று அறிவிக்கும் துண்டுப் பிரசுரங்கள் ஜெர்மன் விமானங்களிலிருந்து போடப்பட்டன. ஆகிலும் ஒவ்வொரு மாதத்திலும் சிறிய கப்பல்கள் எதிரியின் யுத்தக் கப்பல்களை சந்திக்கும் வீரம் பொருந்திய தகவல்கள் கிடைத்துவந்தன. நீர்மூழ்கிகளைத் தாக்கும் ஒரு கப்பல் எதிரியின் கொள்ளைக் கப்பலைத் தாக்கப்போவதாக கடற்படைத் தளத்திற்கு செய்தி அனுப்பிற்று. அந்தக் கொள்ளைக் கப்பல்தான் ஷார்ன்ஹார்ஸ்ட் என்ற ஜெர்மனியின் பெரிய யுத்தக் கப்பல்.

பிரிடன் தன்னந்தனியே இருந்தபொழுது காணப்பட்ட இவ்விதமான தீரம்தான் நேசதேசப்படைகளின் விருத்தி அடைந்துவரும் பலத்திற்கு அஸ்திவாரம்போட்டது. ஜெர்மன் கப்பல்கள் ஒன்றன்பின் ஒன்றாக தங்களுடைய சொந்தக் கடற்கரைக்குச் சென்றுவிட்டதால் இறுதியில் கடல்களில் ஒரு கப்பல்கூட நடமாடவில்லை. யூ-படகுகளின் நஷ்டங்கள் அதிகரித்துவந்தன. அவர்களுக்குக் கிடைத்த வெற்றியும் குறைந்துவந்தது. கடல் மார்க்கங்களில் செல்லும் பிரிடிஷ் மாலுமிகளின் ஆர்வத்தைக் குறைத்துவிடலாம் என்று ஹிட்லர் எண்ணியது வீணாகிவிட்டது. யுத்தத்தின் மிகவும் நெருக்கடியான சமயத்திலும் மனித பலம் இல்லாமல் ஒரு கப்பலும் துறைமுகத்தில் நிறுத்தப்படவில்லை.

சரித்திரம் எழுதுகிறவர்கள் ஹிட்லருக்கு உலக ஆதிக்கத்தை தர ஆரம்பிக்கப்பட்ட யுத்தத்தின் போக்கை நேசதேசத்தின் மகத்தான ஐசுவரியங்கள் மாற்றிவிட்டன என்று பதிவு செய்வார்கள். ஆகிலும் பிரிடன் கடல் மார்க்கங்களை காப்பாற்றியிராவிடில் அமெரிக்காவின் யுத்த ஐசுவரியங்கள் கடல்தாண்டி வரமுடியாமல் அமெரிக்காவிலேயே தங்கியிருக்க நேரிட்டிருக்கும் என்பதையும் சரித்திரக்காரர்கள் எழுதவேண்டும். கடல்தாண்டி எண்ணெய்க் கப்பல்களில் பெட்ரோல் வந்து சேராத பக்ஷத்தில் விமானங்கள் தரையை விட்டுக் கிளம்பமுடியாது. கடல் மூலமாக எண்ணெயும், வெடி மருந்தும் அனுப்பப்படாவிடில் டாங்கிகளும், வண்டிகளும் சலிக்கமுடியாது. பீரங்கிகள் சும்மா இருக்கவேண்டும்.

சரித்திரத்திலேயே கடற்படைக்கு தியாகம் அவசியமென்றால் பிரிடிஷார்கள் இதில் ஏராளமாக உயிரை அர்ப்பணம் செய்திருக்கிறார்கள் என்று பிரிடிஷார்கள் அறிவார்கள். இந்த யுத்தத்தில் பிரிடனுக்கு ஏற்பட்ட கப்பல் நஷ்டங்கள் கப்பல்களை இழந்தால் வெற்றி கிடைக்கும் என்ற பழமையான கோட்பாட்டை ருஜுப் செய்துவிட்டன.

பிரிடனுக்கு 600 யுத்தக் கப்பல்களும், 10,000-க்கணக்கான வீரம் பொருந்திய மாலுமிகளும் நஷ்டமாயின. இந்தப் புள்ளி விவரங்கள் உத்தியோக வெளியீடுகளிலிருந்து தொகுக்கப்பட்டிருக்கின்றன.

| | | | |
|---|---|---|---|
| யுத்தக் கப்பல்கள் ... ... | 5 | சுரங்கவாரிக் கப்பல்கள் ... | 30 |
| விமானந்தாங்கிகள் ... ... | 7 | ட்ராலர்கள் ... ... | 175 |
| சஞ்சாரிகள் ... ... | 28 | ட்ரிப்டர்கள் ... ... | 17 |
| நாசகாரிகள் ... ... | 128 | சுரங்கவெடி பாவும் கப்பல்கள் ... | 4 |
| நீர்மூழ்கிகள் ... ... | 67 | படகுகள் ... ... | 11 |
| கவசம் பூண்ட சாமான் குரூய்ஸர்கள் | 14 | பீரங்கிப் படகுகள் ... ... | 6 |
| நீர்மூழ்கிகளை அழிக்கும் போர்க் கப்பல்கள். | 29 | கட்டர்கள் ... ... | 3 |
| சிறிய கப்பல்கள் ... ... | 12 | மானிட்டர்கள் ... ... | 1 |

பலவகைப்பட்ட உதவிக் கப்பல்கள் 34.

இதைத் தவிர மோட்டார் பீரங்கிப் படகுகளும், டார்ப்பிடோ படகுகளும், மோட்டார் லாஞ்சுகளும் நஷ்டமாயிருக்கின்றன.

இவ்வளவு நஷ்டம் ஏற்பட்டபோதிலும் யுத்தம் இறுதியில் ஜெர்மன் பூமியிலேயே நடத்தப்படும் என்ற நம்பிக்கையை பிரிடிஷார்கள் உறுதியுடன் கடைபிடித்துவந்தார்கள். பிரிடனுக்கு நெருக்கடி ஏற்பட்ட நாளிலேயே யுத்தப் போக்கை தலைகீழாக மாற்றுவதற்கும் நாஸிப்படைகளை பின்துரத்தி அடிப்பதற்கும் ஆயத்தங்கள் செய்யப்பட்டன.

1944-ம் வருஷ ஆரம்பத்தில் பிரிடன் யூ-படகுகளை அடக்கி ஆண்டு ஜெர்மன் கொள்ளைக் கப்பல்களை உபயோகமற்றதாகச் செய்து சமுத்திரங்களில் ஜெர்மனியின் சாமான் கப்பல்கள் நடமாடாமல் தடுத்து ஜெர்மனியை உலகத்தின் மற்ற பாகங்களிலிருந்து துணித்துவிட்டது மட்டுமல்லாமல் படைகளை இறக்கக்கூடிய 50 ரக படகுகளையும் அது தயாராக வைத்திருந்தது. படகுகள் பெரும்பாலும் உள்நாட்டு தொழிற்சாலைகளிலும் படகு தளங்களிலும் பிரிடனில் உள்ள தொழிற்சாலைகளிலும் கட்டப்பட்டன.

உலகம் பலமாகத் தாக்க தயாராகி வந்தபொழுதும் கடல் மார்க்கங்களை, சமாதானத்தை விரும்பும் உலக மக்களுக்கு உபயோகப்படும்படி செய்துவந்ததுதான் பிரிடனின் பெரும் முயற்சியாகும். மேலும் பிரிடனும் திருப்பித் தாக்க தயார் செய்துவந்தது. மற்ற நேச தேசங்களுடன் பிரிடனும் சேர்ந்து திருப்பித் தாக்கிவந்தபொழுதும் ஜப்பானை முறியடிப்பதற்கு ஒரு பங்கு எடுத்துக்கொள்வதற்கும் பிரிடன் தயார் செய்துவந்தது.

இப்பொழுது எழுதப்பட்டிருக்கும் பிரிடிஷ் கடற்படை சரித்திரத்தின் புகழ் நிரம்பிய அத்தியாயத்தின் கடைசி வாக்கியங்கள் இவைதான்.

---

# வெற்றிகரமான ஆகாயப் போர்.

## பிரிடிஷ் விமானப்படை ஜெர்மன் விமானப்படையை முறியடித்த விதம்.

### விங் கமாண்டர் L. V. பிரேசர்.

ஜெர்மனி முறியடிக்கப்பட்டது. உலகத்திலேயே மிகவும் சக்திவாய்ந்திருந்த ராணுவ வல்லரசு நொருக்கப்பட்டது. உலகத்திலுள்ள சுதந்திர நாடுகள் ஒன்றுபட்டு, இதற்குமுன் கண்டிராத ஆயுதங்களின் ஆதிக்கத்துடன் எதிரியைத்தாக்கி, அவனை நசுக்கி சின்னாபின்னப் படுத்திவிட்டன.

ஜெர்மனியின் வீழ்ச்சியில் எந்த அம்சம் மகத்தான பங்கெடுத்துக் கொண்டதென்று நிச்சயமாக இப்பொழுது உள்ள சரித்திரக்காரரும், வருங்காலத்தில் தோன்றும் சரித்திரக் காரரும் சொல்லமுடியாது. ஆகிலும் அநேக அம்சங்கள் முக்கியத்வம் கொண்டாடக்கூடும். யுத்த சரித்திரத்தை நன்கு ஆராய்ச்சி செய்தால் பிரிடிஷ், ருஷ்ய, அமெரிக்க, தரை, கடல், ஆகாயப் படைகளில் பிரிடிஷ் விமானப்படை சிறந்ததென்று சொல்லலாம்.

பிரிடிஷ் விமானப்படை இல்லாவிடில் வெற்றி கிடைத்திருக்காதென்று நிச்சயமாகச் சொல்லலாம். 1940-ம் வருஷ வேனிற்காலத்தில் அது மிகவும் சக்திவாய்ந்திருந்த ஜெர்மன் விமானப்படையை முறியடித்து படையெடுப்பிலிருந்து பிரிடனைக் காப்பாற்றிவிட்டது. பிரிடன் முறியடிக்கப்பட்டிருந்தால் சுதந்திர ஐரோப்பாவுக்கு பாய்ச்சல் ஸ்தலம் மறைந்திருக்கும். பிரிடிஷ் விமானப்படை நீண்ட நெருக்கடியான சமயத்தில் சமாளித்துநிற்க பிரிடனுக்கு உதவி செய்தது. இந்த அவகாசத்திற்குள் பிரிடன் ஒரு மத்திய விமான தளமாகவும், முக்கியமான அணிவகுக்கும் ஸ்தலமாகவும் அமைக்கப்பட்டது. அங்கிருந்துதான் ஐரோப்பியப் படையெடுப்பு ஆரம்பிக்கப்பட்டு வெற்றிகரமாக முடிவுபெற்றது.

இறுதியில் ஜெர்மன் விமானப்படையை தரையைவிட்டுக் கிளம்பாமல் கட்டாயப்படுத்துவதற்கும், ஜெர்மனி போரை நடத்தவொட்டாமல் அதன் உற்பத்தி சக்தியை அழித்ததற்கும் காரணமான விமானத்தாக்குதல்களுக்கு பிரிடிஷ் விமானப்படைதான் ஆஸ்பதமாக இருந்தது. ஆயிரக்கணக்காகச் சென்று ஜெர்மன் தொழிற்சாலைகளை அழித்து, யுத்தத்தை நடத்தும் எதிரியின் சக்தியைக் கொஞ்சம் கொஞ்சமாக அழித்து கடைசியில் நிர்மூலமாக்கிய

பிரிடிஷ், அமெரிக்க விமானங்கள் பிரிடனிலிருந்துதான் தினசரி பகலிலும், இரவிலும் புறப்பட்டன. யுத்தத்தில் முதல் வருஷத்திலேயே பிரிடன் முறியடிக்கப்பட்டிருந்தால் இந்தத் தாக்குதல்கள் நடைபெற்றிருக்காது. உலகத்தில் ஒருவரும் ஆக்ஷேபிக்கமுடியாத இந்த உண்மைகள் பிரிடிஷ் விமானப்படை இல்லாவிடில் வெற்றி கிடைக்காது என்ற பாத்யத்தை ஊர்ஜிதப்படுத்துகின்றன.

1939-ம் வருஷம் வேனிர்காலக் கடைசியில் பிரிடன் சரித்திரத்திலேயே மிகவும் அபாயம் பொருந்திய யுத்தத்தில் ஈடுபட்டது முதல் பிரிடிஷ் விமானப்படை அநேக கட்டங்களைத் தாண்டி இருக்கிறது.

முதல் எட்டு மாதங்களில் இருந்த அயர்வுக்குப்பின் பிரிடிஷ் விமானப்படை நார்வீஜியப் போரில் தியாகம் செய்யத்துவங்கியது. அதன்பின் இரண்டு மாதம் கழித்து விமானப்படை ஜெர்மன் விமானப்படையின் தாக்குதலைச் சமாளித்து டன்கர்க்கிலிருந்து படைகளைப் பின்வாங்க கடற்படைக்கு உதவியளித்தது. பிரான்ஸில் அபாரமான நஷ்டம் ஏற்பட்டபின்னும் பிரிடிஷ் விமானப்படை பிரிட்டனுக்கான போரை வெற்றிகரமாக நடத்த போதுமான வலிமையும், சலன சக்தியும் பெற்றிருந்தது. 84 நாட்களில் சராசரி தினசரி 28 வீதம் 2,375 விமானங்களை இழந்த ஜெர்மன் விமானப்டை அதற்குப்பின் மறுபடியும் பலம் பெறவில்லை. அந்தப்போரில் பிரிடிஷ் விமானப்படை 733 விமானங்களையும் 375 விமானிகளையும், இழந்தது. நஷ்ட அளவு 3-க்கு ஒன்று வீதம் நமக்கு ஏற்பட்டது.

சண்டை விமானப்படை இந்த நடவடிக்கையில் கியாதி பெற்றது. ஆகிலும் துறைமுகங்களில் படையெடுப்புக்காகத் தயாராக இருந்த படகுக் கூட்டங்களை நொருக்கிய பாம்பர் கமாண்டின் வேலையையும் நாம் புரக்கணித்துவிடமுடியாது.

முதல் கட்டம் தாண்டியபின் பிரிடிஷ் விமானப்படை எதிரிகளின் விமானப்படையை அழித்துக் குலைக்க முயற்சி செய்தது. தன்னந்தனியாக, இன்னும் அதிக சக்திவாய்ந்த ஜெர்மனியிடமுள்ள விமானங்களை அது தேடிச்சென்று போரை நடத்திற்று. அமெரிக்கா யுத்தத்தில் புகுந்த சில மாதங்களுக்கு முன் பிரிடிஷ் விமானப்படை ஆரம்பத்தில் கிடைத்த மேன்மையைக் காப்பாற்றிக்கொண்டதுடன் அதை அபிவிருத்தியும் செய்துகொண்டது.

பிரிடன் பேரில் வந்த எதிரி விமானங்களை சண்டை விமானங்கள் இரவில் தாக்கின. ஐரோப்பா பேரிலும் அவைகள் சென்று ரயில் வண்டிகளை உடைத்துத் தள்ளுவதின்மூலம் எதிரிக்கு அபாரமானத் தொந்திரவை அளித்தன.

இதே சமயத்தில் வெடி விமானப்படையும் ஜெர்மனியின் யுத்த தளவாட உற்பத்தி அளவை அதமபக்ஷமான தேவைக்குக் குறைவாக இருக்கும்படி செய்வதென்ற நீண்டகால திட்டப்படி தாக்குதலைத் துவக்கம் செய்தது. நேசதேச வெற்றிக்கு இந்த நடவடிக்கைதான் மிகவும் முக்கிய காரணமாகிவிட்டது. யுத்த ஆரம்பத்திலிருந்து நாலரை வருஷங்களுக்குள்ளாக பாம்பர் கமாண்டுப்படை பன்னிரண்டு மடங்கு அதிகபலம் பெற்றுவிட்டது. அமெரிக்க வெடி விமானங்கள் பகல் தாக்குதலை ஏற்றுக்கொண்டு இரவு நடவடிக்கைகளை பிரிடிஷ் விமானப்படையிடம் ஒப்படைத்துவிட்டன. வெடிவிமானங்கள் 1940-ம் வருஷம் மார்ச்சு மாதத்திலிருந்ததைவிட 24 மடங்கு அதிக கனமுள்ள வெடிகுண்டுகளை வீசிவந்தன. விமானங்களின் பாகங்கள், டாங்கிகள், யூ படகு யந்திரங்கள், மற்றும் முக்கியமான சாமான்களை உற்பத்திசெய்யும் தொழிற்சாலைகளுக்கு வெடிகுண்டு வீச்சினால் ஏற்பட்ட நஷ்டம் பூராவாக ஒருபொழுதும் கணக்கிடமுடியாது. ஆகிலும் யுத்தப் போக்கில் ஜெர்மனியின் போர்புரியும் திறமை மேன்மேலும் பாதிக்கப்பட்டு வந்தது.

மற்ற முனைகளிலும் பிரிடிஷ் விமானப்படை சும்மா இருக்கவில்லை. மேற்கு ஆபிரிக்காவில், பிரிடனிலிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் வந்த விமானங்கள் குவிந்தன. இந்த விமானங்கள் பிறகு ஆபிரிக்கா வழியாக மத்திய கிழக்கு தளங்களுக்குச் சென்றன. இந்த இறக்கமற்ற படைக்கு அடுத்தவந்த வருஷங்களில் அதிக லாபம் கிடைத்தது. கெயிரோவுக்கு வெற்றிகரமாகச் சென்றுவிடுவது என்று யதேச்சாதிகாரிகள் கனவு கண்டதைச் சிதற அடித்த மாண்ட்காமரிக்கு நேசதேச விமானப்படைதான் ஒத்தாசை செய்தது. அந்த நடவடிக்கையில்தான் சேனைகளுக்கு எவ்வளவுதூரம் விமானப்படை உதவி செய்யக்கூடுமென்பது முதன் முதலாக ஸ்தாபிக்கப்பட்டது.

இந்த முறை இரண்டு வருஷங்களுக்குப்பின் இரண்டாவது பிரான்ஸ் யுத்தத்தில் கையாளப்பட்டது. எல் அலாமீனில் மேற்குமுகமாக ஓடின படைகளைத் தாக்கியதுபோல் வடக்கு பகுதிகளிலுள்ள ஜெர்மன் சேனைகள் விமானங்களால் தாக்கப்பட்டன. டிரிபோலிக்கு

போரும் ரஸ்தாவிலும் அதன்பின் டூனிஸிலும்தான் ஜெர்மன் சேனை முதல் முதலாக பிரிடிஷ் விமானப்படையின் அழிக்கும் சக்தியை உணர்ந்தது. படைகளைப் பின்வாங்கவொட்டாமல் தடுத்ததுடன் விமானப்படைகள் தெற்கு ஐரோப்பாவிலிருந்து ஆபிரிக்காவிலுள்ள ரோம்மெலுக்குச் செல்லும சப்ளை மார்க்கங்களை நொருக்குவதன்மூலம் அது வெற்றிக்குமுன்கூடியே அணைகோலிவிட்டது. இதுதான் நேசதேச வெற்றிக்கு முக்கியமான சாதகமாகயிருந்தது. இதுதான் கேப் பானில் நடைபெற்ற சரணகதிக்கு சூசகம்.

அதற்குப்பின் நடவடிக்கைகள், ஸிஸிலியிலும், இதாலிய தீபகற்பத்திலும், ரோம், அதற்குப்பின்னும், கடைசியில் கோதிக் அரணிலும், போ நதி பள்ளத்தாக்கிலும் ஜெர்மன் படைகளைத் துன்புறுத்துவதுதான். அநேக தடவைகளில் ஜெர்மனி பின்வாங்கும்பொழுது பிரிடிஷ் விமானப்படை அவைகளை ஓடும்படி செய்ததுடன், இரண்டாம் தரமான ரஸ்தாக்கள் வழியாகச் சென்ற சோர்வுற்றிருந்த படைகளையும் அவைகள் அழித்துவந்தன.

பிரிடனிலுள்ள விமான தளங்களிலிருந்து பிரிடிஷ் விமானப்படை ஜெர்மன் தொழிற்சாலைகளை இரவு காலங்களில் பலமாகத் தாக்கிவந்தது. டி.-தினத்திற்காக விமான பலத்தையும் அதிகப்படுத்திவந்தது. பிரிடனின் விமான சக்தி உச்சநிலைமையை அடைந்து வந்தது. 1937-ம் வருஷத்தில் திட்டம் போடப்பட்டு கட்டிமுடிக்கப்பட்ட நான்கு இஞ்சின்களுள்ள கனமான வெடி விமானங்கள் உலக கியாதிபெற்ற நடவடிக்கைகளில் ஈடுபட்டன. 1942-ம் வருஷம் வேனிர்கால ஆரம்பத்தில் 1,000 வெடி விமானங்கள் முதல் முதலில் கொலோனைத் தாக்கின. நகரத்திலுள்ள தொழிற்சாலை நிலயம் தீக்கிரையாகித் தூளாகிவிட்டது. மற்ற இடங்களிலும் தாக்குதல் தொடர்ந்தது.

1943-ம் வருஷம் ஜூலை 9-ம் தேதி முதல் அக்டோபர் 17-ம் தேதி வரையில் 100-ல் 72 இரவுகளில் வெடி விமானப்படை ஜெர்மனியைத் தாக்கிவந்தது. அந்த வருஷத்தில் ஜெர்மனியின் பெரிய தொழிற்சாலை நகரங்கள் பலமாக நாசமாக்கப்பட்டுவிட்டதால், அவைகள் உற்பத்திசெய்த அளவுக்கு அதிகமாகவே தளவாடங்களை உபயோகப்படுத்திவந்தன. இந்த மகத்தான தாக்குதலில் நமது விமானப்படைக்கு சொற்ப சதவிகிதம்தான் நஷ்டம் ஏற்பட்டது. உதாரணமாக, 1943-ம் வருஷம் ஜூலை மாதத்தில் நாம் இழந்த ஒவ்வொரு விமானத்திற்கும் 80 டன்கள் மொத்த எடையுள்ள வெடிகுண்டுகளை வீசியிருக்கிறோம். அமெரிக்க விமானப்படை பிரிடனுக்குவந்து அங்கிருந்து நடமாட ஆரம்பித்தபின் ஜெர்மன் தொழிற்சாலைகளைத் தாக்கும் நடவடிக்கை அதிகரித்தது. 1944-ம் வருஷம் வேனிர்காலத்தில் ஜெர்மன் தொழிற்சாலைகளுக்குப் பலமான அழிவு ஏற்பட்டதினால் முக்கியமான ஜெர்மன் படைகளுக்கு, டாங்கிகளும், பீரங்கிகளும், கவசம்பூண்ட போக்குவரத்து வாஹனங்களும், விமானப்படையும் குறைவுபட்டுவிட்டன.

இந்தக் காலத்திலெல்லாம் பிரிடிஷ் விமானப்படை மற்ற முக்கியமான வேலைகளிலும் ஈடுபட்டிருந்தது. அவைகளில் துணைக்காவல் புரிவதும், யூ-படகுகளை வேட்டையாடுவதும் முக்கியமானவைகள். 1942-ம் வருஷத்தில் ஜெர்மனியின் யூ-படகுகள் அட்லாண்டிக் கடல் தாண்டிவரும் ஸப்ளைகளுக்கு பலமான ஆபத்து உண்டுபண்ணிவந்தன. 1,00,00,000 சதுர மைல்கள் கொண்ட பிரதேசத்தில் கடற்கரை கமாண்டைச் சேர்ந்த விமானப்படைகள் தினசரி ரோந்து செய்து வந்தன. $3\frac{1}{2}$ வருஷங்களில் அது 5,300 கப்பல் கூட்டங்களுக்குத் துணைக்காவல் புரிந்தது. 1,628 எதிரி விமானங்களைத் தாக்கிற்று. 1944-ம் வருஷம் வேனிர்காலத்தில் பிரிடிஷ் கடற்படையுடன் சேர்ந்து, அதிக நம்பிக்கைக் கொண்டவர்களும் அபாயம் மிகுதியாக இருந்தபொழுது அசாத்யம் என்று நினைத்திருக்கக்கூடிய வகையில், யூ-படகுகளை உபயோகமற்றதாகச் செய்துவிட்டன. சாமான் கப்பல்களைவிட அதிகமாக நீர்மூழ்கிகள் மூழ்கடிக்கப்பட்டன. பிரிடனுக்கான போரைப்போல் அட்லாண்டிக் போரும் வெற்றிகரமாக முடிந்தது. அந்தப் போரில் கடற்கரை கமாண்டைச் சேர்ந்த விமானங்கள் ஒரு வருஷத்திற்கு 39,000 தடவைப் பாய்ந்து சென்றிருக்கின்றன.

பெரிய கமாண்டுக்குப் பதிலாக வந்த போக்குவரத்து கமாண்டு விமானப்படை 1943-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் அமைக்கப்பட்டது. அதற்குள்ளாகவே முற்போக்கான அநேக நடவடிக்கைகள் பூர்த்தி செய்யப்பட்டிருந்தன. மேற்கிலிருந்து கிழக்குக்கு 1919-ம் வருஷத்தில் முதல் முதலில் துணிவுடன் சென்றவர்களின் மார்க்கத்தின் வழியாக விமானங்கள் தொடர்ச்சியாகச் சென்று வந்தன. போக்குவரத்து விமானப்படை முக்கியமாக போர் முனைகளுக்கு விமான மூலம் படைகளை அனுப்புவதும், அவர்களுக்கும் முன்னணிப் போர் முனையிலுள்ள நேசதேசப் போர்ப் படைகளுக்கும் ஆகாயமார்க்கமாக முஸ்தீப்புகளை வழங்குவதும் முக்கியமான வேலைகள்.

பயிர்ச்சி அளிக்கும் விமானப்படை நடவடிக்கையை நடத்தும் விமானப்படைக்கு புதிய விமானிகளையும், புதிய தொழிற்பயிற்சி பெற்றவர்களையும் ஸப்ளை செய்து வந்தது. விமானப்படையை நல்ல முறையில் வைத்துவரும் விமானப்படை நிமிஷத்திற்கு 6 டன்கள் சாமான்களைக் கையாண்டு, பகல் இரவாக விமானங்களுக்கும், விமானப் படை வேலைக்காரர் களுக்கும் வாஷர் முதல் சகலவிதமான முஸ்தீப்புகளையும் வழங்கிவந்தது. பிரிடிஷ் விமானப் படையைச் சேர்ந்த பல்வேறு சேவைப் படைகளின் சோர்வற்ற பிரயாசையைப்பற்றிச் சுருக் கமாகச் சொல்லுவதும்கூட சாத்தியமில்லை. ஆனால் வெற்றி பெறும் துறையில் ஒவ்வொன் றும் அதன் வேலையைச் சரிவரச் செய்துவந்தது.

1944-ம் வருஷம் வசந்தகாலத்தில் ஒரு புதிய கட்டம் ஆரம்பமாகிற்று. ஐரோப்பியப் படையெடுப்புக்குமுன் பிரிடிஷ் விமானப்படையும், அமெரிக்க விமானப்படையும் பிரான் ஸிலும், ஹாலந்திலும் உள்ள போக்குவரத்து மார்க்கங்களை பலமாகத் தாக்கிவந்தன. வெகு சீக்கிரத்தில் பிரெஞ்சு இருப்புப் பாதை அமைப்பு சீர்கெட்டுப் போய்விட்டது. ஒவ்வொரு நிலயமாக இடைவிடாது நொருக்கப்பட்டு இறுதியில் கைவிடப்பட்டது. இதே சமயத்தில் ஜெர்மனிக்கு சொந்தமான எண்ணெய் பிரேதேசங்களும் பலமாகத் தாக்கப்பட்டன. இந்த ஜெர்மனியின் யுத்தத்திற்கு முக்ய ஆதாரமான எண்ணெய் இருப்பை அழிப்பதிலும் அமெரிக்க விமானப்படைக்கு பிரிடிஷ் விமானப்படை உதவி செய்து வந்தது. 1944-ம் வருஷம் ஆகஸ்டு மாதத்தில் எதிரியின் எண்ணெய் நிலமை மோசமாகி விட்டது. சேர்மான எண்ணெய் உற்பத்தி செய்யும் சாலைகளும் எண்ணெய் சுத்தி செய்யும் நிலயங்களும் நொருக்கப்பட்டன. பால்கன்ஸிலுள்ள போக்குவரத்து அமைப்பு நொருக்கப்பட்டது. ஜெர்மனிக்கு மிகுதியாக எண்ணெய் ஸப்ளை செய்யும் ஆதாரமான டான்யூப் நதியில் எண்ணெய் ஏற்றிச் செல்லும் கப்பல்கள் வராதபடி சுரங்கவெடிகள் பாவப்பட்டன.

1944-ம் வருஷம் ஜூன் மாதம் 6-ம் தேதியன்று நார்மண்டி கடற்கரையில் படைகள் இறங்குமுன் பிரிடிஷ் விமானப்படை எதிரியின் கடற் கரையிலுள்ள ரேடியோ நிலயங்கள் பேரிலும் பீரங்கி ஸ்தானங்கள் பேரிலும் வெடிகுண்டுகளைப் போட்டு அவற்றை நொருக்கி விட்டது. படைகள் கரையிலிறங்கியபொழுது எச்சரிக்கைக்காக ஜெர்மனி அமைத்திருந்த ஏற்பாடுகள் ஒன்றும் பயன்படவில்லை. பிரெஸ்டிலிருந்து பெல்ஜியம் வரையிலுள்ள ரேடி யோக் கோர்வைகள் வேலை செய்யவில்லை. படைகளிறங்கும் பிரதேசத்திலிருந்த 10 பீரங்கி அமைப்புகள் வெடி குண்டுகளால் தகர்க்கப்பட்டுவிட்டன. நேசதேசத்தார்களுக்கு மிகவும் சொல்பமான ஆள்சேதமதான் ஏற்பட்டது. நேசதேசத்தாரின் ஓய்வற்ற விமானத் தாக்கு தலினால் ஸப்ளைகள் வரும் மார்க்கங்கள் சீர்கெட்டுப் போய்விட்டதால் எதிரிக்குவரும் உதவிப் படைகள் வெகு தூரத்திலேயே நிலைபெற்றிருக்கவேண்டியதாக ஆகிவிட்டது.

ஆகஸ்டு 1944, கெயின் மத்திய நிலயம் வீழ்ச்சிபெற்றது. ஜெர்மானியர்கள் செய்த இருதித் தாக்குதலை அவுட் வாணங்களைப்போடும் பிரிடிஷ் 'டைபூன்' விமானங்கள் முறியடித்தன. பாலேயிலிருந்து ஸெயின் நதிக்கு பின்வாங்கும் மார்க்கங்களை ஏராளமான விமானங்கள் தாக்கின. வடக்கு பிரான்ஸிலுள்ள ஜெர்மன் படைகள் அலங்கோலமாக பெல்ஜியத்தின் வழியாக எல்லைச்சரகத்திற்கும் அதற்கு பின்னும் துறத்தியடிக்கப்பட்டன.

கடைசி கட்டத்துக்கு விமானப்படை தயார் செய்யப்பட்டது. பிரிடனிலிருந்து புறப் பட்ட எல்லா விமானங்களும் ஜெர்மனியை தாக்கச்சென்றன. கனமான வெடி விமானங்களும், நடுத்தர வெடி விமானங்களும், பைடர் பாம்பர்களும், அவுட் வாணங்களைப்போடும் விமானப் படையும் ஐரோப்பிய விமான தளங்களிலிருந்து வந்ததால் ஜெர்மனி அவைகளின் தாக்குதல் வட்டாரத்துக்குள் வந்துவிட்டது.

உலக ஆதிக்கத்துக்கு அடிகோல நினைத்த ஜெர்மன் விமானப்படை குறுக்கிட சக்தியற்று இருந்தது. அதன் பகுதிகள் நொருக்கப்பட்டிருந்தன. அதன விமான தளங்களும், சப்ளை அமைப்பும் அழிக்கப்பட்டிருந்தன. ஆகையால் தலைவிரிகோலமாக பின்வாங்கும் படைகளுக் கும் அது ஒத்தாசை செய்யமுடியவில்லை. ஆனால் அதன் விரோதியான பிரிடிஷ் விமானப் படை பிரான்ஸுக்கு வந்துவிட்டது. அது ஒரு நாளைக்கு 1,000 தடவை பாய்ந்து சென்றது.

விமானப்படை அதிக சிரமப்பட்டு போரை நடத்தவேண்டியிருந்தது. ஆரம்ப காலத் தில் விமானப் போர் தரத்துக்கும் அளவுக்கும் நடைபெற்றது. பிரிடிஷ் விமானப்படைக்கு சங்கியையும் சேர்க்கப்பட்டபொழுது முடிவு தூரத்திலில்லாமல் போய்விட்டது. ஏற்கனவே இருந்த ஜெர்மன் சங்கியை ஆதிக்கத்தை நேர்முகமாகவும் மறைமுகமாகவும் தாக்குதல் செய்து குறைத்துவிட்டோம். பொருமையுள்ள திடமும், சிலாக்கியமான பயிற்சியும், தைரியமான துணிவும், எதிர்த்துநிற்கமுடியாத தாக்குதலும்தான் உலகத்தின் ராணுவ சரித்திரத்திலேயே மிகவும் சிலாக்கியமான வெற்றியை சம்பாதித்துவிட்டன.

# விஞ்ஞான சாஸ்திரிகள் ஹிட்லரை முறியடித்தார்கள்.

## மருந்தும், போக்குவரத்தும் மாறுதலடைந்தது.

(ஹார்லி வி. உசில்.)

இரண்டு உலக யுத்தங்களுக்கு மத்தியில் உலக சமாதானத்தை பரிபாலிக்க விஞ்ஞான சாஸ்திர முறையிலும் அல்லது மற்ற வகைகளிலும் பிரிடன் மகத்தான பரீக்ஷைகளைச் செய்துவந்தது.

ஆகிலும் அதற்கு எதிர்ப்பு பலமாக இருந்தது. ஏனெனில் ஹிட்லர் உலகத்தை மறுபடியும் ரத்த வெள்ளத்தில் ஆழ்த்த உறுதிகொண்டிருந்தான். அவனுக்கு பிரிடனிடத்தில் எப்பொழுதும் பீதி இருந்துவந்தாலும் அவனுடைய ஆலோசகர்கள் பிரிடன் அழிந்து வருகிறதென்றும் எந்நிலைமையிலும் பிரிடன் பலம் பெறும்பொழுது அது காலந்தப்பியதாகி விடும் என்றும் ஹிட்லரை நம்பும்படி செய்துவிட்டார்கள்.

இது யுக்திபூர்வமாக இருந்தபோதிலும் இரண்டு முக்கியமான அம்சங்கள் கவனிக்கப் படவில்லை. முதலாவது மெத்த அபாயம் ஏற்பட்டபொழுது பிரிடன் நூதனமான சாதகங்களை மிகுந்த லாகவத்துடன் தயாரித்துவிடும். இரண்டாவதாக பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திர இஞ்சினியரிங் சாமர்த்தியத்தின் உயர்வு. மகத்தான சங்கையையுள்ள ஜெர்மன் விமானப் படையை பிரிடனுக்கான போரில் முறியடித்தது தரத்தின் உயர்வுதான். நவீன யுத்த முறையில் நடைபெறும் ஒவ்வொரு போர்முனையிலும் ஜெர்மனியுடன் சமத்வம் அடைந்து மீறிச்சென்றதற்கு முதலில் சொல்லிய லாகவம்தான் காரணம்.

ஹிட்லரின் சவாலை ஒப்புக்கொண்டபின் பிரிடனின் எல்லா ஐசுவரியங்களும் பூரணமான யுத்தத்தை நடத்த ஒன்றுதிரட்டப்பட்டன. இந்த மகத்தான முயற்சியின் பயனாக யுத்த தளவாட உற்பத்தி அதிகரித்தது. தளவாடங்களின் ரகமும் உயர்வடைந்தது. இவையெல்லாம் பிரிடிஷ் கடற்கரையிலிருந்து 25 மைல்களில் எதிரி இருந்தபொழுதும் பிரிடிஷ் நகரங்களும், துறைமுகங்களும் ஜெர்மன் விமானப்படையின் குண்டு வீச்சுக்குட்பட்ட போதும் நடைபெற்றன.

ஒரு தீவிலுள்ள ஜனங்கள் சக்திவாய்ந்த எதிரியுடன் சமாளித்துக்கொண்டும், வாழ்க்கைக்கு அவசியமான பொருள்களுக்கு கடலை நம்பிக்கொண்டும் இருந்தார்கள் என்பதை பின்திரையாகக்கொண்டுதான் விஞ்ஞான சாஸ்திரத்தின் அரிய சேவைகளை நாம் ஆராய்ச்சி செய்யவேண்டும்.

உண்மையான விஞ்ஞான சாஸ்திரி நல்ல எண்ணத்துடன்தான் ஒரு பிரச்னையை ஆராய்ச்சி செய்கிறான். மற்ற ஜனங்கள் அவனுடைய ஆராய்ச்சியின் பயனைப் பிறரை சுலபமாகவும் ஏராளமாகவும் கொல்லுவதற்கு பிரயோகம் செய்தாலும் அதை அவன் பொருட்படுத்தமாட்டான். பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகள் இந்த லக்ஷியத்துடன் இருந்ததனால் தான் அவர்கள் எதிரியை ஒவ்வொரு துறையிலும் முறியடிக்கும்படி தங்களுடைய புத்தி சக்தியை உபயோகப்படுத்த முடிந்தது.

விஞ்ஞான சாஸ்திர முறைகளைப்பற்றி சர்ச்சை செய்யும்பொழுது முதலில் பூரண யுத்தத்தை நடத்த மெத்த அவசியமான மன உறுதி, தேக உறுதியை நிலைநாட்டக்கூடிய மருந்து சாமான்களைப்பற்றிய ஆராய்ச்சியைக் கூறுவோம்.

பிரிடிஷ் வைத்திய வேலைக்காரர்கள் சந்தர்ப்பத்துக்கு தக்கவாறு சிறப்பாக நடந்து கொண்டிருக்கிறார்கள். வடக்கு ஆபிரிக்கா வெற்றிகளுக்கு மருந்துதான் பெரும்பாலும் உதவி செய்தது. அதன் மூலம் வியாதியால் பீடிக்கப்பட்டவர்கள் கூடுமானவரையில் குறைக்கப்பட்டு வந்தார்கள். 1942-ம் வருஷம் ஸெப்டம்பர் மாதம் முதல் நவம்பர் மாதம் வரையில் வியாதியினாலும் போரில் காயம்பட்டதினாலும் சிகித்சை செய்யும் நிலையங்களுக்கும், போர்முனை முதலுதவி இடங்களுக்கும் கொண்டுவரப்பட்ட எட்டாவது சேனையைச் சேர்ந்த ஸோல்ஜர்கள் ஆயிரத்துக்கு இரண்டுக்கும் குறைவானவர்கள். ஆனால் ரொம்மலின் ஆபிரிக்கப் படையில் எல் அலாமீனில் ஈடுபட்ட முதல்தரத் துருப்புகளில் 40 முதல் 50 சதவிகிதம் வயிற்றுப் போக்கினால் பலஹீனமடைந்தார்கள்.

பிரிடனில் ஆயிரக்கணக்கானவர்கள் ஒளிகளிலும் பூமிக்குள் உள்ள ஸ்டேஷன்களிலும் வசித்து வந்தபோதிலும் நாம் உபயோகித்த, வியாதிகளைத் தடுப்பதற்கான மருந்து வசதிகளின் மூலம்தான் யாதொரு தொத்து நோயும் உண்டாகாமல் 1940—1941-ம் வருஷத்திய

விமானத் தாக்குதலைச் சமாளிக்க முடிந்தது. மிகவும் முக்கியமாக நாம் கண்டுபிடித்தது பெனிஸிலின் என்ற மருந்து. அதன் மூலகர்த்தாவான லண்டன் செயிண்ட் மேரி ஆஸ்பத்திரியைச்சேர்ந்த ஆசிரியர் அலெக்ஸாண்டர் ப்ளெமிங், ஸ்டாபிலோகாகியின் வளர்ச்சியை அநேக வருஷங்களாக ஆராய்ச்சி செய்துவந்தார். 1929-ம் வருஷத்தில் அநேக அமைப்புகளை அவர் பதிவு செய்தார். அதன் உற்பத்திகள் மற்ற கிருமிகளின் உற்பத்தியைத் தடுத்தன. இந்த நூதன ஆராய்ச்சிகள் வைத்தியமுறைக்கு உபயோகப்படவில்லை. ஏனெனில் ஒரு முக்கியமான கோர்வை காணப்படவில்லை. இதற்கு வழிகாட்டி அசார் மீடியம் உள்ள வட்டமான கண்ணாடிக் கிண்ணம் அகஸ்மாத்தாகக் கெட்டுப்போனதிலிருந்து கிடைத்தது.

அதில் ஒரு தன்மை உண்டானதென்றும் அதற்கு சமீபத்தில் ஸ்டாபிலோகாகி புழுக்கள் அழிந்துவந்தனவென்றும் அவர் கண்டார். இதன் முக்கியத்வத்தை அவர் அறிந்தபோதிலும் அவரும் அவருடைய பிரிடிஷ் சகாக்களும் மனிதர்களிடத்தில் அதைப் பரீக்ஷை பார்ப்பதில் வெகு காலம் சிரமப்படவேண்டியதாயிருந்தது. ஆறு வியாதிபஸ்தர்களைச் சொஸ்தப் படுத்தினபின் சில உண்மைகள் வெளிப்பட்டன. முதலாவதாக பெனிஸிலின் ஸெப்ஸிஸ் வியாதியால் பீடிக்கப்பட்டிருந்தவர்களுக்கு சௌகரியம் அளித்தது. இரண்டாவதாக மலம் போக்கு அதிகமானபொழுது பெனிஸிலின் அதிகமாகவும் அடிக்கடியும் கொடுக்கப்பட வேண்டுமென்று ஏற்பட்டது.

அப்பொழுதுதான் ஆராய்ச்சிக்காரர்களும் வியாபாரிகளும் ஒன்றுபட்டார்கள். 1942-ம் வருஷத்தில் பிளாரி என்ற ஒரு விஞ்ஞான சாஸ்திரி அமெரிக்காவுக்குச் சென்று அங்குள்ள நிபுணர்களிடம் பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகள் ஆராய்ச்சி செய்த கோட்பாடு, நடைமுறை அனுபவத்தை வெளியிட்டார்.

பிரிடனின் யுத்தகால முயற்சியினின்றும் வியாதியை சொஸ்தம் செய்வதற்கு பெனிஸிலின் என்ற ஒரு மருந்து கண்டுபிடிக்கப்பட்டாலும் இன்னும் அநேக துறைகளிலும் மிகுந்த முன்னேற்றம் ஏற்பட்டிருக்கிறது. லண்டனின் கிருமி பேதகரான பைல்ட்ஸும் ஷெப்பீல்டிலிருந்த மாகிள்வைனும் சல்பனமைடீஸ் என்ற இயந்திரத்தின் மூலம் ஆராய்ச்சி செய்து ஆகாரத்தில் சில பேதகரை புகுத்தும் வழிகளை கண்டுபிடித்தார். வைடமின்களையும், ஹார்மோனிஸையும் ஒன்றுபடுத்தும் வேலையிலும் அநேக உபயோகமுள்ள முறைகள் கண்டுபிடிக்கப்பட்டன. வைடமின்ஸ் A, B, C, D என்பவை தினசரி சர்ச்சை செய்யப்படுகின்றன. மற்றும் சில மாறுதல்கள் நிபுணர்களுக்குத்தான் ருசிகரமாக இருக்கும்.

இந்த சில உதாரணங்கள் வைத்திய முறையில் பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகளுக்குள்ள சாதுர்யத்தையும், புத்தி கூர்மையையும் வெளிப்படுத்துகின்றன. மேலும் அதற்குமுன் வெளிநாடுகளிலிருந்து வந்துகொண்டிருந்த மருந்துகளுக்கு பர்த்தியாக வேறு மருந்துகளை உற்பத்தி செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்டபொழுது வியாபாரிகளும் தகுந்தவாறு பிரயாசை எடுத்துக்கொள்ளுவார்கள் என்பதையும் அது வெளிப்படுத்தியது. சமாதான காலத்தில் லண்டனுக்குவரும் விசிட்டர்கள் க்யூதோட்டத்துக்கு அவசியம் செல்வார்கள். இன்று அங்கு பிரிடனின் சிலாக்கியமான தாவர சாஸ்திரக்காரர்கள் ரகசியமாக ஸர் ஜாபரே எவான்ஸின் கண்காணிப்புக்கு உட்பட்டு ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். அவைகள் யுத்த தளவாடங்களுக்குப் பதிலாக பிரிடனின் விஞ்ஞான சாஸ்திர முறையில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களின் முன்னேற்றத்திற்கு உதவி செய்திருக்கின்றன.

யுத்தத்துக்கு முன் நிர்தோஷமான தோட்டங்களிலும், உத்யான வனங்களிலும், பூஞ்செடிகளும், ஒரு வகைக்கீரையும் பயிரிடப்பட்டன. மலேயா வீழ்ச்சிபெற்றபின் அந்தக் கீரை அதிக முக்கியத்வம் பெற்றது. ஏனெனில் சில ரகங்கள் ரப்பர் உற்பத்திக்கு உபயோகமுள்ளவை. சில ரகங்களை ஆராய்ச்சி செய்து எவை உபயோகமுள்ள ரகம் என்றும் அவை உலகத்தில் எங்கு நன்றாய் வளரும் என்றும் பிரிடிஷ் தாவர சாஸ்திரிகள் கண்டுபிடித்திருக்கிறார்கள். யூக்ரேனிலும், போலந்திலும் இருந்துவந்த ரகம் ஏகருக்கு 65 முதல் 100 ராத்தல் வரையில் ரப்பரைத் தருகிறது.

முள் செடியின் நாரானது அச்செடியின் விருக்ஷ தாதுவினால் அமைக்கப்பட்டது. அது உயர்தர பேப்பரைச் செய்ய உபயோகப்படுகிறது. அதன் உலர்ந்த இலைகள் சில மருந்துகளில் உபயோகிக்கப்படும். கோரோபில்லை உற்பத்தி செய்ய உதவுகிறது. பிராணிகளுக்கும் அதைத் தீவனமாக உபயோகிக்கலாம்.

உருளைக்கிழங்கு உற்பத்தி பிரிட்டனிலும், மால்டா, ஸைப்ரஸ், கென்யா, நைஜீரியா முதலிய இடங்களிலும் முக்கியத்வம் பெற்றுவிட்டது. வெளி நாட்டிலுள்ள விவசாயிகள் பிரிடனிலிருந்து வருஷா வருஷம் விதைகள் ஸப்ளை செய்யப்படும் என்று நம்பியிருந்தார்கள். சாதாரண விதை பருமனாக இருந்ததால் கப்பலில் கொண்டு போவதற்கு தாமதம் ஏற்பட்டது. இந்தப் பிரச்னையைத் தீர்க்க க்யூவிலுள்ள நிபுணர்கள் ஒரு உபாயத்தைக் கண்டுபிடித்தார்கள். சாதாரண கிழங்கிலிருந்து நுனி பாகம் மட்டும் உலர்த்தப்படுகிறது. அதிலிருந்து உண்டாகும் அணுக்குகள் சாதாரண விரையின் 15-ல் 1-பாகம் தான் கனமுள்ளவை. தேவையான இடத்திற்கு அவைகளை விமான மூலம் கொண்டு போகலாம்.

பலரக மண்ணுக்கு தகுந்தபடி ஆராய்ச்சி மூலம் உரங்களும், காய்கறிகளுக்கும் கனிவர்க்கங்களுக்கும் உண்டாகும் மரக்காளான்களையும் விட்டில் பூச்சிகளையும் அழிக்க மருந்துகளும் உற்பத்தி செய்யப்பட்டன. ஜாட்ரல் ரஸாயன பரீக்ஷைசாலையில் நார்கள், மரங்கள் மருந்துச் செடிகள் முதலியவை சம்பந்தமாக விரிவான ஆராய்ச்சிகளைச் செய்திருக்கிறார்கள். உதாரணமாக உபயோகமற்றதென்று சொல்லிவந்த எல்டர் மரம் இப்பொழுது மரசத்துக்கு முக்கியமாக உபயோகமுள்ளதென்று கண்டுபிடிக்கப்பட்டது.

தோட்ட நாணல்களிலிருந்தும் எல்டர் மரங்களிலிருந்தும் தாவர சாஸ்திரிகள் யுத்த தளவாடத்திற்கு முக்கியமான பொருளைக் கண்டுபிடித்தார்கள். இந்த ஆராய்ச்சியின் பலன் யுத்தத்துக்குப் பிந்திய உலகத்திற்கு பயன் தரக்கூடும்.

உருளைக்கிழங்கு விதைகளைப்போல மற்ற உணவுப் பொருள்கள் சம்பந்தமாகவும் போக்குவரத்து பிரச்னை மிகவும் சிரமமானதாக இருந்தது. சாதாரணமாக உணவுப் பொருள்களை வெகு தூரம் கொண்டுபோகவேண்டுமென்றால் அதை சீதளப்படுத்தும் ஏற்பாடுகள் இருக்கவேண்டும். ஆகிலும் டப்பிகளில் அடைக்கும் முறைகள் அபிவிருத்தியடைந்திருந்த போதிலும், அதிகமான சாமான்களைக் கொண்டுபோகும் பிரச்னை தீர்ந்து விடவில்லை. திரவமிருந்தால்தான் கெடுதல் ஏற்படும். திரவபதார்த்ததை நன்றாய் எடுத்துவிட்டால் இந்த பிரச்னைகள் தீர்ந்துவிடும். கெடுதலுக்கான காரணம் போய்விடும், பருமனும் குறைந்துவிடும்.

இந்த முறையும் இந்த யுத்தத்தினால் ஏற்பட்ட ஒரு பெரிய உணவுப்பொருள் அபிவிருத்தி. அதாவது, உணவுப்பொருள் குறைவு ஏற்படக்கூடிய எந்த பாகத்துக்கும் அவைகளை அனுப்ப உணவுப்பொருள்களை சௌகரியமாகச் சேமித்து வைக்கலாம். மேலும் வெகுதூரத்திலிருக்கும் மாகாணங்களிலுள்ளவர்களும் பலரக சமத்வமுள்ள ஆகாரத்தை உட்கொள்ளலாம். அதற்கு அவசியமானது பங்கீடுசெய்ய சரியான அமைப்பு இருக்கவேண்டும்.

அதன் பிறகு பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகள் மற்றொரு முறையைக் கண்டுபிடித்தார்கள். அதன் பிரகாரம் புரோடீன் அதிகமாக உள்ள காடியை சர்க்கரை மிகுதியாக உள்ள செடிகளிலிருந்து உண்டுபண்ணிவிடலாம். இந்த முறையைக் கையாளும் அநேக தொழிற்சாலைகள் மேற்கு இந்தீஸில் அமைக்கப்பட்டிருக்கின்றன. அங்கு விளையும் கரும்பு தேவையான புரோடீனைத் தரக்கூடும்

பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகள் கடலிருந்து மிகவும் உபயோகமுள்ள புரோடீனைத் தயாரிக்க முயற்சி செய்து வருகிறார்கள். அது வெற்றிகரமாக முடிந்தால் உலகத்தின் புரோடீன் ஸப்ளை ஒரு மாதத்திற்கு லெட்சக்கணக்கான டன்கள் அதிகரித்துவிடும். இந்த ஆராய்சசிகள்மூலம் நிலத்தைப்போல கடலையும் பண்படுத்த முடியுமாவென்பதுதான். அதாவது தண்ணீருக்கு உரங்களைச் சேர்த்துவிடுவது. இத்துடன் சிறிய மீன்களும்காப்பாற்றப்படக்கூடிய குட்டைகளையும் தயாரித்துவிட்டால் கடலிலிருந்து மீன்களை விஞ்ஞான சாஸ்திர முறையில் உற்பத்தி செய்வதையும் நாம் சாதித்து விடுவோம்.

உணவு உற்பத்தி சம்பந்தமான இந்த ஆராய்ச்சிகளெல்லாம் யுத்த அவசியத்தை முன்னிட்டு அதிக முன்னேற்றமடைந்திருக்கின்றன. ஆகிலும் பிரிடனின் ஆராச்சியும் சாதனையும் உலகம் பூராவிலும் ஆகாரத்தின் தரத்தை உயர்த்திவிடும்.

இதுவரையில் புதிய மருந்துகளாலும் புதிய உணவுப்பொருள் உற்பத்தி முறைகளாலும் ஜீவனைக் காப்பாற்றும் முறைகளைப்பற்றிச் சொன்னோம். எதிரியின் ராணுவ சக்தியை அழிக்க விஞ்ஞான சாஸ்திரம் எவ்விதம் உதவி செய்ததென்று நாம் பார்ப்போம். இந்த அம்சத்திலும் பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகள் யுத்தத்துக்குப்பின் உலக அபிவிருத்திற்கு பேருதவி செய்திருக்கிறார்கள்.

1934-ம் வருஷத்தில் ராபர்ட் வாட்ஸன்-வாட் தலைமையில் பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகள் விமானத்தின் வருகையை உயர்தரமான சப்த அலைகளின்மூலம் கண்டுபிடித்தார்கள். 1941-ம் வருஷத்தில்தான் பிரிடிஷ் பொதுமக்கள் இந்த நூதனமான முறையை அறிந்தார்கள்.

பீவர்ப்புருக் பிரபு பின்வருமாறு சொன்னார். "ரேடியோதான் இருட்டில் எதிரியை அழிக்கிறது. மேகங்களுக்குப்பின் இருக்கும் எதிரியைக் கண்டுபிடிக்கிறது. ரேடியோதான் சண்டை விமானத்தை எதிரி ஒளிந்திருக்கும் இடத்திற்கு அனுப்பி அவனை அழித்துவிடுகிறது." இந்தக் கருவியின் உள் விபரங்கள் இன்னும் ரகசியமாக இருக்கின்றன. இருட்டு, மூடுபனி, உறைபனி, மேகம் முதலியவற்றை பொருட்படுத்தாமல் அது லக்ஷியங்களை நிச்சயமாகக் கண்டுபிடித்துவிடும் என்பதைத்தவிர அதைப்பற்றி ஒன்றும் சொல்ல இயலாது.

ரேடியோ லொகேஷன் கருவியுடன் டெலிவிஷனையும் சேர்த்துக்கொள்ளவேண்டும். முதல் முதலாக பிரிடனில்தான டெலிவிஷன் கண்டுபிடிக்கப்பட்டு பரிக்ஷித்துப்பார்க்சப்பட்டது. யுத்த சமயத்தில் வர்ணமுள்ள படங்களையும் உண்டுபண்ண அது அபிவிருத்தி செய்யப்பட்டது.

இந்த இரண்டு புதிய சாதனங்களும் யுத்தத்துக்குப்பின் நமது வாழ்க்கைக்கு உபயோகமுள்ளதாக இருக்கும். இரண்டும் ஜனங்களை சந்தோஷப்படுத்துவதுடன் போக்குவரத்து முறைகளையும் கப்பல்களுடையவும் ஆகாயத்திலுள்ள விமானப்படையினுடையவும் ரக்ஷணையையும் பூராவாக மாற்றிவிடலாம்.

உயர்தர அலைகள் ரேடியோ லொகேஷனுக்குமட்டுமில்லாமல் உஷ்ணப்படுத்துவதற்கும் உபயோகிக்கப்படலாம். தொழிற்சாலைகளில் உள்ள பிரச்னைகளில், மின்சாரத்தை இழுத்துக் கொள்ளாத சில சாமான்களில் அபாரமான உஷ்ணம் உண்டாகிறது என்பதும் ஒன்று. உயர்தர அலைகள்மூலம் சாமான்கள் சதாகாலமும் சாவதானமாக உஷ்ணப்படுத்தப்படுகின்றன. முதலில் வெளிப்பக்கம் உஷ்ணப்படுத்தப்படுவதில்லை. சாதாரணமாக உருக்கக்கூடிய சில ஜவ்வுகளையும் அது இளக்கம் செய்திருக்கிறது. பிரிடனின் மஸ்கிடோ விமானங்களைக்கட்ட ப்ளைஉட் அட்டைகளையும் ஒன்றோடொன்று சேர்க்கும் ஜவ்வை உஷ்ணப்படுத்த இந்த முறை கையாளப்பட்டது.

யுத்தம் காரணமாக பிரிடனில் பிளாஸ்டிக் தொழில் அபிவிருத்தியடைந்துவிட்டது. இன்று விமானங்களில் பிளாஸ்டிக் ஜன்னல்களும் மூடிகளும் இல்லாவிடில் வேகமாகச் செல்லும் பிரிடிஷ் விமானங்களிலுள்ள விமானிகள் காற்றின் வேகத்தைத் தாங்க முடியாது. விமானத்தில உபயோகப்படுத்தும் வெளிச்சத்தை உட்கொள்ளும் பெர்ஸ்பெக்ஸூம் பிரிடனில் தயாரிக்கப்பட்டதுதான். அதை சரியானபடி அமைத்தால் அது எந்தத் தாக்குதலையும் சமாளிக்கும். மேலும் அதை ஒரே தடவையில் பெரிய விளைவுள்ள பகுதிகளாகவும் தயாரித்துவிடலாம்.

சமீப காலத்தில் பிளாஸ்டிக்கினால் செய்யப்பட்ட மூக்குக் கண்ணாடிகள் தயாரிக்கப்பட்டன. கண்ணாடிகளும், சட்டங்களும் உடைக்கக்கூடாதவை.

பிரிடனின் கியாதிபெற்ற விஞ்ஞான சாஸ்திரியான ஆசிரியர் லோ பின்வருமாறு சொல்லுகிறார். "ஜவ்வைத் தயாரிப்பதென்பது பல்வேறு பொருள்களின் துணுக்குகளிலிருந்து ஒரு பெரிய துணுக்கைத் தயாரிப்பது. உற்பத்தியின் ஒரு கட்டத்தில் அவை பசைபோலாகி விடுகின்றன. அந்தப் பசையிலிருந்து உருக்குவது, நீக்குவதுபோன்ற முறைகளில் ஆக்கப்பட்ட பொருள்கள் உண்டுபண்ணப்படுகின்றன." பிரிடனிலுள்ள நிலக்கரி இரும்புதான் பிளாஸ்டிக்ஸூக்குத் தேவையான தாதுப்பொருள்களைத் தருகின்றன. கார்பைட், எண்ணெயிலிருந்து உண்டுபண்ணப்பட்ட அஸெடிலேனிலிருந்தும், நிலக்கரி வாயு, கோக்கை கரியாகச் செய்வதிலிருந்து கிடைக்கும் மேகேன், எதிலீன், போன்ற பொருள்களிலிருந்தும் ப்ளாஸ்டிக்ஸ் தயாரிக்கப்படுகிறது.

ப்ளாஸ்டிக்ஸின் உபயோகம் அளவற்றது. அவைகளின் அபிவிருத்தி உலோகத்துக்கும் ரப்பருக்கும் பதிலாக பிரிடனின் யுத்த முயற்சிக்கும் உதவியளித்திருக்கிறது. அதிலிருந்து முக்கியமாக ஒரு சாமான் தயாரிக்கப்படுகிறது. பஞ்சு அடுக்குகள் ப்ளாஸ்டிக்ஸூடன் சேர்க்கப்பட்டு உலர்த்தப்படுகின்றன. அதனால் உண்டாக்கப்படும் பொருளை உலோகத்தைப் போல் உபயோகிக்கலாம் சப்தமில்லாத யந்திரம், துருப்பிடிக்காத கீல்கள், சுருக்கமடையாத ஜன்னல் சட்டங்கள் முதலியவற்றிற்கு அதை உபயோகிக்கலாம்.

ப்ளாஸ்டிக்குகளை உபயோகப்படுத்தும் யுகம் வந்துவிட்டது. பிரிடனின் விஞ்ஞான சாஸ்திரிகள் ஆரம்பகாலத்தில் பெரும் முயற்சி எடுத்துக்கொண்டதுடன் யுத்தத்துக்குப்பின் உலக சீர்திருத்தத்திலும் அவர்கள் முக்கியமான பங்கு எடுத்துக்கொள்ளுவார்கள்.

யுத்த காலத்தில் ஒளிப்படம் பிடிப்பதும் அபிவிருத்தியடைந்திருக்கிறது. அதன் உதவியால் எதிரியின் ரகஸ்யங்களை நாம் அறிந்துவிட்டோம். அதன்மூலம் ராணுவ தந்திரமும் விமான நடவடிக்கையும் நிறுவப்பட்டன. ஒளிப்படத்தின் நுட்பம் பில்ம் மருந்தில் உபயோகிக்கப்படும்வெளிச்சத்தை இழுக்கும் ஸில்வர் நைட்ரேட்டின் தரத்தைப் பொருத்தது. யுத்த காலத்தில் ஒளிப்பட தொழில் நிபுணர்கள் இதற்குமுன் கண்டிராத மிகவும் சிலாக்கியமான மருந்துகளைக் கண்டுபிடித்திருக்கிறார்கள். மயிரளவின் 100-ல் ஒரு அம்சத்தையும் கூட ஒளிப்படம் பிடிக்கும் சக்திபெற்றிருக்கிறார்கள்.

இந்தப் புதிய ஒளிப்படம் பிடிக்கும் முறை தொழிற்முறைக்கு அதிக உபயோகமுள்ளது. முக்கியமாக உலோக சோதனையில் நுட்பமான உலோக பாகங்களை ஒளிப்படம் பிடிக்கவேண்டியதற்கு உபயோகமுள்ளது. இந்த மருந்தை அவிருத்திசெய்ததினால் பிரிடிஷ் ஆகாய ஒளிப் படம் பிடிக்கும் சக்தி உலகத்திலேயே சிறந்ததாக ஆகிவிட்டது. புதிய உயர்தரமான மரத்துப் படைகளை அமைப்பதிலிருந்து பிரிடிஷ் விமானப்படை கண்ணாடிகளும் மேன்மையை அடைந்துவிட்டன.

வர்ணமுள்ள ஒளிப்படங்களைப் பிடிப்பதிலும் பிரிடன் முக்கியமான ஸ்தானம் வகிக்கிறது கிழக்குப்போர் நடைபெறும்வரையில் இந்த ஆராய்ச்சியின் விளவுகள் ரகஸ்யமாகத்தான் இருக்கவேண்டும்.

உயர்தர ரகமுள்ள விமானங்களைக் கட்டுவதில் உலகத்திலேயே பிரிடன் முக்கியஸ்தானம் வகிப்பதற்குக்காரணம் இஞ்ஜினின் அமைப்புத்தான். பிரிடனுக்கான போரில் வெற்றிபெற்ற விமானங்களில் உபயோகப்படுத்தப்பட்ட ரோல்ஸ்ராய்ஸ் மெர்லின் இஞ்ஜின அபிவிருத்தி செய்யப்பட்டுவிட்டது. பிரிடனிலும், அமெரிக்காவிலும் அவ்வித இஞ்ஜின்கள் தயாரிக்கப் படுகின்றன. 1942-ம் வருஷத்திலுள்ள நிலமையைப்பற்றி வியாக்யானம் எழுதும்பொழுது மேஜர் ஸெவெர்ஸ்கி அமெரிக்கன் மர்குரி பத்திரிகையில் பின்வருமாறு எழுதினார்.—“பிரிடிஷ் விமானங்களின் உயரம் அதிகம், வேகம் அதிகம், அமெரிக்க விமானங்களைவிட கவசம் அதிகம். பிரிடிஷ் விமானங்களை ஓட்டிய அமெரிக்க விமானிகள் அமெரிக்கர்கள் நம்பக்கூடாத உயரத்திலும் போரை நடத்தினார்கள்.”

1942-ம் வருஷத்துக்குப்பின் அதிக அபிவிருத்தி செய்யப்பட்டிருக்கிறது. உதாரணமாக குழல் வாயுவால் ஓடும் விமானம் தயாரிக்கப்பட்டிருக்கிறது. குழல் வாயு அமைப்பை அமைப்பதில் ஏற்பட்ட சிரமங்களைத் தீர்த்தவர் பிரிடிஷ் விமானப்படையைச் சேர்ந்த குருப் காப்டன் பிராங்விட்டில். தகன சக்தியால் ஓடும் இஞ்ஜினுள்ள விமானம் உயர்தரமான வேகத்தை அடைந்துவிட்டது. ஆகிலும் குழல் வாயுவால் ஓடும் விமானம் ஆகாயப்படை உலகத்தில் ஒரு புதிய யுகத்தை ஆரம்பித்துவிட்டது.

எதிரியை முறியடிக்க பிரிடனுக்கும் நேசதேசத்தாருக்கும் உதவும் வகையில் அபிவிருத்தி செய்து கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் நூதன முறைகள் யுத்தத்துக்குப்பிந்திய உலகத்திலும் அதிக உபயோகமுள்ளதாக இருக்கும். அவைகளில் முக்கியமாக பெயிலி பாலமும், ஸோமர் பெல்ட் மார்க்கமும் விசேஷமாகக் குறிப்பிடக்கூடியவை.

மிகவும் கடுமையான சாமான்களையும் கொண்டுபோகக்கூடிய பெயிலி பாலங்கள் 24-மணி நேரத்திற்குள் 25 ரகங்களுள்ள பாகங்களிலிருந்து கட்டப்படுகின்றன. பாலங் களில்லாமல் வியாபாரமும் போக்குவரத்தும் குறைவுபட்டுவரும் நகரங்களும் கிராமங்களும் யுத்தத்துக்குப்பின் இந்தப் பாலங்களினால் நன்மையை அடையும்.

60 பேர்கள் கொண்ட ஒரு கோஷ்டியார் உலகத்திலே மிகவும் கனமான சாமான்களைக் கொண்டு போகக்கூடிய சோமர்பெல்ட் ரஸ்தாவை எட்டு மணிகளுக்கு ஒரு மைல் வீதம் அமைத்து விடுவார்கள். 50 மைல்கள் ரஸ்தா 2,000 டன்கள் கனமுள்ளதாக இருக்கும். ஆறு வாகனங்கள் ஒரு மைலுக்கு வேண்டிய சாமான்களைக் கொண்டுபோகும். சாதாரணமாக ரஸ்தாக்களை அமைக்க சிரமம் ஏற்படும் நாடுகளில் இவ்விதமான ரஸ்தாக்களை அமைப்பது சௌகரியமாக இருக்கும்.

பூர்ணமான யுத்தத்தை நடத்தும்படி ஹிட்லர் உலகத்திற்கு சவால்விடுத்தார். அதற்குத் தகுந்த பலன் அவனுக்குக் கிடைத்தது. 150 கஜதூரத்தில் சுளுந்தை எறியும் புதிய பிரிடிஷ்

டாங்கிகள் அட்லாண்டிக் அரணை தீக்கிறையாக்கின. அதன் வட்டாரத்திற்குப்பட்ட புல் பூண்டும், தற்காப்புப் பெட்டிகளும், அகிழ்களும் நிலைத்திருக்கமுடியாது.

குரோகடைல் என்பது தான் சுளுந்தை எறியும் மிகவும் சக்தி வாய்ந்த டாங்கி. அது கனமான கவசமுள்ள சர்ச்சில் டாங்கியுடன் உபயோகப்பட்டு வருகிறது. கவசம் பூண்ட இழுப்பு வண்டியில் எண்ணெய் கொண்டு போகப்படுகிறது. இதுசற்றுப்போன உடன் டாங்கி அதிலிருந்து பிரிக்கப்பட்டுவிடும். பிறகு டாங்கி அதன் வேலையைச் செய்துவரும். இந்த வகையிலும் பிரிடனின் யுத்த கால ஆராய்ச்சிகள் சமாதான காலத்திற்கு அதிக உபயோகமுள்ளதாக இருக்கும். சுளுந்துகளை எறியும் யந்திரங்களை புரம்போக்கு ஸ்தலங்களை சுத்தி செய்வதற்கும், தொத்துநோய்களை அகற்றுவதற்கும் உபயோகிக்கலாம்

இன்னும் அநேக பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திர நூதன முறைகளை எழுதுவதற்கு இங்கு இடம் கொடுக்கவில்லை. ஆகிலும் வடக்கு ஆபிரிக்கா, ஐரோப்பியப் படையெடுப்புகளே பிரிடனின் யுத்த கால விஞ்ஞான சாஸ்திர முன்னேற்றத்துக்குத் தகுந்த சான்றாகும்.

படையெடுப்பைப்பற்றிப் பேசும்பொழுது பிரிடனின் கடற்படையைப் பற்றியும் சொல்லவேண்டும். கடற்படை இல்லாவிடில் பிரிடன் பிழைத்திருக்கமுடியாது. அதன் கவசம் பூண்ட படைகளும் எதிரியின் பிரதேசத்தில் படையெடுத்திருக்கமுடியாது. கடற்படை அபிவிருத்திகளைப்பற்றி ஒன்றும் வெளிவரவில்லை. ஸீனியர் சர்வீஸ் எப்பொழுதும் போல ரகஸ்யத்தைக் காப்பாற்றி வருகிறது.

காந்தக் கண்ணிகளால் ஏற்பட்ட அபாயத்தை பிரிடன் எவ்விதம் தவிர்த்தது என்பது பழங்கதையாகிவிட்டது. அவைகள் போடப்பட்ட உடன்காலத்திலேயே பிரிடிஷ் கடற்படையைச் சேர்ந்த சுரங்கவாரிக் கப்பல்கள் கம்பி வலைகளுடனும் காந்தமுள்ள இரும்புக் கம்பிகளுடனும் சமுத்திரத்தை அலசி வந்தன. அதன்பின் வெலிங்டன் விமானங்கள் மின்சார சக்தியுள்ள வளையங்களுடன் சுரங்க வெடிகளை ஆகாயத்திலிருந்து தாக்கின.

அதன்பின் கப்பல்களைச் சுற்றி மின்சாரக் காந்தம் அமைக்கப்பட்ட வளையம் போடப்பட்டது. இந்த வளையம் காந்தக் கண்ணிகளின் மின்சாரத்தை அகற்றி அவைகளை உபயோகமில்லாமல் செய்துவிட்டது.

கடல் யுத்தத்தில் இன்னும் அநேக நூதன ஆராய்ச்சிகளும் வெற்றிக்கு உதவியிருக்கின்றன. நீர்மூழ்கிகளைச் சுற்றிப் போடும் வெடி குண்டுகள், இரவில் யூ-படகுகளை வேட்டையாடுவதற்காக விமானங்கள் உபயோகப்படுத்திய 10 லக்ஷம் காண்டில் சக்தியுள்ள லே, தேடு விளக்குகள், நீர்மூழ்கிகளை அழிக்கும் கார் வெட்டிக் கப்பல்கள், ஹரிகேன விமானங்களை அனுப்பும் காடபுல்ட் கவசம் பூண்ட வியாபாரக் கப்பல்கள், முதலிய சாதனங்கள் இந்த ஜாப்தாவில் காணக்கூடியவை. எண்ணெய்க் கப்பல்களில் ஒரு விதமான வாயு உபாயம் அமைக்கப்பட்டிருக்கிறது. அதைக் கொண்டு தண்ணீர் உள்ளே வராமல் தடுத்துவிட்டு, பழுதுபட்ட கப்பல்களை துறைமுகத்துக்கு பத்திரமாகக் கொண்டு போய்விடலாம். தீப்பற்றி எறிந்து கொண்டிருக்கும் கப்பல்களிலிருந்து மிதக்கவிடக்கூடிய நெருப்புஅண்டாத தாரணப்படகுகளும் அதிர்ச்சியை ஏற்றுக்கொள்ளும் கருவிகளும் மற்ற பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திர அபிவிருத்திகள்.

இந்தச் சுருக்கமான ஆராய்ச்சி யுத்த காலத்தில் பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகள் கண்டுபிடித்திருப்பவைகளில் ஒரு சிறிய அம்சம் தான். மகத்தான அபாயங்களுக்கு மத்தியில் நூதன முறைகளைக் கண்டுபிடிக்க அவர்களிடம் காணப்பட்ட புத்தி சக்தியும், லாகவமும் தான் நேசதேசத்தாரின் வெற்றிக்குப் பெரும்பாலும் உதவி செய்திருக்கின்றன.

---

# பிரிடனின் வெற்றி ஆயுதங்கள்.

## ஒவ்வொரு ரகசியமும் எல்லா நேசதேசத்தாருக்கும் தெரியும்.

(ஆசிரியர் *A. M.* லௌ).

“இந்த மலை போன்ற வீழ்ச்சியை எதிர்த்துப் போராட முடியாது. மனிதர்கள் இவ்விதமான யந்திரங்களுடையவும், தளவாடங்களுடையவும் குவியல்களை சமாளித்து நிற்க முடியாது”.

சில மாறுதல்களுடன் இதே வாக்யத்தை இறந்த ஜெர்மானியரின் பைகளிலிருந்து நாம் அடிக்கடி எடுத்துவிடலாம். நேசதேசத்தார்கள் கைவசப்படுத்திய 10,000 கணக்கான ஜெர்மன் கைதிகள் இவ்விதம் தான் நினைக்கிறார்கள். யுத்தத்தின் கடைசி வருஷத்தில் நேசதேச விஞ்ஞான சாஸ்திரிகளுடையவும், நூதன விஷயங்களைக் கண்டுபிடிக்கிறவர்களுடையவும், புத்திசாலித்தனத்துடையவும், திறமையுடையவும் பூரா பிரயோஜனமும் போர் முனையில் பலமாகக் காணப்பட்டது. கடைசியாகத்தான் ஜெர்மானியர்கள் யுத்தத்திற்கு யந்திர சாதனங்கள் எவ்வளவு சாதகமுள்ளவை என்பதைக் கண்டுகொண்டார்கள்.

"விஞ்ஞான சாஸ்திர முறையில் நடத்தும் போரைப்" பற்றிய விவாதத்தில் சொற்பொழிவாளர்கள் பகட்டான விசேஷ மாறுதல்கள் உள்ள ஆயுதங்களைப் பற்றித்தான் பேசுகிறார்கள்.

ஆனால் நாம் நிலைமையை ஜாக்கிரதையாக ஆராய்ச்சி செய்தால் ஒரு சில புதிய ஆயுதங்கள் தான் நேசதேச வெற்றிக்கு உதவியளித்திருக்கின்றன என்பது இல்லை. நூற்றுக்கணக்கான புது ரக ஆயுதங்களும், தளவாடங்களும், ஒவ்வொன்றும் அதற்குரிய சேவையைச் செய்தும், சரித்திரத்திலேயே ஒப்பற்ற ஒரு மகத்தான கோர்வையாக ஒன்றுபட்டும் உபயோகப்பட்டிருக்கின்றன.

ஜெர்மன் பிரசாரர்கள் V-1, V-2 போன்ற அநேக ஆயுதங்களை சிலாகித்துப் பேசி வந்தார்கள். ஆனால் பிரிடனின் V ஆயுதங்களின் ஜாபிதாமுடிவற்றது. ரேடியோ லொகேஷன், பெயிலிபாலங்கள், அவுட்வாணமுள்ள விமானம், எஃகினால் அமைக்கப்பட்ட ரஸ்தாக்களும், விமான தளங்களும், படைகளை இறக்கும் அநேக ரகப்படகுகள், ஜலத்திலும் தரையிலும் செல்லக்கூடிய அநேக டாங்கிகளும் வாஹனங்களும், சுளுந்துகளை எறியும் விமானங்கள், கண்ணுக்குப் புலப்படாத லக்ஷியத்தின் பேரில் குறிப்பாக வெடிகுண்டுகளை வீசும் முறைகள், இன்னும் இவை போன்ற அநேக பெரிய விஞ்ஞான சாஸ்திர முறையில் அமைக்கப்பட்ட ஆயுதங்கள் பிரிடனில் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன.

இதைத் தவிர நூதன முறையில் அமைக்கப்பட்ட சிறிய ஆயுதங்களும் யுத்தத்தில் உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றன. டாங்கிகளில் தண்ணீர் ஏறாமல் தடுக்கும் முறைகள் வெகு காலமாகவும் ஜாக்கிரதையாகவும் பரிக்ஷை செய்யப்பட்டு அமைக்கப்பட்டதினால்தான் படைகளை இறக்குவதற்கு சாதகம் ஏற்பட்டது. வெற்றிகரமான படையெடுப்புக்கு அவசியமான பலரக சாமான்களும், விஞ்ஞான சாஸ்திர முறையில் மூட்டை கட்டப்பட்டன என்றும் சொல்லப்படுகிறது. பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகளும், தொழிற்பயிற்சியுள்ளவர்களும் இவ்விதமாக சாமான்களை அனுப்பியிராவிடில் படையெடுப்பு சாத்தியமாக இருந்திருக்காது. இவைகள் இரண்டு சாதாரணமான உதாரணங்கள். இதைத் தவிர குடைகள் மூலம் சாமான்களை அனுப்பவும், நெருப்பை அவிக்க புதிய முறைகளையும் கண்டுபிடித்திருக்கிறோம்.

மேலும் மறைமுகமாக ராணுவ உபயோகமுள்ள அநேக நூதன முறைகளும் கண்டுபிடிக்கப்பட்டன. அவைகளும் நேசதேசத்தாரின் வெற்றிகரமான நடவடிக்கைகளுக்கு முக்கியமாக இருந்திருக்கின்றன. சில முறைகள் நமக்குத் தெரிந்தவைகளே. நூற்றுக் கணக்கான ஸோல்ஜர்களின் உயிரைக் காப்பாற்றின பென்ஸிலின் என்ற ரசாயனம் ஆக்ஸ்போர்ட் ரசாயனப் பரிக்ஷை சாலையில் கண்டுபிடிக்கப்பட்டது.

பத்திரிகைகளில் தலையங்கத்துடன் வரும் ஒவ்வொரு முன்னேற்றத்தைப் பற்றிய விவரத்துக்கும் நூற்றுக்கணக்கான ஆராய்ச்சிகளும் நூதன உற்பத்திகளும் உதவி செய்திருக்கின்றன. யுத்தத்தில் புனருத்தாரணத்துக்காக செய்யப்பட்ட ஏற்பாடுகள் காயம்பட்டவர்களை சொஸ்தப்படுத்துவதுடன், அவர்களின் மனப்பான்மையைத் திருத்தி சுகவாழ்க்கையை நடத்தவும் ஒத்தாசை செய்திருக்கின்றன. தொழிற்சாலைகளில் X-ரே எடுக்கும் கருவிகள் ஏராளமாக அமைக்கப்பட்டிருந்ததால் காசநோய் உடன்காலத்தில் கண்டுபிடிக்கப்பட்டு சொஸ்தம் செய்யப்பட்டு வந்தது. உணவுப் பொருள்களை பத்திரப்படுத்தும் அநேக முறைகளும் கண்டுபிடிக்கப்பட்டன. இவைகளெல்லாம் பகட்டானவையல்ல. ஆனால் அவைகள் தான் ஒரு வருஷத்திற்கு லக்ஷக் கணக்கான டன்கள் கொண்ட உணவுப் பொருள்களை பத்திரப்படுத்தியிருக்கின்றன.

இதேபோல்தான் வியவசாயத்திலும். பிரிடிஷ் வியவசாயிகள் யந்திர சாதனங்களை வெகு காலம் கழித்துத்தான் ஏற்றுக்கொண்டார்கள். ஆகிலும் யுத்த அவசியத்தினால் விஞ்ஞான சாஸ்திரிகளும், இஞ்சினியர்களும் அதிக கவனம் செலுத்தி வந்தார்கள். இன்று பிரிடனிலுள்ள பண்ணைகளில் பலரக யந்திரங்கள் வேலை செய்து வருகின்றன. ஐந்து

வருஷங்களுக்கு முன் கையினல் செய்யக்கூடிய வேலைகள் இப்பொழுது யந்திரங்கள் மூலம் செய்யப்படுகின்றன. ஒரு புதிய ஆராய்ச்சி நிலயம் அமைக்கப்பட்டிருக்கிறது. அங்கு புதிய வியவசாயக் கருவிகள் உற்பத்தி செய்யப்பட்டு, பரிசோதனை செய்து பார்க்கப்படுகின்றன. யுத்த சமயத்தில் பிரிடிஷ் மக்களுக்குப் போதுமான உணவு கிடைத்து வந்ததென்பது வெற்றிக் கோர்வையில் ஒரு முக்கியமான கணுவாகும்.

ஆகையால் வாழ்க்கை முறையின் ஒவ்வொரு அம்சமும் ஆராய்ச்சி செய்து சிலாக்கியமான முறைக்கு அபிவிருத்தி ஏற்பட்டிருக்கிறதென்றும் வெளிப்படுத்தலாம். இந்த அபிவிருத்தி அகஸ்மாத்தாக ஏற்பட்டதில்லை. விஞ்ஞான சாஸ்திரத்தின், ஒவ்வொரு கலையும் பூர்ணமாக ஒத்துழைத்து வந்திருக்கிறது. இதுதான் பிரிடிஷ் விஞ்ஞான சாஸ்திரிகளும், கைத்தொழில் நிபுணர்களும் செய்த வேலை. ஆனல் ஜெர்மானியர்கள் ராணுவ விஞ்ஞான சாஸ்திர முறைகளைப் புறக்கணித்துவிட்டு மகத்தான விஷயங்களில் கவனம் செலுத்தி வந்தார்கள்.

யுத்தத்துக்கான சரியான யந்திரங்களையும், தளவாடங்களையும் மட்டும் உற்பத்தி செய்தால் மட்டும் போதாது. போதுமான அளவு குறிப்பான இடத்திற்குக் குறிப்பிட்ட டயத்தில் போய்ச் சேரவேண்டும். சென்ற சில வருஷங்களில் பிரிடனின் விஞ்ஞான சாஸ்திரமும், தொழிற் முறைகளும், மனிதசக்தியும், யுத்த தந்திரமும் ஒன்றுபடுத்தப்பட்டது போல் உலகத்தில் ஒரு பொழுதும் நடந்ததில்லை.

ஐரோப்பாவில் படையெடுத்தது இதுவரை காணப்படாத மிகவும் மகத்தான நடவடிக்கையாகும். யாதொன்றும் தெய்வாதீனமாகவும், தாத்காலிகமாகவும் அமைக்கப்படவில்லை. தாத்காலிகமான ஏற்பாடுகளுக்கும் அவசியம் ஏற்படவில்லை. வாஹனங்களுக்கு அவசியமான திருகாணி முதல் ஒவ்வொரு நுட்பமான பாகமும் முன் நோக்கத்துடன் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. இவையெல்லாம் தொழிற்சாலைகளில் விஞ்ஞான சாஸ்திர முறைப்படி அமைக்கப்பட்ட சிறந்த திட்டங்களாகும்.

இந்தப் புதிய ஆயுதங்கள் போதுமான அளவுக்கு ஒரு இடத்திற்குச் சரியான சமயத்தில் கொண்டு போகப்பட்டதற்கு அத்தாக்ஷிவேண்டுமென்ருல் பொதுஜன வாழ்க்கை நிம்மதியாக நடைபெற்றதென்பதே போதுமானது. ஏராளமான யுத்த தளவாடங்களையும், மனித பலத்தையும் சலனம் செய்யவேண்டிய மகத்தான திட்டம் பூராவும் பொதுமக்களுக்கு யாதொரு சிரமங்கள் ஏற்படாமல் பிரிடனின் சாதாரண யுத்த கால வாழ்க்கையில் சுமத்தப்பட்டது.

ராணுவ, பொதுஜன சௌகரியத்துக்காகக் கண்டுபிடிக்கப்பட்ட ஏராளமான நூதன ஆராய்ச்சிகளின் முக்கிய அம்சம் யாதெனில் ஒவ்வொரு நூதன ஆயுதமும், பிரிடனின் நேசநாடுகளுக்கு அனுப்பப்பட்டது. பிரிடன் ஒரு சாதகத்தையும் ரகசியமாக வைத்துக்கொள்ளவில்லை. குறுகிய எண்ணம் கொண்டிருந்தால் சில நூதன முறைகள் சமாதான காலத்திற்கு உரியதாக இருந்ததால் அவைகளை ரகசியமாக வைத்துக்கொண்டிருக்கலாம். ஆரம்பம் முதற் கொண்டே யுத்தத்தில் வெற்றி பெருவது தான் முக்கியமான லக்ஷியம் என்று கருதப்பட்டது. ஆகையால் பிரிடன் கண்டுபிடிக்கும் எந்த முறையையும் நிராக்ஷேபணையாக மற்ற நாடுகளுக்கும் அறிவிக்கவேண்டுமென்று முடிவு செய்யப்பட்டது. சில சமயங்களில் இந்தக் கொள்கை அதிகமாகக் கையாளப்பட்டது. விஞ்ஞான சாஸ்திரிகளும், இஞ்சினியர்களும் அந்நாடுகளுக்கே அனுப்பப்பட்டார்கள்.

ஜெர்மனியின் மேன்மையான விஞ்ஞான சாஸ்திரம் வெற்றி பெருமென்றும், ஜெர்மன் விஞ்ஞான சாஸ்திரிகளுக்கு இணை கிடையாதென்றும் ஹிட்லர் அடிக்கடி சொல்லி வந்தான். ஜெர்மன் விஞ்ஞான சாஸ்திரிகள் எவ்வளவு யோக்யதை உள்ளவர்களாக இருந்த போதிலும் அவர்களை நமது விஞ்ஞான சாஸ்திரிகள் இளப்பப்படுத்திவிட்டார்கள்.

---

## சர்ப்பராவின் முக்கியத்வம்.

*லெப்டினனட்-ஜெனரல் ஸர் டக்ளஸ் ப்ரௌன்ரிக்.*

போர்முனைபேரில் நடமாடும் விமானப்படைக்கும் போர்முனையிலுள்ள சர்ப்பரா ஏற்பாடுகளுக்கும் யாதொரு சம்பந்தமுமில்லை. ஏனெனில் அவைகள் சொல்பகாலத்திற்குள் சென்று திரும்பிவந்துவிடுகின்றன. தரையில் நடமாடும் சேனைக்கு போருக்குப்பின் தளத்துக்கு திரும்பி வருவதற்கு போதுமான வேகமும், சக்தியும் கிடையாது. ஆகையால் போர்முனைக்கு சர்ப்பராவை வழங்குவதற்கு ஒரு அமைப்பு வேண்டும்.

இந்தத் திட்டம் ரகசியமாக இருக்கும். ஏனெனில் இதைப்பற்றிய பரிபாஷைகள் சாதாரண மானவர்களுக்குப் புலப்படாது. அதாவது வண்டிகள் நிற்கும் இடங்கள், நிரப்பும் முனைகள், சர்ப்பராக்களையும் யுத்த தளவாடங்களையும் அனுப்பும் இருப்புப்பாதை நிலையங்கள், அது போன்ற மற்றவைகள். ஆனால் சமாதான காலத்தில் சர்ப்பராக்களைப் பெருவதற்கு நாம் மேற்கொள்ளும் கொள்கைகளை போர்முனையிலுள்ள சேனையின் சப்ளைக்கு அன்வயப்படுத்தினால் போர்முனையிலுள்ள திட்டங்கள் நமக்குத் தெளிவுபடும்.

சமாதான காலத்தில் சாதாரணமான மனிதனுக்கு ஆடைகள், உணவுப்பொருள்கள், வாசஸ்தலம், வேலைத்தளத்திற்கு சென்றுவர போக்குவரத்து வசதி, நோய்வாய்ப்பட்ட பொழுது வைத்திய வசதி முதலியவை தேவைப்படும். அதேபோல்தான் போர்முனையிலுள்ள சோல்ஜருக்கும். ஆகையால் அவனுக்கும் உடுப்புகள், முஸ்தீப்புகள், ஆகாரம், போக்குவரத்து (அதாவது பெட்ரோல், எண்ணெய், தைலங்கள், உதிரி பாகங்கள்) விடுதிகள் அல்லது அகிழ்கள், வைத்திய வசதிகள், அதைச்சேர்ந்த சில்லரை ஸ்தாபனங்கள் முதலிய வசதிகள் இருக்கவேண்டும். மேலும் சாதாரண பொது மனிதரைப்போல யுத்தத்தில் ஈடுபட்டிருக்கும் சோல்ஜர்கள் கடையில் துணியை வாங்க முடியாது. சிற்றுண்டிசாலையில் உணவுகளை உட்கொள்ளமுடியாது. நல்ல வீட்டில் வசிக்கமுடியாது. தன்னுடைய ஸ்தானத்துக்குச் செல்வதற்கு டாக்ஸியையோ, பஸ்ஸையோ உபயோகிக்க முடியாது. இந்த வசதிகளெல்லாம் அவனுக்கு வழங்கப்படவேண்டும். இதுதான் சர்ப்பரா ஏற்பாடு என்பது.

இவ்விதமான சிக்கலான பிரச்னைகளை பிரிடன் வெற்றிகரமாக தீர்த்துவந்ததினால்தான் ஜெர்மனியின் வீழ்ச்சிக்கு சாதகம் ஏற்பட்டது. பிரிடிஷ் சேனையின் சர்ப்பரா போக்குவரத்து விரிவாக உள்ள ராயல் சேனை சேவைப்பகுதியுடையவும், ராயல் சேனை ஆர்டினன்ஸ் பகுதி உடையவும், வாகனங்களுக்கு முதல் உதவியாக பழுது பார்க்கும் மின்சார மெக்கானிக்கல் இஞ்ஜீனியர்களுடையவும், மனிதர்களுக்கு சிகித்சை செய்யும் ராயல் சேனை மெடிகல் படையினுடையவும் அரியசேவைதான் வெற்றிக்கு நன்கு மதிக்கப்படாத சேவையைச் செய்திருக்கின்றன.

நேசதேசப் படையெடுப்புப் படைகளுக்கு சில தேவைகள் நிரந்தரமாகவும், சில தேவைகள் மாறுபட்டும் இருந்துவந்தன. உதாரணமாக, ஒரு சோல்ஜர் ஒரேவிதமான ஆகாரத்தை ஒவ்வொரு நாளும் பலவிதமாக ஆக்கப்பட்டுப் பெறலாம். ஆனால் அவனுக்கு வேண்டிய வெடிமருந்து அவனுடைய செலவைப்பொருத்தும் அல்லது பெரிய மகத்தான தாக்குதலுக்கு முன் வெடிமருந்தைக் குவிக்கும் தேவையைப் பொருத்தும் மாறுபாட்டையும். அதுபோலவே எண்ணெய், பெட்ரோல், தைலங்களின் அளவு கடந்து சென்ற அல்லது செல்லக்கூடிய தூரத்தைப் பொருத்ததாகும். இவ்விதமாக போர்முனையில் இரண்டு சர்ப்பரா தாரைகள் இருந்துவந்தன. ஒன்று நிருதியானது. படை அதிகமாக ஆக ஆக அது அபிவிருத்தியடைந்துவந்தது. மற்றொன்று போர் படைகளின் சலனத்தையும், போரின் உக்ரத்தையும் பொருத்து மாறுபட்டு வந்தது.

யுத்தம் ஆரம்பித்த பொழுது போர்முனையிலுள்ள படைகளுக்கு சர்ப்பராக்களைக் கொண்டுபோகும் வசதி ஜெர்மனிக்கு இருந்தது. இருப்புப்பாதை மூலம் சப்ளைகள் தளங்களிலிருந்து துரிதமாக கொண்டுபோகப்பட்டன. பிரிடனுக்கு கடல் மார்க்கம் என்ற ஒரு முக்கியமான தொடர்பை ரக்ஷிக்கவேண்டியிருந்தது. போர்முனையிலுள்ள படைகளுக்கு பிரிடன் அனுப்பும் ஒவ்வொரு சாமானும் கப்பலில் செல்லும்பொழுதும் கப்பலைவிட்டு அப்புறம் செல்லும்பொழுதும் காபந்து செய்யப்படவேண்டும். கப்பலில் சாமான்களை அடைப்பதற்காக சாமான்கள் பெட்டிகளில் அடைக்கப்படவேண்டும். மேலும் போக்குவரத்திலும் காலஹரணம் ஏற்பட்டது.

ருஷ்ய எல்லைக்கு வெளியில் ருஷ்யாவின் அகலமான இருப்புப் பாதைகளில் செல்லும் இஞ்சின்கள் செல்ல அங்குள்ள இருப்புப் பாதையை மாற்றி அமைக்கும் சிரமம் ஏற்பட்டது. அபாரமான அழிவைப் பழுதுபார்க்கவேண்டிய நிலைமை ஏற்படாத இடங்களில் தினசரி 1 மைல் அளவுக்கு இருப்புப்பாதையை ருஷ்யர்கள் மாற்றி அமைத்துவந்தார்கள். ஆனால் இதனால் ஏற்பட்ட காலதாமதம் பிரிடிஷ் கால்வாய்க்கு இரு கரையிலுமுள்ள துறைமுகங்களில் போக்குவரத்துக்கு ஏற்பட்ட தாமதத்திற்கு கொஞ்சம்கூட ஒப்பிடமுடியாது.

போர்முனையிலுள்ள சேனைகளுக்கு சர்ப்பராக்களை அனுப்புவது என்பதைப்பற்றி சுருக்கமாகச் சொல்லிவிட்டேன். இதை விவரணம் செய்ய சில புள்ளி விவரங்களை வெளியிடுகிறேன்.

ஒரு பிரிடிஷ் டிவிஷனுக்கு சராசரி 500 டன்கள் சர்ப்பரா தினசரி வேண்டும். போர் நடத்திவந்தால் உபரியாக 100 டன் வெடிமருந்து வேண்டும். இந்த சர்ப்பராக்கள் முதலில் பிரிடனிலுள்ள துறைமுகங்களுக்குக் கொண்டுவரப்படவேண்டும். அதன்பின் அவைகள் கப்பல்களில் இங்கிலீஷ் கால்வாயை தாண்டிச் செல்லவேண்டும். பிறகு அவைகளை நார்மண்டி கடற்கரையில் இறக்கி கடைசியாக போர்ப்படைகளுக்கு லாரி மூலமாகவும், ரயில் வண்டிகள் மூலமாகவும் கொண்டுபோகவேண்டும்.

ஒரு லாரியில் 3 டன்கள் கொண்டுபோகலாம் என்றால் எவ்வளவு லாரிகள் தேவைப்படும் என்று நீங்கள் மதிப்பிடலாம். ஒரு இருப்புப்பாதை மூலம் தினசரி 9,000 முதல் 12,000 டன்கள் சாமான்களைக்கொண்டு போகலாம். இது 6 முதல் 8 டவிஷன் படைகளுக்கு போதுமானது. அதற்கு மேற்பட்ட படைகள் இருந்தால் பாக்கிப்படும் தேவைகளை உள் நாட்டில் வாங்குவது மூலமோ (வறுமைக்குட்பட்டிருக்கும் தேசத்தில் இது சாத்தியமில்லை), அல்லது ரஸ்தா போக்குவரத்து மூலமோ சம்பாதித்துக்கொள்ளவேண்டும். நார்மண்டியில் படைகள் இறங்கியபின் பிரெஞ்சு துரைமுகங்கள் நல்ல ஸ்திதிக்கு வரும்வரையிலும் ஒவ் வொரு சாமானையும் நாம் நார்மண்டி கடற்கரையில் இறக்கி அங்கிருந்து உள்நாட்டுக்குக் கொண்டுபோகவேண்டியதாயிருந்தது.

செயின் நதியின் முகத்துவாரத்திலுள்ள கடற்கரைகள் டோவரில் உள்ள துரைமுகத்தை யும், கப்பற்துறையையும் அற்பமாகச் செய்துவிட்டன என்று மிஸ்டர் சர்ச்சில் சொன்னர். முன்கூடியே தயாரிக்கப்பட்ட தூண்கள் கடல்மூலம் கொண்டுபோகப்பட்டு குறிப்பிட்ட இடங்களில் அமைக்கப்பட்டதால் சர்ப்பராக்களை துரிதமாக இறக்குவதற்கும் கப்பல்களைத் திருப்பி அனுப்புவதற்கும் சௌகர்யம் ஏற்பட்டது.

உபரிய க உள்ள ஒரு போக்குவரவு மார்க்கத்தை ரக்ஷிக்கவேண்டுமென்ற உபரிச் சிரமம் பிரிடனுக்கு ஏற்பட்டிருந்ததாலும், ஜெர்மானியர்களைவிட பிரிடன், சர்ப்பரா ஏற்பாடுகள் மூலம் போரை திறம்பட நடத்திவந்தது. இதற்கு நாம் முதல் முதலாக நடவடிக்கைகள் துவங்கு முன் ஆகாய வீதியிலிருந்து ஜெர்மன் விமானப்படையை துரத்தி அடித்து அதன்பின் எதிரி யின் சர்ப்பரா மார்க்கங்களை நொருக்கிவந்த நேசதேச விமானிகளுக்கு நமது பாராட்டு உரித்த தாகும். ஆகிலும் பிரிடிஷ் நிர்வாகப்படைகள் ரக்ஷணையின் பிரயோஜனத்தை நன்கு உப யோகப்படுத்திவந்தார்கள். சரித்திரம் வரையப்படும்பொழுது நார்மண்டி கரைக்கும் அங்கிருந்து அப்பாலும் அமைக்கப்பட்டிருந்த சர்ப்பரா திட்டங்கள் யுத்தகாலத்தில் முயற்சிக் கப்பட்ட திட்டங்களில் சிலாக்கியமானதென்று மதிக்கப்படும்.

நவீனகால யந்திர சாதன போரினல் ஏற்பட்ட மிகவும் சிக்கலான பிரச்னைகளில் உதிரி பாகங்களை அமைப்பதும் ஒன்றாகும். ஒரு டிவிஷன் படைக்கு அதற்கு வேண்டிய முஸ்தீப்பு களைக் கொண்டுபோக 1,80,000 பெட்டிகள் வேண்டும். மேலும் அத்துடன் 10,000 டன்கள் கனமுள்ள வாகனங்களும் செல்லவேண்டும். ஒரு சேனையை சலனம் செய்யவேண்டுமென்றால் டாங்கிகளுக்கும், பீரங்கிகளுக்கும் மற்ற சிறிய ஆயுதங்களுக்கும் 22,000 டன்கள் எடையுள்ள உதிரி பாகங்களை ராயல் சேனை ஆர்ட்னன்ஸ் படை ஒவ்வொருமாதமும் அனுப்பவேண்டும். நார்மண்டியில் ஒரு சமயத்தில் உதிரி பாகங்கள் அத்யாவசியமாக இருந்ததால் உடைபட்டு போன டாங்குகளை ரஸ்தாக்களில் போட்டுவிட்டு உதிரி பாகங்கள் வேண்டுமானல் அவை களைப்பிரித்து எடுத்துக்கொள்ளலாமென்று விளம்பரமும் போட்டுவிட்டார்கள். இந்தப் புதிய முறையினல் போக்குவரத்துகள் குறைவுபட்டன.

யுத்தத்தில் சில சமயங்களில் சர்ப்பராக்கள் காலந்தப்பி வருகின்றன, அல்லது வராமலும் இருந்துவிடும். ஒரு துணைக்காவல் கப்பல் கூட்டம் வெடிகுண்டு வீச்சுக்கு உட்பட்டால் ஒரு டிவிஷன் பட்டினி கிடக்கவேண்டி நேரிடும். ஆனல் அவசரமான சமயத்தில் டன்கர்க்கில் பின் வாங்க நேரிட்ட சமயத்திலபோல் படைகள் உள்நாட்டிலுள்ள கால்நடைகளைக் கொல்லுவது மூலமும், அல்லது உணவுப்பொருள் குவியல்களை உபயோகித்தும் ஆகார வசதி செய்து கொள்ளலாம். மோட்டார் வாகனங்கள் அவர்களின் தேவைக்கு உதவ முடியாது. பாலே யிலும், செயின் நதியைத் தாண்டியபொழுதும் ஜெர்மன் 7-வது சேனை அழிவுபட்டதற்கு பெட் ரோலும் மற்ற எண்ணெய்க் குறைவும் ஏற்பட்டதுதான் காரணமாகும். இதிலிருந்து ஜெர் மன் தளங்களில் எண்ணெய்க் குறைவு ஏற்பட்டதென்பதில்லை. ஆனல் அவைகள் வேண்டிய இடத்திற்கு கொண்டுவரப்படவில்லை.

# வெற்றிக்குப் பொருளீட்டுவது.

## சிறிய சேமிப்புச் செய்கிறவரின் முக்கியமான பங்கு.

(நார்மான் கிரம்ப்).

ஜெர்மனியுடன் செய்த போரில் வெற்றி பெற்றுவிட்டோம். இதில் பிரிடனுக்கு என்ன செலவு நேரிட்டதென்று என்னை விளக்கச் சொல்லியிருக்கிறார்கள். ஒரு முறையில் இது அசாத்தியமான காரியம். ஐரோப்பிய மக்களுக்கு எவ்வளவு உயிர்ச்சேதம், சுகவீனம், சந்தோஷக் குறைவு ஏற்பட்டதென்று ஒருவரும் சொல்லமுடியாது. பிரிடன் படையெடுப்பிலிருந்து தப்பித்துக்கொண்டாலும் பிரிடனிலும் அபாரமான கோரமான நஷ்டங்கள் ஏற்பட்டன. செல்வப்பொருப்பைப்பற்றி நாம் முன்வந்ததற்கு அதுதான் கூடியமட்டில் அதிக முக்கியத்தவமில்லையென்பதினால் இதில் துணிந்து இறங்கினேன்.

ஆகிலும், செல்வ, பொருளாதாரப் பொருப்பு பிரிடனுக்கு அதிகமாகத்தானிருந்தது. 1939-ம் வருஷம் முதல் 1944-ம் வருஷம் வரையில் 6 வருஷங்களுக்கு ஆன எஸ்டிமேட்டுகளைத் தயார் செய்திருக்கிறேன். ஆனால் அவைகள் ஊகமானவைகள்தான். யுத்தச் செலவில் ஒவ்வொரு நாடும் எவ்வளவு செலவிட்டிருக்கிறதென்பதை அது வெளியிடக்கூடும்.

முதலாவதாக, தளவாடங்கள், சேவைகளைப் பார்ப்போம். ஆறு வருஷங்களில் மொத்த வருமானம் £ 42,000 மிலியன்கள். பிரிடன் உள்நாட்டிலும் கடல் தாண்டியுள்ள நாடுகளிலும் உள்ள முதலீடுகளையும் சுமாராக 5,000 மிலியன்கள் பவுன்கள் உபயோகப்படுத்தியது. அதாவது போரை நடத்துவதற்கும் வாழ்க்கையை நடத்துவதற்கும் £ 47,000 மிலியன்கள் செலவாகின.

இந்தப்புள்ளி விவரங்களில் குத்தகைக்கடன் திட்டப்படி நமக்குக் கிடைத்த பொருள்களும், நாம் அனுப்பியவைகளும் சேர்க்கப்படவில்லை.

£ 47,000 மிலியன்கள் பொருமானமுள்ள சாமான்களையும், சேவைகளையும் பிரிடன் எவ்விதம் உபயோகப்படுத்தி வந்தது. நிர்வாகமும் உள்நாட்டு அதிகாரிகளும் பாதித் தொகையை எடுத்துக்கொண்டு எதிரியை முறியடிக்கவும், நாட்டில் நிர்வாகம் நடத்தவும் உபயோகப்படுத்தி வந்தார்கள். பாக்கிப் பாதிதான் ஜனங்களின் ஜீவனத்துக்கு உபயோகப்பட்டது.

பொதுஜனச் செலவு £ 24,000 மிலியன்கள். அதாவது சராசரி ஒரு வருஷத்திற்கு 4,000 மிலியன் பவுன்கள். 1939, 1940-ம் வருஷங்களில் இது குறைந்தது. 1943-ம் வருஷத்தில் £ 5,000 மிலியன் பவுன்களுக்கு மேலாக அதிகரித்துவிட்டது. இதில் எவ்வளவு யுத்தச் செலவிற்கு உபயோகிக்கப்பட்டதென்று சொல்லமுடியாது. சுமாராகச் சொன்னால் அது £ 20,000 மிலியன்களாக இருக்கும். யுத்தத்தில் 5½ வருஷத்துக்கு இது சராசரி வருஷம் ஒன்றுக்கு 3,750 மிலியன் பவுன்களாகிறது. அதாவது தினசரி £ 10 மிலியன்களாகிறது. யுத்த ஆரம்ப வருஷங்களில் இது குறைவாக இருந்தது. 1943, 1944-ம் வருஷங்களில் இது அதிகரித்தது.

அடுத்தபடியாக பிரிடிஷ் மக்களுக்கு இதன் விளைவு என்ன? முதலாவதாக, அவர்கள் கஷ்டமான வாழ்க்கையை நடத்தவேண்டியிருந்தது. யுத்த காலத்தில் ஏற்பட்ட விலைவாசியை மதித்து, 1939-முதல் 1943-ம் வருஷம் வரையில் தனிப்பட்டவர்களின் வாழ்க்கை அளவு 79-சதவிகிதத்துக்குக் குறைந்தது. உணவுப் பொருள், இடவசதி, மற்ற அவசியங்கள் அதிகமாகக் குறையவில்லை. அதாவது, உல்லாச வாழ்க்கைப் பொருள்கள் குறைந்தன என்று பொருள்படும். தினசரி உபயோகத்திலிருந்த அநேக சாமான்களும், யுத்தத்துக்கு முன் அத்தியாவசியமானவை என்று கருதப்பட்டதுமான சாமான்களும் கிடைப்பதில்லை.

அடுத்தபடியாக வரி விகிதம் அதிகமாகிற்று. இதைப்பற்றியும் நான் உத்தேசமாகத்தான் சொல்லமுடியும். பொதுஜன வேலையில் செலவு, உபகாரச்சம்பளம், கடனுக்கு வட்டி, மற்ற சேவைகளின் சம்பந்தமான செலவுகள் எல்லாம் ஆறு வருஷங்களில் 29,000 மிலியன் பவுன்களாக இருந்தன.

இந்தத் தொகையில் £ 15,000 மிலியன்கள் அல்லது 52 சதவிகிதம் பொது மக்களிடமிருந்து வரிகள் மூலம் வசூலிக்கப்பட்டது. பிரிடிஷ் மக்கள் ஒரு மகத்தான அதிகப் பொருள் செலவுள்ள யுத்தத்தின் பாதிச் செலவுக்குப் பொருள் கொடுத்து உதவி செய்திருக்கிறார்கள்.

இத்துடன் பிரிடனின் முயற்சி நின்று விடவில்லை. பாக்கி 14,000 மிலியன் பவுன்களைச் சேமிக்கவேண்டியிருந்தது. அதின் பெரும்பாகம், உலகத்திலேயே மிகுதியான வரி விகிதத்துக்குட்பட்டிருந்த பிரிடிஷ் மக்கள் சேமிப்புச் செய்துவந்ததிலிருந்து ஏற்பாடு செய்யப்பட்டது.

மற்றொரு புள்ளிவிவரங்களைப் பார்ப்போம். ஆறு வருஷங்களில் உபகாரச்சம்பளம், கையிருப்புப் பொருளின் வட்டி இரண்டும் சேர்ந்து £ 47,000 மிலியன்கள். £ 15,000 மிலியன்கள் அதாவது 35-சத விகிதம் வரி விகிதம் மூலம் சம்பாதிக்கப்பட்டது. பிறகு ஜனங்கள் நிர்வாகத்துக்கு £ 8,000 மிலியன்கள் யுத்தக் கடனாகக் கொடுத்தார்கள். மொத்தத்தில் அவர்கள் வருமானத்திலிருந்து £ 23,000 மிலியன்கள் கொடுத்து உதவினார்கள். வாழ்க்கையை நடத்த அவர்களிடம் £ 24,000 மிலியன்கள் இருந்தன.

நிர்வாகத்துக்குக் கடன் கொடுத்த £ 8,000 மிலியன்களில் £ 3,400 மிலியன்கள் தேசிய சேமிப்புப் பத்திரங்களிலும், தற்காப்புப் பத்திரங்களிலும் அல்லது சேவிங்க்ஸ் பாங்கிகளிலும் போடப்பட்டது. இந்த மொத்தத் தொகைதான் சிறிய சேமிப்பு என்று சொல்லப்படுகிறது. இந்தப் பொருளை தொழிலாளர்கள் சேமித்து வைத்தார்கள். £ 4,000 மிலியன்களுக்கு மேற்பட்டவைகள் பெரிய சேமிப்புகள். அவைகளைப் பொதுமக்கள் கொடுத்துதவினார்கள்.

செல்வப்பெருக்கு ஏற்பட்ட முறையில் £ 5,000 மிலியன்கள் கடன் வாங்கப்பட்டதாவென்பது சந்தேகம். இது யுத்தத்தின் பூராச் செலவின் கால்பாகமாகும்.

பிரிடனின் மூலப்பொருளிலிருந்து அது எவ்வளவு செலவழித்திருக்கிறது. உத்தேசமாகச் சொன்னால் உள்நாட்டிலுள்ள கையிருப்பிலிருந்து £ 1,000 மிலியன்கள் செலவிடப்பட்டது. கடல் தாண்டியுள்ள நாடுகளிலிருந்து £ 4,000 மிலியன்கள் உபயோகிக்கப்பட்டன. உள்நாட்டில் சாமான்களின் கையிருப்பு குறைந்தது, அனவசியமான பழுது பார்ப்பது ஒத்தி வைக்கப்பட்டது. வீடுகளுக்கு வர்ணம் பூசப்படவில்லை. உத்யானவனங்களில் கிராதிகள் எடுபட்டுவிட்டன. ஆனால் கடல்தாண்டியுள்ள நாடுகளில் அதிக நஷ்டம் ஏற்பட்டிருக்கிறது.

1940-ம் வருஷ முடிவில் பிரிடனுக்கு 450 மிலியன் பவுன்கள் பொருமானமுள்ள தங்கம் நஷ்டமென்று வாஷிங்டனில் மதிப்பிடப்பட்டது. இங்கிலாந்தில் கொஞ்சம்கூடத் தங்கம் கிடையாது. 1941-ம் வருஷ மத்தியில் பிரிடிஷ் நிர்வாகம் யுத்தத்துக்கு முன் பிரிடன் வசமிருந்த விற்பனை செய்யக்கூடிய எல்லா டாலர் பொருமானங்களையும் திரட்டி, கடல்தாண்டி விற்றுவிட்டது. பிரிடிஷ் கம்பெனிகள் வசமிருந்த அமெரிக்க வியாபார ஸ்தலங்களை பிரிடன் விற்றுவிட்டது அல்லது ஈடு வைத்துவிட்டது. அதன்பின் தெற்கு ஆபிரிக்காவிலிருந்தும் இந்தியாவிலிருந்தும் ஸ்டர்லிங்க் கடன் வாங்கி அவற்றை உரிய நிர்வாகங்களுக்கு விற்றது.

இந்த முறையில் பிரிடிஷ் நிர்வாகம் அமெரிக்க டாலர்களையும், தெற்கு ஆபிரிக்கா பவுன்களையும், இந்திய ரூபாய்களையும் திரட்டி அவசியமான இறக்குமதிப் பொருள்களுக்குப் பொருள் கொடுத்தது. கனடா, சாமான்களாகவும், பொருளாகவும் தாராளமாக நன்கொடையளித்ததை பிரிடிஷ் மக்கள் மறந்துவிடவில்லை. ஆனால் இதுவும் போதவில்லை. ஸ்டர்லிங்க் வட்டாரத்திலுள்ள மற்ற தேசங்களுக்கு ஸ்டர்லிங்க் மீதி என்ற வகையில் பிரிடன் £ 2,000 முதல் £ 3,000 மிலியன்கள் வரையில் கடன் கொடுக்கவேண்டியிருந்தது.

கடைசியாக, குத்தகைக் கடனைப்பற்றி ஒரு வார்த்தை சொல்லுகிறேன். பிரிடனின் சாதாரணமான ஐச்வர்யங்கள் குறைந்தவுடன் அமெரிக்க உதவி நற்சமயத்தில் கிடைத்தது. கடன் குத்தகைத் திட்டம் எல்லா வகைகளிலும் உபயோகப்பட்டது. 1944-ம் வருஷம் ஏப்ரல் மாதம் 1-ம் தேதி வரையில் பிரிடன் அமெரிக்காவுக்கு 1,934 மிலியன்கள் பொருமானமுள்ள டாலர்கள் அதாவது சுமாராக 500 மிலியன் பவுன்கள் பொருமானமுள்ள தளவாடங்களை அனுப்பியிருக்கிறது. இதைத்தவிர பிரிடனும் மற்ற சாம்ராஜ்ய நாடுகளும், ருஷ்யாவுக்கும், மற்ற நாடுகளுக்கும் சாமான்களை அனுப்பி வந்தன.

இனிமேல் அதிகமாக நான் சொல்லவிரும்பவில்லை. ஏனெனில் செலவைப் பொருட்படுத்தாமல் ஸ்நேகிதர்கள் பொதுவான எதிரியைத் தாக்க உதவி செய்துகொள்ளுவார்கள். பிரிடனுக்குப் பொருளாதாரச் செலவு எவ்வளவு ஏற்பட்டதென்றும், அதை பிரிடன் எவ்விதம் ஈடு செய்ததென்றும், இன்னும் எவ்வளவு பாக்கியிருக்கிறதென்றும் சொல்ல முயற்சித்தேன்.

முதலாவதாக, கொடுக்கவேண்டிய பாக்கி, உள்நாட்டிலுள்ள யுத்தத்தினல் ஏற்பட்ட தாழ்வையும், நாசத்தையும் சரிப்படுத்துவது. இரண்டாவதாக, பிரிடனுக்கு வெளிநாடு களில் ஏற்பட்ட கடனைத் தீர்ப்பது. அயல்நாட்டு முதலீடுகளிலிருந்து கிடைத்து வந்த வருமானத்தை சரிப்படுத்துவது. இந்த பாக்கியை துணிவு மூலமாகவும், தீரத்துடனும், பரிசிரமத்தினுலும் தீர்த்துவிடலாம். இரண்டாவது பாகம் என்பது உலகத்தின் மற்ற பாகங்களுக்கு விற்பனை செய்ய பிரிடனுக்கு சக்திவேண்டுமென்றும் பிரிடிஷ் சாமான்களை வாங்க மற்ற நாடுகள் சம்மதமுள்ளவையென்றும் பொருள்படும்.

---

## இந்திய இருப்புப்பாதைகள் யுத்தத்தில் ஈடுபடுகின்றன.

இன்று நேசதேசத்தார்கள் கொண்டாடும் வெற்றிக்கு இந்திய இருப்புப்பாதைகளும் பெருதவி செய்திருக்கின்றன. அவைகள் துருப்புகளை ஏற்றிச் சென்றிருக்கின்றன. வெடி மருந்துகளைக் குவித்திருக்கின்றன. முஸ்தீப்புகளை வழங்கியிருக்கின்றன. தேசத்தின் வாழ்க் கையும் சரியான முறையில் நடைபெறும்படி முயற்சி செய்திருக்கின்றன.

சொற்பகாலத்திற்குள் ரெயில்வே ஒர்க்ஷாப்புகள் சமாதான உற்பத்தியிலிருந்து யுத்த உற்பத்தி அளவுக்கு மாற்றிக்கொண்டன. இந்த ஒர்க்ஷாப்புகளிலிருந்து வேகமாகவும், முறைப்படிக்கும் மிகுதியாகவும், ஆயுதங்களும், வெடி மருந்துகளும் மற்ற யுத்த தளவாடங் களும் செய்து அனுப்பப்பட்டிருக்கின்றன. ஆயிரக்கணக்கான பீரங்கிக் குண்டுகளும் லக்ஷக்கணக்கான சனியங்களும், வெடிவைக்கும் வத்திகளும், டெடோனேடர் அடைப்பு களும், பீரங்கிகளை ஏற்றிச்செல்லும் வண்டிகளுக்குப் பாகங்களும் நமது ஆயுத சாலைகளி லிருந்து ஜெர்மனிக்கே சென்றிருக்கின்றன. உற்பத்திகள் குக்கர்களுக்குப் போடும் சிறிய வால்வ் முதல் கவசம் பூண்ட மோட்டார்களுக்கும், பெரிய பீரங்கி வண்டிகளுக்கும், எல்லைப்புற லாரிகளுக்கும், பாட்டரிகளுக்கும், உருக்கும் இயந்திரங்களுக்கும் வேண்டிய சாமான்கள் வரையில் உண்டுபண்ணியிருக்கின்றன. ஒரு ஒர்க்ஷாப் கவசத்தைப் பிளக்கும் தோட்டாவை உண்டுபண்ணிற்று. அதை இங்கிலாந்தில் பரீக்ஷித்துப் பார்த்து பிரிடிஷ் தோட்டாவுக்கு சமானமானதென்று அதை ஒப்புக்கொண்டிருக்கிருர்கள். அதற்குத் தேவையான முறை களும் அமைப்புகளும் அந்த ஒர்க்ஷாப்பிலேயே தயாரிக்கப்பட்டன. முஸ்தீப்பும் அங்கேயே உற்பத்தி செய்யப்பட்டது.

### இன்ஜினியரிங் முயற்சி.

யுத்தமானது உற்பத்தியினல் மட்டும் நடத்தப்பட முடியாது. சாமான்கள் போர் புரிகிறவர்களிடம் போய்ச்சேரவேண்டும். ஆகையினல் ரெயில்வே இன்ஜினியர்கள் இருப்புப் பாதைகளின் சக்தியை அதிகரித்து ராணுவ டிப்போக்களுக்கும், விமானதளங்களுக்கும் சாமான்களை அனுப்பி வந்தார்கள். யுத்தம் ஆரம்பித்த பிறகு ராணுவத்திற்காக 1,400 மைல்கள் வண்டி நிற்குமிடங்கள் தயாரிக்கப்பட்டிருக்கின்றன. விமான தளங்களுக்குச் செல்ல சாசுவதமாக 70 மைல்கள் கொண்ட சாஸ்வத இருப்புப்பாதையும் தாத்காலிகமாக 153 மைல்கள் கொண்ட இருப்புப்பாதையும் இரட்டிப்பது அல்லது நான்கு மடங்கு செய்வது என்ற முறையில் 400 மைல்கள் நீளமுள்ள இருப்புப்பாதையும் போடப்பட்டிருக்கின்றன. அத்துடன் 198 கிராஸ்ஸிங் ஸ்டேஷன்களும், 174 ஸ்டேஷன்களில் உதவி இருப்புப்பாதை களும், 145 ஸ்டேஷன்களில் இருப்புப்பாதைகளை நீளப்படுத்துவதும் 30 பெரிய ஸ்டேஷன் தளங்களை திருத்தி அமைப்பதும் பூர்த்தியாகி இருக்கின்றன. மொத்தத்தில் 3,500 மைல்கள் கொண்ட இருப்புப்பாதை தளவாடங்கள் உபயோகப்படுத்தப்பட்டிருக்கின்றன.

கடல் தாண்டி இந்தியா அனுப்பியிருக்கும் இருப்புப்பாதை தளவாடங்கள் ஒரு கோடி ரூபாய் பொறுமானமுள்ளவை. முக்கியமாக, இன்ஜின்களும், வண்டித் தொடர்களும், வாகன் களும், தண்டவாளங்களும், திரும்பும் அமைப்புகளும், கிராஸிங்களும், மற்றும் பலவகை இருப்புப்பாதை தளவாடங்களும் அனுப்பப்பட்டிருக்கின்றன. மத்திய கிழக்குப் போர் முனையில் முக்கியமான இருப்புப்பாதைகளை அமைப்பதற்காக ஏராளமான தண்டவாளங் களும், ஸ்லீபர்களும், யந்திரங்கள் முதலிய சாமான்களும் அனுப்பப்பட்டிருக்கின்றன. இந்தப் போக்குவரத்துகள் எகிப்து, இராக், பர்ஸியா வழியாக இந்தியாவைப் படையெடுப்பது என்ற அச்சு நாட்டாரின் திட்டத்தை முறியடித்ததுமல்லாமல் வட ஆப்பிரிக்காவின்

இறுதி விடுதலைக்கும் உபயோகப்பட்டன. பாரசீகத்துக்குச் சென்ற இருப்புப்பாதை வழியாக சணல், தேயிலை மற்ற சாமான்கள் ருஷ்யாவுக்கு அனுப்பப்பட்டன. அந்த இருப்புப்பாதை வழியாக போலிஷ் அகதிகள் ஏராளமாக இந்தியாவுக்கு வந்திருக்கிறார்கள்.

**மனித பல ஒத்தாசை.**

இருப்புப்பாதை வழியாக மனிதபலமும் அனுப்பப்பட்டிருக்கிறது. அவைகள் பல விதமான ராணுவப் படைகளையும் திரட்டி இருக்கின்றன. ஒர்க்ஷாப்புகளிலிருந்தும் மற்ற ஸ்தானங்களிலிருந்தும் ராணுவ ரெயில்வே கம்பெனிகளுக்கு அவைகள் ஏராளமான வேலைக்காரர்களை அனுப்பியிருக்கின்றன. தொழிற்பயிற்சியுள்ள வேலைக்காரர்கள் பீரங்கி உற்பத்திக்காக ஏராளமாக தேவைப்பட்டார்கள். யுத்த ஆரம்பத்திலேயே யுத்த தொழிற்பயிற்சி நிபுணர்களுக்குத்தேவை அதிகரித்தது. அவர்களை நன்றாகவும் துரிதமாகவும் பயில்விப்பதற்கு திட்டம் போடப்பட்டது. ரெயில்வே ஒர்க்ஷாப்புகள் இதற்கும் அதிக ஒத்தாசை செய்து பிட்டர்களையும், செம்பு, தகர கருமான்களையும், டர்னர்களையும், மெஷின் வேலைக்காரர்களையும், கருமான்களையும், மின்சார வேலைக்காரர்களையும் மின்சார முலாம் பூசுகிறவர்களையும் பயிற்சி செய்து அனுப்பியிருக்கின்றன.

---

# உலகப் போர்முனைகளுடன் தொடர்பு.

## இந்தியப் போக்குவரத்துகளின் முக்கிய வேலை.

சரித்திரத்திலுள்ள எல்லா யுத்தங்களிலும் இந்த யுத்தம் பெரும்பாலும் போக்குவரத்து மார்க்கங்களையும், தளவாடங்களையும் பொருத்தது. இந்தப் பூர்ணமான யுத்தத்தில் நேச தேசத்தார்கள் மனித பலம், சாமான்கள், போக்குவரத்து வசதிகள் எல்லாவற்றையும் திரட்டவேண்டியிருந்தது. ஒன்று திரட்டுவதற்கு போதுமான, சௌகரியமான, திறமையுள்ள, துரிதமாக உள்ள போக்குவரத்துகள் வேண்டும். தேசங்களின் பூர்ணமான ஐசுவரியங்களைத் திரட்ட தேசத்தின் ஒவ்வொரு மூலைக்கும் உத்தரவுகளையும், வேண்டுகோள்களையும், உபயோகமுள்ள தகவல்களையும் அனுப்ப தந்தியும், டெலிபோனும், வெயர்லஸ்ஸும் தான் முக்கிய சாதனங்கள். மேற்கு முனைப்போரில் வெற்றி பெற்றதில் இந்தியாவின் பாகம் என்பது இந்தியாவிலுள்ள போக்குவரத்து சாதனங்களை அது பூராவாகவும், துரிதமாகவும் உபயோகித்ததுதான்.

1939-ம் வருஷம் ஸெப்டம்பர் 3-ம் தேதியன்று இந்தியா ஜெர்மனியுடன் போர் தொடுத்தது. இதனால் இந்திய தபால், தந்தி இலாகாவுக்கு அதிக சிரமம் ஏற்பட்டது. ஒரு பக்கம் ஜெர்மனிக்கும், மற்றொரு பக்கம் பிரிடிஷ் சாம்ராஜ்யத்துக்கும், பிரான்ஸுக்கும் யுத்தம் மூளும்முன்னரே மனஸ்தாபங்கள் ஏற்பட்டிருந்தன. இந்த நெருக்கடியை உத்தேசித்து தபால், தந்தி இலாகா தயாராக இருந்தது. யுத்தம் மூண்டவுடன் எதிரி நாடுகளுடன் இருந்த எல்லா தபால், தந்தி, டெலிபோன் போக்குவரத்துகளும் நிறுத்தப்பட்டன. உள்நாட்டு, வெளிநாட்டுக் கடிதங்கள் தணிக்கைக்குட்படுத்தப்பட்டன. கடிதங்களை குறிப்பிட்ட இடங்களில் தணிக்கைக்கு உட்படுத்துவதற்காக தபால்கள் செல்லும் மார்க்கங்கள் மாற்றியமைக்கப்பட்டன. ஆகிலும் இதினின்றும் யாதொரு தாமதமும் ஏற்படவில்லை. பொதுஜனங்களுக்கும், துருப்புகளுக்கும் யாதொரு அசௌகரியமும் ஏற்படவில்லை.

இதைத்தவிர மற்ற அநேக அம்சங்களும் இலாகாவின் சாதாரணமான வேலையைக் கெடுத்துவிட்டன. உதாரணமாக, அதிக முன்யோசனையுடன் அமைக்கப்பட்டு திறம்பட வேலை செய்துவந்த சாம்ராஜ்ய ஆகாய மெயில் திட்டம் ஒத்திவைக்கப்பட்டது. கடிதங்களுக்கு அபாரமான விகிதங்கள் போடப்பட்டதினால் கடிதங்களும் குறைந்தன. கடல்மார்க்கமாகச் சென்ற தபால்களும், கடற்படையின் கட்டுப்பாட்டினால் பாதிக்கப்பட்டது. பொருளாதார யுத்தத்தினால் சாமான்கள், செலாவணியின் ஏற்றுமதியும், இறக்குமதியும் கட்டுப்பாடு செய்யப்பட்டன. யுத்த ஆரம்பத்தில் சேவிங்ஸ் பாங்கு முதலீடுகள் திரும்பி வாங்கப்பட்டன. போஸ்டாபீஸ் பத்திரங்கள் பணமாக்கப்பட்டன. இந்த நெருக்கடியை உத்தேசித்து முன் கூட்டியே போஸ்டாபீஸுகள் போதுமான பொருளை கைவசம் பெற்றிருந்தன.

தந்தி சம்பந்தப்பட்டமட்டில் அநேக மார்க்கங்களில் போக்குவரத்து யுத்தத்துக்குமுன் இருந்ததைவிட மூன்று அல்லது நான்கு மடங்கு அதிகரித்தது. டெலிபோன் மூலம் பேசு

வதை தணிக்கை செய்வது சிரமமாக இருந்ததால் கடல்தாண்டிச் செல்லும் டெலிபோன் பேச்சுக்கள் நிறுத்தப்பட்டன. இதனால் உள்நாட்டுப் போக்குவரத்து அதிகரித்து சிரமத்தை உண்டுபண்ணிற்று. இந்தியக் கடற்படை அதிகாரிகள் கப்பல்களுடன் இருந்த வெயர்லெஸ் போக்குவரத்தைக் கட்டுப்பாடு செய்தார்கள். தனிப்பட்டவர்களின் லைசென்சுகள் ரத்து செய்யப்பட்டன. முன்கூடியே செய்யப்பட்ட இந்த ஏற்பாடுகள் சமாதான காலத்திலிருந்து பூரணமான யுத்த முயற்சிக்கு மாறினதால் ஏற்பட்ட குழப்பத்தை குறைத்தன.

### சமாதானத்திலிருந்து யுத்தத்துக்கு மாறுதல்.

தபால், தந்தி இலாகா அதிகரித்துவரும் தேவைகளுக்கு ஏற்பாடு செய்யவேண்டியதாக இருந்தது. ஹிட்லர் முதல் மூச்சில் ஆசியா கண்டத்தின் வாசற்படிக்கு வந்துவிட்டான். இதே சமயத்தில் ஜப்பானும் போரில் இறங்கி இந்தியாவின் கிழக்கு வாசற்படிக்கு வந்துவிட்டது. ஆகையால் இந்தியா ஒரு பெரிய ஆயுதசாலையாகவும், இரு போர்முனைகளுக்கும் தளமாகவும் மாறிவிட்டது. ஆபிரிக்காவும், தூரக்கிழக்கும் இந்தியாவுக்கு முக்கியத்துவமுள்ள பிரச்னை என்று கருதப்பட்டது. பிரிடனிலிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் வந்த ஸப்ளைசுகள் யூ-படகு அபாயத்ினால் குறைந்துவிட்டன. திடீரென்று இந்திய தபால், தந்தி இலாகா இரண்டு போர்முனைகளுக்கும் போக்குவரத்து மத்திய ஸ்தலமாக ஆகிவிட்டது.

ஆபிரிக்காப் போரில் இந்தியா மேல் நாடுகளில் வெகு சீக்கிரத்தில் போக்குவரத்துகளை அமைத்தது. சில நாட்களுக்குள் பேஸ் தபாலாபீஸுகள் அமைக்கப்படவேண்டியிருந்தது. சில மணிகளுக்குள் தந்தி ஆபீஸுகளும், கம்பிகளும், வெயர்லெஸ் நிலயங்களும் அமைக்கப் படவேண்டியிருந்தது. பயிற்சி பெற்ற வேலைக்காரர்களைக் கடல்தாண்டி அனுப்பவேண்டி யிருந்தது. பிரிடிஷ், இந்திய சமிக்ஞை படையின் உதவியுடன் தபால், தந்தி இலாகா இந்த வேலையை திறம்படச் செய்துவந்தது. அவர்களின் வேலை சுலபமானதல்ல.

யுத்தம் மூளுமுன் மிகுதியான வியாபாரத்தாழ்வு ஏற்பட்டிருந்தது. அதனால் போக்குவரத்து குறைந்து வருமானமும் குறைந்தது. நிர்வாகம் சிக்கன முறையை கையாளும்படிக்கு நேரிட்டது. ஆகையால் குறைந்துவரும் போக்குவரத்துக்குத் தக்கவாறு சிப்பந்திகள் குறைக்கப்பட்டார்கள். அதிகப் பொருள் செலவிடக்கூடியதும் ஆனால் உடன்காலத்தில் லாபம் அளிக்கக்கூடியதாக இல்லாததான திட்டங்கள் ஒத்திவைக்கப்பட்டன. தந்தி, டெலிபோன் வசதிகள் சமாதானகாலத்துக்குப் போதுமானதாக இருந்தது. திடீரென்று எதிர்பாராமல் ஏற்படும் அதிக வேலைக்கு இலாகாவின் எந்த வகுப்பிலும் போதுமான ஏற்பாடுகள் இல்லை.

### யுத்த கால அபிவிருத்தி.

வெற்றி தினத்தன்று இந்த இலாகா 32 பேஸ், 200 போர்முனை போஸ்டாபீஸுகளையும், துருப்புகளுக்குச் செல்லும் தபால்களைக் கூறுபோட பம்பாயில் பேஸ் போஸ்டல் டெப்போவையும், கராச்சியில் பேஸ் விமானப்படை போஸ்டல் டெப்போவையும், கல்கத்தாவில் ஆகாய மெயில் செக்ஷனையும் பெற்றிருக்கிறது. அந்த இலாகாவிலிருந்த 3,500 தேர்ச்சியும், அனுபவமும் பெற்ற வேலைக்காரர்களும், 60 கமிஷன் பெற்ற உத்தி யோகஸ்தர்களும் யுத்த சேவைக்குச் சென்றிருக்கிறார்கள். பொதுஜன சௌகரியத்திற்காக 12,000 பேர்கள் தாத்காலிகமாக ரெக்ரூட் செய்யப்பட்டு பயில்விக்கப்பட்டார்கள். தந்தி சம்பந்தப்பட்டமட்டில் போர்ப்படைகளுடன் 21 ஆபீஸர்களும், 443 மற்ற உத்தியோகஸ்தர்களும் சென்றிருக்கிறார்கள். தந்தி, தபால் தற்காப்புப் படையில் இன்றுவரையில் 26,000 வேலைக்காரர்களும், 174 ஆபீஸர்களும் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். புதிதாக அனுபவம் பெறாத வேலைக்காரர்கள் இருந்தபோதிலும் இலாகா ஒரு வருஷத்தில் 1,575 மிலியன் கடிதங்களை அனுப்பியிருக்கிறது. லக்ஷம் கடிதங்களுக்கு சராசரி ஒரு புகார்தான் வந்தது. இந்தியாவிலுள்ள முக்கியமான ஸ்தலங்களுக்கிடையே தந்தி, டெலிபோன் மார்க்கங்களை அமைக்கவும், தற்காப்புப் படைகள் இருக்குமிடத்தில் தேவையான போக்குவரத்து மார்க்கங்களை அமைக்கவும் 16 கோடி செலவில் ஒரு திட்டத்தை நிறைவேற்றியது. முக்கிய மான நகரங்களை ஒன்றுபடுத்தியும், ஒரு ஜோடி கம்பிகள் வழியாக ஏராளமான தகவல்களையும் 1,10,000 மைல்கள் நீளமுள்ள கம்பியும், 10,000 மைல்கள் வரையில் புதிய மார்க்கங்களும் அமைக்கப்பட்டன. சுமாராக 180 டெலிபோன் சானல்களும், 250-க்கு மேற்பட்ட தந்தி சானல்களும் புதிதாக அமைக்கப்பட்டன. இந்தியா பூராவிலும் புதிய டிரங்கு மார்க்கங்கள் அமைக்கப்பட்டன. 4,500 மைல்கள் போஸ்ட் லயன்களும், 43,000 மைல்கள் லயன்களும், 67,000 மைல்கள் கம்பியும் இதற்காக உபயோகப்பட்டன.

### டெலி போக்குவரத்துகள்.

யுத்த ஆரம்பத்தில் வசதிகளை அதிகப்படுத்தாதபோனல் போக்குவரத்து அதிகரிப்பை சமாளிக்க முடியாது என்று தபால், தந்தி இலாகா கண்டுகொண்டது. யுத்தம் காரணமாக இந்த நிலைமை மோசமாக ஆகிவிட்டது. ஒரு திட்டம்போடப்பட்டு டெலி போக்குவரத்துகளை அபிவிருத்தி செய்வதற்காக 1942—1943-ம் வருஷங்களில் ஒரு கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டது. ஆனாலும் சேவைப்படைகளுக்கு டெலிபோன் வசதி அதிகமாகயிருந்ததால் பூரா திட்டம் திருத்தி அமைக்கப்படவேண்டியதாயிருந்தது.

அடுத்தபடியாக தற்காப்பு காரியங்களுக்காக டெலி போக்குவரத்துகளை அபிவிருத்தி செய்யவும், தற்பொழுதுள்ள பொதுஜன சேவைக்குறிய அமைப்புகளை அதிகரிக்கவும் விரிவான திட்டம் போடப்பட்டது. ஒரு புதிய டெலி போக்குவரத்து அபிவிருத்தி போர்டும் அதற்குத் தலைவராக தந்தி, தபால் டிரெக்டரும் பூரணமான அதிகாரங்களுடன் நியமிக்கப்பட்டார்கள். 10,000 மைல்கள் மார்க்கங்களை அமைக்கவேண்டிய இந்தத் திட்டத்தை நிறைவேற்ற ஒரு கிளை ஸ்தாபனமும் அமைக்கப்பட்டது. 1942-ம் வருஷ முடிவில் 16 கோடி ரூபாயில் ஒரு திட்டம் சாங்கிஷன் செய்யப்பட்டது. நல்ல முறையில் வேலை செய்யவும் ஆரம்பமாயிற்று. இப்பொழுது நிறுவப்பட்டிருக்கும் திட்டப்படி இந்தியாவிலுள்ள பெரிய நகரங்கள் முக்கியமான மார்க்கங்கள் மூலம் இணைக்கப்படும். பெரிய ஸ்தானங்களிலிருந்து சிறிய ஸ்தானங்களுக்கு உள்நாட்டு மார்க்கங்கள் அமைக்கப்படும். இது அநேக இடங்களில் பூர்த்தியாகிவிட்டது.

இந்தியாவுக்கு வரும் கடல் மார்க்கங்களுக்கு அபாயம் ஏற்பட்டிருந்ததால் இலாகாவின் சொந்த தேவைகளுக்கும், போர்படைகளுக்கு ஸப்ளை செய்வதற்கும் போதுமான போக்குவரத்து தளவாடங்கள் இறக்குமதி செய்யக்கூடவில்லை. அலிபூரிலுள்ள ஒர்க்ஷாப்புகளும், பம்பாயிலுள்ள புதிதாக அமைக்கப்பட்ட ஒர்க்ஷாப்பும் விஸ்தாரப்படுத்தப்பட்டன. ஜபல்பூரில் மற்றொரு புதிய ஒர்க்ஷாப் அமைக்கப்பட்டது. இவைகளைத்தவிர தனிப்பட்டவர்களைச் சேர்ந்த 91 ஒர்க்ஷாப்புகள் இந்தியா பூராவிலும் மார்க்கத்திற்கு வேண்டிய தளவாடங்களைத் தயார் செய்து கொடுத்தன. 1943—44-ம் வருஷத்தில் மட்டும் 80 லக்ஷ ரூபாய் பொருமானமுள்ள சாமான்கள் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன.

அநேகமாக லயனைப்போட அவசியமான பொருள்களும், டெலி போக்குவரத்து திட்டத்துக்கும் அதை பரிபாலித்துவருவதற்கும் தேவையான சாமான்களின் பெரும்பாகமும் இந்தியாவில் உற்பத்தி செய்யப்படுகிறது. இந்தத் திட்டப்படி உள்நாட்டு டெலிபோன் அமைப்புகளும் அதிகரித்திருக்கிறது. 20,000 புதிய கருவிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. டில்லி, லாகூர், பூனு முதலிய இடங்களில் டெலிபோன் போக்குவரவு அதிகரித்திருக்கிறது. அங்கு இன்னும் அதிக வசதிகள் தேவைப்படும். யுத்த காலத்தில் தந்திப் போக்குவரவும் அதிகரித்திருக்கிறது. அதற்குவேண்டிய முஸ்தீப்புகளைத் தயார் செய்யும் பொருப்பு தந்தி தபால் இலாகாவுக்கு ஏற்பட்டுவிட்டது.

### யுத்த காலத்தில் போக்குவரத்து அதிகம்.

1943—44-ம் வருஷத்தில் இலாகா 28 மிலியனுக்கு மேற்பட்ட தந்திகளைக் கையாண்டிருக்கிறது. தகவல் அறிவிப்பு 125 மிலியன்களாகும். 1938—39-ம் வருஷத்தில் இது 16 மிலியன்களாகவும், 82 மிலியன்களாகவும் இருந்தது. ஐந்து வருஷ யுத்தத்தில் அயல் நாடுகளிலிருந்து 38,44,000 தந்திகள் வந்தன. அவைகளில் 97 மிலியன் வார்த்தைகளிருந்தன. யுத்தத்துக்குமுன் சென்ற வருஷத்தில் 25 மிலியன் வார்த்தைகளடங்கிய 27,73,000 தந்திகள் வரவேற்கப்பட்டன.

டெலிபோன் போக்குவரத்து யுத்தத்துக்குமுன் 2 மிலியனுக இருந்ததுபோக, 1943—44-ம் வருஷத்தில் அது 4 மிலியனுக அதிகரித்தது. இலாகா சம்பந்தமான டெலிபோன்களும், கவர்ன்மெண்டு வசப்படுத்திக்கொண்ட மற்ற திட்டங்களும் சேர்ந்து 82,728-லிருந்து 1,13,005-க்கு அதிகரித்துவிட்டன. இந்தக் கணக்கில் தற்காப்புப் படைகளுக்காக உபயோகப்படும் டெலிபோன்கள் சேர்க்கப்படவில்லை. முஸ்தீப்புகளும், ஆயுதங்களும் கிடைத்திருந்தாலும் இந்த சங்கியை அதிகரித்திருக்கும்.

### தற்காப்புப் படைகளுக்காக தபால் சலுகைகள்.

இந்தியாவிலும், கடல்தாண்டியுமுள்ள இந்தியத் துருப்புகளுக்கும் போஸ்டல் சலுகை காட்டியதினுல் இலாகா வரும்படியில் அநேககோடி ரூபாய்கள் நஷ்டமாகிவிட்டது. துருப்புகளுக்கு அனுப்பப்படும் ஆகாயமெயில் வசதிகளுக்கான தேவைகளை ஈடுசெய்யவும் ஆகாய

மெயிலின் கன இன சக்தியை அதிகரிக்காமல் பாதுகாக்கவும் இரண்டு புதிய தபால் முறைகள், அதாவது ஆகாய கிராப் என்றும் ஆகாயக் கடிதங்கள் என்றும் ஆரம்பிக்கப் பட்டன.

திருப்புகள் பிரிடனுக்குக் கட்டணம் அன்னியிலும், சுங்கவரி அன்னியிலும் குறிப்பிட்ட அளவுக்கு பார்சல்களை அனுப்பலாம். ஐரோப்பாவிலுள்ள கைதிகளுக்கும் அவர்களிடமிருந்தும் வெளி நாடுகளுக்கும் தபால்கள் சுறுக்கமான மார்க்கம் மூலமாகக் கொண்டுபோக ஏற்பாடுகள் செய்யப்பட்டன.

### பொதுவான வருமானத்திற்கு தபால், தந்தி இலாகாவின் உதவி.

இன்னும் மற்றவகைகளிலும் நேசதேச வெற்றிக்கு தபால், தந்தி இலாகா உதவி செய்திருக்கிறது. இந்த இலாகாவில் மீதப்பட்ட 9 கோடி ரூபாய்களும் பொதுவான வருமானத்திற்கு கொடுக்கப்பட்டது. ஒவ்வொரு போஸ்டாபீஸும் செல்வப்பெருக்கைக் குறைக்கச் செய்த முயற்சிக்கு உதவி செய்தது. அதற்கு அத்தாக்ஷிவேண்டுமானல் தற்காப்பு ஸேவிங்க்ஸ்களில் போடப்பட்டிருக்கும் தொகையை கவனித்தால் போதும்.

உதாரணமாக தற்காப்பு சேவிங்க்ஸ் பாங்கி டிபாஸிட்டுத்தொகை 1943—44-ம் வருஷ ஆரம்பத்தில் 94,000 இருந்தது. வரவு செலவு திட்டக்கணக்கு வருஷ முடிவில் 23,08,000 ஆக ஏறிவிட்டது. தற்காப்பு சேவிங்க்ஸ் கையிருப்பு 40·6 லக்ஷத்திலிருந்து 3·5 கோடிகளுக்கு உயர்ந்தது. ஸர் குருனுத் பெஹுர் 1940-ம் வருஷத்தில் தபால் இலாகாவில் யுத்த நிதியை ஏர்பாடு செய்தார். இந்த நிதியைக்கொண்டு மூன்று விமானங்கள் வாங்கப்பட்டன, மூன்று வசதியளிக்கும் லாரிகள் வாங்கப்பட்டன. ஐந்து பிரதம சிகிச்சை வைத்தியவசதி கார்கள் வாங்கப்பட்டன. மற்ற சேவை இனங்களுக்கு ரூ 56,000 நன்கொடை அளிக்கப் பட்டது.

---

## மேற்குப் போர்முனையின் வெற்றிக்கு இந்தியாவின் உதவி.

### மத்திய கிழக்குக்கும், ருஷ்யாவுக்கும் யுத்த தளவாட ஸப்ளை.

(ஆபிரிக்க வெற்றிக்கும் ஏராளமான சாமான்கள்).

ஐரோப்பியப் போர்முனைகளின் இறுதி வெற்றிக்கு வட ஆபிரிக்கா பாலைவனங்களில் தான் அஸ்திவாரம் போடப்பட்டன. ஆபிரிக்க வெற்றிக்கு இந்தியா செய்த பேருதவியை சுருக்கமாகப் பின்வருமாறு சொல்லிவிடலாம். வெற்றிக்கு அறிகுறியாக அமெரிக்காவின் பூரா பலமும் பிரிடனுக்குக் கிடைக்குமுன் இந்தியாதான் மத்திய கிழக்குக்கு ஏராளமான சாமான்களை அனுபபியது. ரெயில்வே வாகன்களமுதல் படைகளையிறக்கும் படகுகள், மின்சார டார்ச்சுகள் முதல் கால் சல்லடைப் பொத்தான் வரையில், இந்தியா ஸப்ளை செய்திருக்கிறது.

### ஜல ஸப்ளைக்காக எஃகு குழாய்கள்.

வறட்சியான தண்ணீரில்லாத பாலைவனத்தில் தண்ணீர் வசதிக்கு ஏற்பாடு செய்ய இந்திய ஒர்க்ஷாப்புகளிலிருந்து எஃகு சப்ளை செய்யப்பட்டது. இந்தியா ஸப்ளை செய்த குழாய்கள் மட்டும் ஆயிரக்கணக்கான மைல்கள் நீளமுள்ளவை.

வெற்றியுடன் சேனை முன்னேறி வந்தபொழுது படை வரிசைகளுக்குப்பின் இந்திய இஞ்சினியர்களும், பயோனியர்களும் மெர்ஸாமாத்ருவிலிருந்து, டோப்ருக் வரையில் இருப்புப் பாதையை அமைத்து வந்தார்கள். ஒரு சமயத்தில் இந்தியாவிலிருந்துதான் ரெயில்வே தளவாடங்களும், இஞ்சின்களும், வண்டிகளும், ஸ்லீபர்களும, வாகன்களும் மற்ற முற்போக்குகளும் அனுப்பப்பட்டன. இந்த இருப்புப்பாதை அச்சு நாட்டாரின் கப்பல் படையினுடையவும், விமான தளங்களுடையவும் கண் திருஷ்டிக்குட்பட்டு லிபியாவின் உப்பல் ஸ்தலத்திலிருந்தது என்பது பிரிடிஷ் கடற்படையினுடையவும், பிரிடிஷ் விமானப்படையினுடையவும் தன்னம்பிக்கையை வெளிப்படுத்துகிறது.

ரெயில்வே ஸ்லீபர்களுக்கும், கப்பற்துறைகளுக்கும், லாரிகளுக்கும், வாகனங்களுக்கும், பாக்கிங் சாமான்களுக்கும், வெடிமருந்துவைக்கும பெட்டிகளுக்கும், தந்திக் கம்பங்களுக்கும், மற்றும் ஏராளமான உபயோகங்களுக்கும் தேவையான மரம் இந்தியாவிலிருந்து வந்தது. இந்தியா மத்திய கிழக்கு பிரதேசத்திற்குத் தேவையான எல்லா சாமான்களையும் அனுப்பியதென்று மதிப்பிடப்படுகிறது.

### புதிய தொழிற்சாலைகளின் பங்கு.

இந்த கப்பல் கட்டும் தளங்களிலிருந்து அநேக தாக்கும் படகுகள், தானாகச் செல்லும் படகுகள் அனுப்பப்பட்டன. இவைகள் வடக்கு ஆபிரிக்கா கடற்கரை ஓரமாக உள்ள நமது படைகளுக்கு ஆகாரங்களை அளிப்பதிலும், எதிரி ஆக்கிரமித்திருந்த கிராமங்களைத் தாக்குவதிலும் முக்கியமான பங்கெடுத்துக்கொண்டன.

கடல் தாண்டியுள்ள சேனைகளுக்கு அவசியமான அநேக தேவைகளைப் பூர்த்தி செய்ய இந்திய உற்பத்தியாளர்கள் தொழிற்சாலைகளை எவ்விதம் அபிவிருத்தி செய்தார்கள் என்பதைப்பற்றி விரிவாக எழுதலாம். உற்பத்திகள் பின்வருபவை. மின்சார விசிறிகள், தண்ணீர் வால்வுகளும், குழாய்களும், இந்தியாவின் சுயத்தொழிற்சாலைகள் முதல் முதலாக போர்ஸிலேன் கிளிட்டுகளையும், இன்ஸுலேடர்களையும், ப்யூஸ் இருப்பிடங்களையும் தயார் செய்தன. அதேபோல் இந்தியா ஜவ்வை உற்பத்தி செய்து பேகலைட் விளக்குப்பிடிகளையும், மேல்கூரை விளக்குப் பிடிகளையும் செய்யும் புதிய தொழிற் முறையை ஆரம்பித்தது.

### உலர்ந்த பாட்டரிகளும், ஸெல்களும்.

உதவி செய்யும் முறையில் முக்கியமானது உலர்ந்த பாட்டரிகளும், ஸெல்களும்தான் ஆகாயத்திலுள்ள விமானத்துக்கும், தரைக்கும் போய்வரும் தகவல்கள் விமானங்களிலுள்ள பாட்டரிகளின் சக்தியைப் பொருத்தது. பிரிடனிலிருந்து நன்னம்பிக்கை முனையைச் சுற்றி மத்திய கிழக்குக்குக் கப்பலில் வரும்பொழுது பாட்டரிகள் கெட்டுப்போய்விட்டன.

பிரிடிஷ் விமானப்படைக்குத் தேவையான பாட்டரிகளைத் தயாரிக்க ஏற்பாடுகள் 1941-ம் வருஷம் பிற்பாதியில் இந்தியாவில் ஆரம்பிக்கப்பட்டன. அதன்பின் இந்தியா லெட்சக் கணக்கான ஸெல்களைப் பிரிடிஷ் விமானப்படைக்கு மட்டும் அனுப்பியிருக்கிறது. மற்ற சேவைப் படைகளுக்கு அனுப்பிய ஸெல்களையும் சேர்த்துவிட்டால் புள்ளி விபரங்கள் எண்ணிக்கையற்றதாக இருக்கும்.

### வலைகளும், கூடாரங்களும்.

எல் அலாமீன் யுத்தம் பெரும்பாலும் மறைமுகப்படுத்தியதினால்தான் வெற்றிகரமாக முடிந்ததென்று சொல்லப்படுகிறது. இந்தியாவிலிருந்து ஏராளமான மறைமுகப்படுத்தும் வர்ணங்களும், வலைகளும், சணலும் அனுப்பப்பட்டன. அவைகளைப் பிரித்துவிட்டால் அவைகள் உலகத்தில் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்குப் பரவும்.

இந்த வலைகள் இந்தியாவின் மின்சார சக்தியுள்ள ஆலைகளில் உற்பத்தி செய்யப்படவில்லை. இவைகள் ஆயிரக்கணக்காக கிராமங்களிலும், இந்தியாவின் ஒதுக்குப்புறமான கிராமங்களிலும் தயாரிக்கப்படுகின்றன. அவைகள் துருப்புக்குவியல்களை மறைப்பதற்கும், முக்கியமான பீரங்கிகளை மறைப்பதற்கும் உபயோகமுள்ளவை. எரிட்ரியா போரில் வெற்றிகரமாக உபயோகப்பட்ட ஒரு விதமான பீரங்கியை இந்தியா தயாரித்துக் கொடுத்தது. இந்த பீரங்கிக்கு வேண்டிய குண்டுகளையும், பரிபாலனையையும் இந்தியா பொறுப்பேற்றுக் கொண்டது.

துருப்புகளை மத்தியரேகைப் பிரதேசத்திலுள்ள உஷ்ணத்திலிருந்து காப்பாற்றிய கூடாரங்களில் 90 சத விகிதமும்; டாங்கிகளிலும், விமானங்களிலும், மோட்டார்களிலும் மணல் புகுந்து கொள்ளாதபடி செய்த ரெட்டுகளும், ஷீட்டுகளும் இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்டன. இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்ட கூடாரங்கள் மத்திய கிழக்கிலிருந்த பல விதமான கூடாரங்களுக்குப் பதிலாக உபயோகிக்கப்பட்டன. துருப்புகள் இந்தியாவில் தயாரிக்கப்பட்ட ஆடைகளையும், இந்தியத் தொழிற்சாலைகளிலிருந்து அனுப்பப்பட்ட ஜோடுகளையும் உபயோகித்தன. அவர்கள் சாப்பிடும் உணவின் பெரும்பாகமும் இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்டது தான். யுத்தத்துக்குப் பின் அபிவிருத்தியடைந்தவைகளில் ஒன்றான சாஸ்திர முறைப்படி வற்றல் போடுவதன் மூலம் இந்தியா 40,000 டன்கள் சாமான்களை அனுப்பியிருக்கிறது.

### மருந்துகள்.

துருப்புகளுக்கு வேண்டிய மருந்துகள், முஸ்தீப்புகள், வசதிகள் முதலியவற்றில் இந்தியா 50,000 டோலிகளையும், 1 மிலியன் போர்வைகளையும், 2,50,000 கொசுவலைகளையும், 15,00,000 மாத்திரைகளையும், 160 டன்கள் கொசுவை அழிக்கும் வெண்ணெயையும், 3,36,000 அவுன்ஸ்கள் ஆமணக்கு எண்ணெயையும் அனுப்பியிருக்கிறது. 1,500 பலரக மருந்துகள் சப்ளை செய்யப்பட்டன. காயம் கட்டும் துணிகளில் 2½ அங்குல அகலமுள்ள 12,50,000 உருப்

படிகளும் அனுப்பப்பட்டன. இதுதான் போர்முனையிலுள்ள ஸோல்ஜருக்குச் காயம் பட்ட உடன் முதல் சிகிச்சைக்கு உதவக்கூடியது. அது 2,000 மைல்கள் நீளம் இருக்கும்.

### ருஷ்யாவுக்கு நேர்முகமாக இல்லாத உதவி.

இந்தியாவின் பேருதவியினால் ஏற்பட்ட முக்கியமான லாபம் யாதெனில் பிரிடனுக்கு ஏராளமான கப்பல்கள் மீதப்படுத்தப்பட்டன, சாமான்களை பிரிடனிலிருந்து அனுப்புவதாக இருந்தால் அநேக கப்பல்கள் தேவைப்பட்டிருக்கும். மற்றப் போர்முனைகளிலிருந்து ருஷ்யாவுக்கு சாமான்களை அனுப்பக் கப்பல்கள் கிடைத்திருக்குமா என்பது சந்தேகம். இந்தியாவிலிருந்து குறுகிய மார்க்கத்தின் வழியாக இந்தியா 15,00,000 டன்கள் சாமான்களை அனுப்பியிருக்கிறது. அதாவது ருஷ்யாவுக்கு அனுப்ப அவ்வளவு கப்பல்கள் மீதப்பட்டனவென்று சொல்லலாம்.

ஸப்ளைகளை பத்திரமாகக் கப்பல்களில் கொண்டுபோவதும், அவைகளை வழங்குவதும் இந்தியாவின் துணைக்காவல் கப்பல்களைப் பொருத்தது. பாரஸீக வளைகுடாவிலும், வடக்கு ஆபிரிக்கத் துறைமுகங்களிலும் இந்தியா அனுப்பிய ஏராளமான தளவாடங்களும், தொழிலாளர்களும், கைத்தொழில் நிபுணர்களின் கண்காணிப்பும், எகிப்திலும், இராக்கிலும் உள்ள துறைமுக வசதிகளை விஸதாரம் செய்தது. போரில் இறுதி கட்டங்களில் இந்தத் துறைமுகங்கள் வழியாக ஏராளமான சர்ப்பராக்கள் அனுப்பப்பட்டன. முக்கியமான கிழக்கு நாடுகளின் கோஷ்டியிலிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் ஏராளமான சாமான்கள் வந்தன.

வட ஆபிரிக்கப் போரின்பொழுது அநேகம் தடவைகளில், பிரிடனிலிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் வந்த சாமான் கப்பல்கள் வழியில் மூழ்கடிக்கப்பட்ட பொழுது இந்தியாதான் சாமான்களை அனுப்பியது. ஒரு சமயத்தில் இந்தியாவிலிருந்து 7,000 டனகள் எஃகுத் தகடுகள், டாங்கி எதிர்ப்பு சுரங்க வெடிகளைத் தயார் செய்ய மத்திய கிழக்குக்கு அனுப்பப்பட்டன. அவைகள் இங்கிலாந்திலிருந்து அபாயத்துக்குட்படாமல் வரக்கூடவில்லை. அந்தத் தகடுகளைக் கொண்டு உபயோகமுள்ள ஏராளமான சுரங்கவெடி ஸ்தலங்கள் தயாரிக்கப்பட்டன.

### இரான் வழியாக ஸப்ளைகள்.

3,000 மைல்கள் நீளமுள்ள ரஸ்தா மூலம் தகிக்கும் பாலைவனங்கள், பொட்டல்கள் வழியாகவும், 7,000 அடி உயரமுள்ள மலைக்கணவாய்கள் மூலமும் ஆயிரக்கணக்கான வாஹனங்கள் நாள் பூராவும் ருஷ்யாவுக்கு ஸப்ளைகளை இரான் வழியாகக் கொண்டு போயிருக்கின்றன. நேசதேச ராணுவ அதிகாரிகளுடனும், முஸ்தீப்புகளுடனும் கூடிய, ஏராளமான மோட்டார் லாரிகளை பிரிடிஷ், அமெரிக்க, இந்திய, ருஷ்ய ஓட்டிகள் ஓட்டிச் சென்றுர்கள். பிரயாணம் மிகவும் கடுமையான சீதோஷ்ண ஸ்திதியில் செய்யப்பட்டது. மாரிகாலத்தில் பூஜ்யத்திற்கு 50, 60 டிகிரி கீழே குளிர் இருந்தது. வசந்தகாலத்தில் மழை வீழ்ச்சிகளும் வெள்ளப் பெருக்கும ஏற்பட்டது.

ஸப்ளைகள் இரான் வழியாக காஸ்பியன் கடலுக்கு அனுப்பப்பட்டன. அமெரிக்காவிலிருந்து ருஷ்யாவுக்கு வரும் சாமானும இந்த மார்க்கமாகத் தான் செல்லவேண்டும். 1941-ம் வருஷம் வேனிர்காலத்திற்குப்பின துறைமுகஙகளும், சாமான் கிட்டங்கிகளும், இருப்புப் பாதைகளும், மோட்டார் ரஸ்தாக்களும் அமைக்கப்பட்டன அல்லது விஸ்தாரம் செய்யப்பட்டன. இவ்விதமாக துளியாக இருந்த சாமான்கள் பெரும் வெள்ளமாகிவிட்டன.

துறைமுக பழுது பார்க்கும் சாதனங்களை விஸ்தாரப்படுத்த இந்தியாவிலிருந்து ஏராளமான தளவாடங்களும், தொழிலாளர்களும் கைத்தொழில் கண்காணிப்புச் செய்கிறவர்களும், அனுப்பப்பட்டிருக்கிறுர்கள்.

1944-ம் வருஷம் முதல் 6 மாதங்களில் இந்தியாவிலிருந்து ருஷ்யாவுக்கு 5,000 டன்கள் முக்கிய யுத்த தளவாடங்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. ருஷ்யாவுக்கு, கோணிப்பைகளும், பொடாசா ரெட்டும், சணல்கயிறுகளும், தேயிலையும், மிளகும், தகரமும், உல்ப்ராமும், பட்டும், ஷெல்லாக்கும், தோல்களும் அனுப்பப்பட்டிருக்கின்றன. மேலும் 80,000 சத்ர ஆயுதங்களும் அனுப்பப்பட்டிருக்கின்றன. 1,000 டன்கள் நிக்கலும், 1,000 டன்கள் நூலும் ருஷ்யாவுக்கு சரியான காலத்தில் போய்ச்சேர்ந்தன.

### மற்ற மத்திய கிழக்கு நாடுகள்.

வட ஆபிரிக்கப் போருக்கும், ருஷ்யாவுக்கும் சாமான்களை அனுப்பியதுடன், இந்தியாவின் உதவி நின்றுவிடவில்லை. மற்ற மத்திய கிழக்கு நாடுகளுக்கும் இந்தியா நீருதியாக சாமான்

களை அனுப்பி வந்தது. எகிப்துக்கு டெலிபோன்லைன் மூஸ்தீப்புகளும், படுக்கை அமைப்புகளும், எஃகுக் குடிசைகளும், ஆணிகள், கம்பிகள், டெலிபோன் சாமான்கள், எஃகு ஜாயிண்ட்கள், எஃகுத் தகடுகளும் ஆங்கிள்களும், ஆணிகள், காங்கிரிட் கம்பிகள், எஃகு டாங்கிகள், ரஸ்தா ரிபேர் செய்யும் யந்திரங்கள், மெதுவான மரம், மூலாம் பூசிய எஃகுக் கம்பிகள், மின்சார விசிறிகள், ரஸ்தாவை அமைக்கும் சாதனங்கள் முதலியவைகள்.

தெற்கு ஆபிரிக்காவுக்கு பொத்தான்களும், வளையங்களும், பருத்தித் துணிகளும், பைகளும் அனுபபப்பட்டன. மாரிஷஸுக்கு கந்தகிகா அமிலம் அனுப்பப்பட்டது. தங்கனிக்காவிலுள்ள ரெயில்வேக்களுக்கு பிரஷ்ஷுகளும், வேலைக்காரர்களுக்கு ஆடைகளும் அனுப்பப்பட்டன. இராக்குக்கு வண்டிகளும் உதிரி பாகங்களும் அனுப்பப்பட்டன. துணி மணிகள், வர்ண சாமான்கள், சணல் அமைத்த தோல், தோல் சாமான்கள் கெனியாவுக்கும், உகாண்டாவுக்கும் அனுப்பப்பட்டன. தகடுகள் பாலஸ்தீனத்துக்கு அனுப்பப்பட்டன.

இந்தியா பிரிடனுக்கு கிழ்கண்ட சாமான்களை அனுப்பிற்று: துணி மணிகள், பருத்தி, சணல் சேர்ந்த ரெட்டு, பருத்தி ரெட்டு, நூல், லேனேத்துணி, டோஸ்ஸா சணல் ரெட்டு, பருத்திப் பைகள், ஜோடுகள், பிஸ்கோத்துகள், ஸிரப், கொசுவலை, தேங்காய் ஓடுகள் முதலியவைகள்.

---

# இந்தியாவின் பொதுஜன தொழிற்சாலைகள் யுத்தத்தேவைகளைப் பூர்த்தி செய்தன.

## நேசதேசப் படைகளுக்கு சர்ப்பராக்களை அனுப்ப எல்லா வகைகளிலும் அபிவிருத்தி.

### ஆறு வருஷ யுத்த விமர்சனம்.

பிரான்ஸ் வீழ்ச்சி பெற்றபின் உள்நாட்டு தற்காப்பிற்கும், எகிப்திலுள்ள படைகளுக்கு உதவியளிப்பதற்கும், மனிதபலத்தையும், தளவாடங்களையும் அனுப்பும் பொருப்பு சூயஸ் கால்வாயுக்குக் கிழக்கிலுள்ள சாம்ராஜ்ய நாடுகளுக்கு ஏற்பட்டது. கிழக்கு வட்டார நாடுகளின் மகாநாட்டின் ஒப்பந்தப்படி கிழக்கு நாடுகளின் ஆயுதக் களஞ்சியமாக இருக்கும் பொருப்பை இந்தியா ஏற்றுக்கொள்ளவேண்டியதாயிற்று.

இந்த அம்சம் இந்தியாவின் தொழிற்சாலை அபிவிருத்திக்கு உற்சாகம் அளித்தபோதிலும் அது இறக்குமதியைக் குறைக்கவும் உபயோகப்பட்டது. மற்ற நாடுகள் யுத்த உற்பத்தியில் ஈடுபடாதபடியும் இந்தியா செய்தது. மேல் அங்கி முதல் கப்பல்கள், பொத்தான்கள் முதல் பாலங்கள், மூக்குக்கண்ணுடி முதல் பீரங்கிகள்—முதலிய தற்காப்புக்குத் தேவையான சாமான்களை இந்தியா தனக்குமட்டுமல்லாமல், கிழக்கு வட்டாரத்தைச் சேர்ந்த நாடுகளுக்கும் உற்பத்திசெய்ய ஆரம்பித்தது.

எல்லாப் போர்முனைகளிலுள்ள சேனைகளுக்கும் ஆடையும், மூஸ்தீப்புகளும், கவசங்களும் தேவைப்படும். உஷ்ணப் பிரதேசங்களிலுள்ள நாடுகளில் பருத்தி ஆடைகளும், மூஸ்தீப்புகளும் தேவைப்படும். ஸப்ளைகளைமூட மெழுகுசீலைகளும், வாசத்திற்கும் ஆஸ்பத்திரிக்கும் கூடாரங்களும் தேவைப்படும். துருப்புகளுக்குக் கொசுவலையைத் தயாரிக்க பருத்தி அவசியப்படும். வெடிகுண்டுகளை ஏற்றிச் செல்லும் நாடாக்களையும், துப்பாக்கிவைக்க தோல்செயின்களை செய்வதற்கும், விமானங்களுக்கும், மோட்டார்களுக்கும் பருத்தி தேவைப்படும். பருத்தியினால்தான் தீப்பிடிக்காத டாங்கிகளும் செய்யப்படவேண்டும்.

ஆகையால் தற்காப்புக் படைகளுக்கான மிலியன்கள் கணக்கான கெஜமுள்ள துணிகளை இந்திய நெசவாலைகள் தயாரித்துக் கொடுக்கவேண்டியதாயிற்று. ஆலைகளும், கைத்தறிகளுமாக ஒரு வருஷத்தில் அநேக ஆயிரம் மிலியன்கள் கெஜங்கள் துணிகளை தயாரித்தன. இந்த உற்பத்தியைக்கொண்டுதான் இந்தியா அதனுடைய யுத்தகாலத் தேவைகளைப் பூர்த்திசெய்து கொண்டு கிழக்கு வட்டாரத்திலுள்ள மற்ற நாடுகளுக்கும் ஏராளமானவற்றை சப்ளை செய்யக்கூடியதாக இருந்தது. ஆலைகள் மூலமாகவும், கைத்தறி மூலமாகவும் 138 ரக பருத்தித்துணிகள் தயாரிக்கப்பட்டன 1942-ம் வருஷம் முடிய கவர்ன்மெண்டின் தேவை இந்தியாவின் உற்பத்தியில் 20 சத விகிதமாக இருந்தது. ஒரு வருஷத்திற்குப்பின் அது 35 சத விகிதத்திற்கு அதிகரித்து விட்டது.

## சேனைக்குக் கூடாரங்கள்.

தொழிற்சாலைகள் விஷவாயுவைத் தடுக்கக்கூடிய துணிகளைத் தயார் செய்தன. முக்கியமான உற்பத்தி கூடாரங்கள்தான். 1940-ம் வருஷத்தில் புதிய உற்பத்தி ஸ்தானங்களில் தயாரிக்கப்பட்டன. இப்பொழுது 53 சாலைகளிருக்கின்றன. கூடார ஸப்ளை சம்பந்தப்பட்ட மட்டில் இந்தியா, சாம்ராஜ்ஜிய நாடுகளில் ஒப்பற்ற ஸ்தானத்தை வகித்தது. ஆஸ்திரேலியாவிலும், தெற்கு ஆபிரிக்காவிலும் சிறிய அளவுதான் ரெட்டு கூடாரங்கள் தயாரிக்கப்பட்டன. ஆகிலும் கிழக்கு வட்டார நாடுகளுக்கும், மத்திய கிழக்கு, தூரக்கிழக்கு நாடுகளுக்கும் இந்தியாதான் ஏராளமான கூடாரங்களை சப்ளை செய்தது.

1939—40-ம் வருஷத்தில் 1 கோடி ரூபாய் பொருமானமுள்ள கூடாரங்களும், 1940—41-ல் ஏறக்குறைய 8·3 கோடி ரூபாய்கள் பொருமானமுள்ளவைகளும, 1941—42-ல் 13 கோடி ரூபாய்கள் பொருமான முள்ளவைகளும் தயாரிக்கப்பட்டன. 1942—43-ல் 16 கோடி ரூபாய் பொருமானமுள்ள கூடாரங்கள அனுப்பப்பட்டன. தையல்காரர்கள், மொச்சிகள், கயிறு செய்கிறவர்கள், சூபர்வைசர்கள் முதலிய வேலையாட்கள் உள்பட 50,000 தொழிலாளர்கள் அதில் ஈடுபட்டார்கள்.

ரோமநெசவுகளில் உள்ள ஆலை, கைத்தறிப்பொருள்கள் எல்லாம் யுத்த அவசியத்துக்காக எடுத்துக்கொள்ளப்பட்டன. போர்வைகள், கம்பளிகள், சல்லடங்கள் முதலிய தயாரிக்கப்பட்டன. 1943-ம் வருஷம் ஜூன் மாதத்தில் கைத்தறிகள் மூலம் 2 மிலியன் போர்வைகள் தயாரிக்கப்பட்டன.

ஏராளமான தொப்பிகளும் தயாரிக்கப்பட்டு இந்தியாவிலும், கடல் தாண்டியிருக்கும் திருப்புகளுக்கும் வழங்கப்பட்டன. மற்ரெரு முக்கியமான சாமான் யாதெனில், மறைமுகப்படுத்தும் வலைகள். இவைகள் சணல் துணியின் துணுக்குகளால் அநேக வர்ணங்கள் தோய்த்து தயாரிக்கப்பட்டன.

## குடைகள் ஏழு மடங்கு அதிகமாக உற்பத்தி.

1944-ம் வருஷத்தில் குடைகளும், சாமான்களைப்போடும் குடைகளும் ஏழு மடங்கு அதிகமாக உற்பத்தி செய்யப்பட்டன. பருத்தியினுல் செய்யப்பட்ட குடைகளை உற்பத்தி செய்வதில் அதிக முன்னேற்ற மேற்பட்டது. ஆரம்பத்திலிருந்து 1943-ம் வருஷம் டிசம்பர் மாதம் வரையிலுள்ள உற்பத்தியைவிட 1944-ம் வருஷம் ஜனவரி மாதம் முதல் ஆகஸ்டு மாதம் வரையில் செய்யப்பட்ட உற்பத்தி மூன்று மடங்குக்குமேல் அதிகமானது. பட்டால் செய்யப்பட்ட மூஸ்தீப்புகளைப்போடும் குடைகளும் உற்பத்தி செய்யப்பட்டன.

இரண்டு நெசவாலைகள் பஞ்சுக்குடைகளைத் தயாரித்தன. மற்ருென்று மனிதன் இறங்கும், மூஸ்தீப்புகளையும் போடும் குடைகளைத் தயார் செய்தது.

## ஆடைகள், மரம் சப்ளை.

1943-ம் வருஷத்தில்தான் ஏராளமான ஆடைகள் தயாரித்து அனுப்பப்பட்டன. மத்திய கிழக்கிலுள்ள சேனைகளுக்கு இந்தியாதான் சமீபத்திலுள்ள சப்ளை தளம். 1943-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் 12 மிலியனுக்கு மேற்பட்ட ஆடைகள் தயாரிக்கப்பட்டன. ஐந்தாம் வருஷ யுத்தத்தில் ராணுவ ஆடை உற்பத்தி சாலைகள் மாதா மாதம் ஏழு மிலியன் ஐட்டம்களைத் தயார் செய்து கொடுத்தன.

உடுப்புகளையும், மற்ற அவசியமான ஆடைகளையும் தயார் செய்வதில் எட்டு தொழிற்சாலைகள் ஈடுபட்டன. அவைகளில் 90,000 தொழிலாளர்கள் வேலை செய்தார்கள். இதைத் தவிர இந்தியா பூராவிலும் அநேகர்கள் தையல் வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். யுத்தத்தின் ஐந்தாவது வருஷத்தில் 215 மிலியன் கெஜம் துணிகளையும், 5,600 மிலியன் கஜ நூல்களையும், 500 மிலியன் பொத்தான்களையும், மற்ற தளவாடங்களையும் உபயோகித்து 78,9,41,597 தைத்த ஆடைகளை தயார் செய்திருக்கிருர்கள்.

இந்தியாவிலிருந்து அனுப்பப்பட்ட மரங்கள் மோட்டார்களுக்கு கூட்டை அமைக்கவும், கப்பல் கட்டுவதற்கும், படகுகளை கட்டுவதற்கும் உபயோகப்படுத்தப்பட்டன.

கடல் தாண்டியும், இந்தியாவிலுமுள்ள திருப்புகளுக்கும், யுத்தக்கைதிகளுடைய முகாம்களிலும் குடிசைகளை அமைக்க இந்திய மரம் சப்ளை செய்யப்பட்டது. மற்றும் அனுப்பப்

பட்ட மர சாமான்கள் பின்வருமாறு :— தந்தி மரங்கள், ரெயில்வே ஸ்லீபர்கள், கப்பல் துறை மரங்கள், மூங்கில்கள், கூடார தூண்கள், முகாம் சாமான்கள், முஸ்தீப்புகள், வெடிமருந்துப் பெட்டிகள், பாட்டரிப்பெட்டிகள். மரசப்ளை பின்வருமாறு :—

| | | |
|---|---|---|
| 1940—1941 | ... | ... 2,42,000 டன்கள். |
| 1941—1942 | ... | ... 7,53,000 டன்கள். |
| 1942—1943 | ... | ... 8,63,000 டன்கள். |
| 1943—1944 | ... | ... 12,74,000 டன்கள். |

விமானத்துக்குரிய பலரக மொரும்புகள் முக்கியமாக பிர்மரம், ஸ்புருஸ்மரம் இந்தியாவில் அநேக பாகங்களிலிருந்து அனுப்பப்பட்டது.

பிளைவுட் என்னும் மரம் தேயிலை பீரோக்களுக்கும், கப்பல் கட்டுவதற்கும், விமானங்களுக்கும், இன்னும் அநேக தொழிற்சாலை காரியங்களுக்கும் தேவைப்பட்டது. அநேக தொழிற்சாலைகள் ஸ்தாபிக்கப்பட்டன. இந்தியா இப்பொழுது 60 மிலியன் சதுரஅடி கொண்ட பிளைவுட்டை தயார் செய்கிறது. விமான, கடற்படைக்குரியவைகளும் அபிவிருத்தி செய்யப்பட்டிருக்கின்றன.

மோட்டார்களுக்குக் கூடுகள், விசேஷமாக கவசம்பூண்ட கார்களுக்கும், சாமான் வண்டிகளுக்கும், பீரங்கி இழுத்துச்செல்லும் வண்டிகளுக்கும் லாயக்குள்ள மரம், எஃகினால் செய்யப்பட்ட கூடுகள், ஆயிரக்கணக்காக இந்தியாவில் உற்பத்தி செய்யப்பட்டன. 1941-ம் வருஷத்தில் முதல்முதலில் இந்தியாவில் கவசம்பூண்ட வண்டி தயாரிக்கப்பட்டது. ஐந்தாவது வருஷ யுத்தத்தில் சேனைக்கும், விமானப் படைக்கும் தயாரித்து அனுப்பிய கூடுகள் நான்கு வருஷ மொத்த உற்பத்திக்கு சமானமானவை.

1944—1945-ம் வருஷத்தில் கனடாவிலிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் வந்த வாகனங்களின் சாமான்களைப் பூட்டுவது யுத்தத்துக்கு முன்னிருந்ததைவிட 10 மடங்கு அதிகரித்தது. ஒரு மாதத்தில் 1,000 வண்டிகள் சேர்க்கப்பட்டன. அமெரிககப் படைக்காக ஏராளமான வண்டிகளும் தயாரிக்கப்பட்டன. யுத்தத்துக்குமுன் 5,000 கவசம்பூண்ட வண்டிகள் இருந்தன. 1943-ம் வருஷமுடிவில் அவைகள் ஒரு லக்ஷத்துக்கு அதிகரித்தன. கடன் குத்தகை திட்டப்படி கனடாவிலிருந்தும், அமெரிக்காவிலிருந்தும் ஏராளமான வண்டிகள் வந்து இந்தியர்களால் பூட்டப்பட்டிருக்கின்றன. அவைகளுக்கான கூடுகள் இந்தியாவிலேயே தயார் செய்யப்பட்டன.

புகைக்கூண்டுகளைத் தயாரிப்பதற்காக ஹைட்ரஜன் வாயுவை உண்டாக்கும் தொழிற்சாலைகள் இப்போது இந்தியாவில் இருக்கின்றன. 1914—1945-ல் உட்கொள்ளுவதற்காக பிராணவாயு உற்பத்தி தொழிற்சாலைகள் அபிவிருத்தி செய்யப்பட்டன. தற்காப்புப் படைகளுக்கு அவசியமான எண்ணெய்யும், கரியையும் தயார்செய்ய சுத்திசெய்யும் சாலைகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

### ரசாயனங்களும், மருந்துகளும்.

யுத்த ஆரம்பத்திற்குப்பின் உற்பத்தி நூறு சதவிகிதம் அதிகரித்திருப்பதுபோல், இந்தியாவின் ரசாயன உற்பத்தியும் வளர்ச்சி பெற்றுவிட்டது. சோடா உப்பு, சோடாகாரம், சுத்தம் செய்யும் தூள், குளோரின், ஸோடியம், பொட்டாஸியம் பைக்ரோமேட், குரோமிக் திராவகம், சோடியம் தியோஸல்பேட், கால்ஸியம் குளோரைட் முதலிய சில முக்கியமான ரசாயனங்கள் இப்பொழுது ஏராளமாக உற்பத்தி செய்யப்படுகின்றன. இவை யுத்தத்துக்கு முன் மிகுதியாக உற்பத்தி செய்யப்படவில்லை. மற்ற வைத்திய மருந்துகளும், ரசாயனங்களும் இறக்குமதி செய்யப்படாமல் இந்தியாவிலேயே தயாரிக்கப்படுகின்றன.

உள்நாட்டுச் சரக்குகளுக்கு அதிகத்தேவை ஏற்பட்டது. இந்தியாவில் மருந்துஉற்பத்தி அபிவிருத்தி செய்யவும், உற்பத்தியை விஸ்தாரம் செய்வதில் தொழிலாளர்களுக்கு ஏற்பட்ட சிரமங்களை நிவர்த்திக்கவும், கவர்ன்மெண்டு நடவடிக்கை எடுத்துக்கொண்டிருக்கிறது. குத்தகைக்கடன் திட்டப்படி அமெரிக்காவிலிருந்து 18 இனங்கள் அடங்கிய மருந்து உற்பத்தி செய்யும் முஸ்தீப்புகள் வரப்பெற்று தொழிற்சாலைகளுக்கு வழங்கப்பட்டிருக்கின்றன. நேசதேசத்தாருக்கு வேண்டிய ஸ்டிரிக்னின், காபெயின், சாண்டோனின் முதலியவற்றை இந்தியா சப்ளை செய்திருக்கிறது. இந்தியாவின் ஸ்டிரிக்னின் உற்பத்தி வருஷத்திற்கு 15,000 ராத்தல். பெனிஸிலின் என்ற மருந்தை உற்பத்தி செய்யவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன.

பல்லடோனு, எபிட்ரா, ஹென்பேயின், காலோஸிந்த், ஜெண்டேயின், வாலரியன், குர்ச்சிபார்க் முதலிய மருந்துகளுக்கும் தேவை அதிகரித்தது. இந்திய எட்டிக்கொட்டையிலிருந்து ஹயோசின் என்ற மருந்து தயாரித்து நேசநாடுகளுக்கு அனுப்பப்பட்டது. ஷார்க் எண்ணெய் உற்பத்தியும் பலமாக அபிவிருத்தி அடைந்துவிட்டது.

ரணவைத்தியத்துக்குரிய உபகரணங்களும் 90 சத விகிதம் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன.

வைத்திய மருந்துகளும் யுத்த ஆரம்பத்தில் 25 சதவிகிதம் இருந்ததிலிருந்து 60 சத விகிதத்துக்கு உயர்ந்துவிட்டது. இதற்குமுன் உற்பத்தி செய்யப்பட்ட 300 மருந்துகள் இப்பொழுது இந்தியாவில் உற்பத்தி செய்யப்படுகின்றன. ஆஸ்பத்திரி சாமான்களும், சத்ர ஆயுதங்களும் இந்தியாவிலேயே தயாரிக்கப்படுகின்றன. 1943-ம் வருஷம் ஜூன்மாதம் வரையில் இந்தியா ருஷ்யாவுக்கு 80,000 வைத்திய ஆயுதங்களைச் சப்ளை செய்திருக்கிறது. 1943-ம் வருஷத்தில் சத்ர மேஜைமுதல் ஊசி வரையில் 20,000 சாமான்கள் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன.

உயர்தர சத்ர ஆயுதங்களை உண்டுபண்ண புதிய தொழிற்சாலைகள் ஸ்தாபிக்கப்பட்டன. ஐந்தாம் வருஷ யுத்தத்தில் 2,85,000 ஆயுதங்கள் உற்பத்தி செய்யப்பட்டன.

### ரப்பரும், தோலும்.

ரப்பர் குறைவை சமாளிக்க இந்தியா ரப்பரையும், டயர்களையும் சேமித்து வைத்ததுடன் ரப்பர் உற்பத்தியையும் தூண்டுதல் செய்து ரப்பரைச் சேர்ப்பதற்கு தொழிற்சாலைகளையும் அமைத்தது. யுத்த முயற்சிக்கும் ரப்பரை சப்ளை செய்ய இந்தியா ஏற்றுக்கொண்டது. டயர்கள், டியூபுகள், குழாய்கள் முதலியவற்றை உற்பத்தி செய்ய புதிய சாலைகள் அமைக்கப்பட்டன. ஜோடுகளையும், அதுபோன்ற மற்ற சாமான்களையும் உற்பத்தி செய்து வந்த தொழிற்சாலைகள் யுத்த தளவாட உற்பத்தியில் ஈடுபட்டன. அதன்பயனாக இந்தியா ரப்பர் உற்பத்தியில் பிறரை நம்பாத போதுமான சக்தியை அடைந்துவிட்டது.

நிர்வாகத்தைச் சேர்ந்த சேணம் உற்பத்திசெய்யும் தொழிற்சாலையில் 2,000 பேர்களுக்கு பதிலாக 18,000 பேர்கள் வேலைசெய்து வருகிறார்கள். அதற்கு உதவியாக ஐந்து கிளை ஸ்தாபனங்கள் இருக்கின்றன. அவை 25,000 மனிதர்களைக்கொண்டும் 700 கண்ட்ராக்டர்களைக் கொண்டும் வேலையைச் செய்துவருகின்றன. சமீப காலத்தில் சில முஸ்தீப்புகளுக்கு தேவை குறைந்தபோதிலும் இந்த தொழிற்சாலைகளின் உற்பத்தி வருஷத்துக்கு 15 முதல் 20 கோடி ரூபாய் பொருமானமுள்ளது. இந்த உற்பத்தி உள்நாட்டு ஆதாரங்களிலிருந்து செய்யப்படுகிறது.

தோலைப் பதனிடும் சாலைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. ஜோடுகள் 1941-ம் வருஷத்தில் 7·6 மிலியன்களும், 1942-ல் 16·22 மிலியன்களும், 1943-ல் 13·21 மிலியன்களும், 1944-ல் 6 மிலியன்களும் உற்பத்தி செய்யப்பட்டன. குதிகால், நுனிபாகம் பழுதுபார்க்கும் சாமான்களின் உற்பத்தியும் அதிகரித்தது. பதனிட்ட தோலும், குரோமின் மேல்தோலும் தோல் பதனிடும் சாலைகளிலிருந்து அனுப்பப்பட்டிருக்கின்றன.

இன்னும் பலவகைப்பட்ட சாமான்கள் சப்ளை செய்யப்பட்டிருக்கின்றன. இவைகளில் அநேகம் இந்தியாவில் முதல்முதலில் உற்பத்தி செய்யப்பட்டவை. அவைகளின் பொருமானத்தை அறியவேண்டுமானால் 1940—1941-ல் சாமான்களின் பொருமானம் 71 லக்ஷமாக இருந்தது. அடுத்த வருஷத்தில் 488 லக்ஷமாக அதிகரித்ததே அத்தாக்ஷியாகும். புதிய உற்பத்திகளாவன :—துவிச்சக்கர வண்டிகள், தையல்மிஷின்கள், ஸ்பிரிங் தராசுகள், தீயணைக்கும் கருவிகள், ஸ்பிரிட் விளக்குகள், சிறிய குக்கர்கள், மின்சார பல்புகள், பூட்பாலிஷுகள், கடுகு மிந்திரிக்கொட்டை எண்ணெய், தொப்பிகள், கொழுப்பை வைக்கும் டப்பிகள், க்ஷவரக்கத்திப்பிடிகள், க்ஷவரக்கத்திகள் முதலியவை. மாகாண நிர்வாகங்களும் யுத்த முயற்சிக்காக அநேக கைத்தொழில்களை அபிவிருத்தி செய்திருக்கின்றன. முக்கியமாக, முதலுதவிக்கான டோலிகள், கொம்பு, எலும்புப் பித்தான்கள், சீப்புகள், பூட்டுகள், பாட்லாக்குகள், பித்தளை ஆணிகள்.

### குடிசைத் தொழில்கள்.

கிராமங்களிலும், நாட்டுப் புறங்களிலும் உள்ள குடிசைத்தொழில்களும் யுத்த முயற்சியில் பின்வாங்கவில்லை. இந்தியாவின் பிராசீனமான குடிசைத்தொழில்கள் புத்துயிர் பெற்றன. மிலியன்கள் கணக்கான கஜம் நீளமுள்ள மறைமுகப்படுத்தும் வலைகள் இந்திய கிராம வாசிகளால் தயாரிக்கப்பட்டன. 1941—1942-ல் இந்த வலைகள் 182 லக்ஷம் ரூபாய்கள்

பெருமானமுள்ளவை. அதற்குப் பின்வருஷங்களில் அவைகளுக்கு அதிகப் பொருமானம் ஏற்பட்டது. அவர்கள் செய்த தொப்பிகளை சங்கியையில் கணக்கிடமுடியாது. மைல்கள் கணக்கில்தான் சொல்லவேண்டும். 1941—1942-ல் 43 லக்ஷ ரூபாய் பொருமானமுள்ள தொப்பிகள் சப்ளை செய்யப்பட்டன. அநேக வர்ணமுள்ள துணிகளை நெசவு செய்யும் கைத்தறி நெசவாளர்கள் கூடாரங்களுக்கான துணிகளையும், காஸ் துணிகளையும், மஸ்ரியையும், கொடிகளுக்கான துணிகளையும், மற்றும் ரோம சாமான்களையும் அணிந்துவந்தார்கள்.

1941—1942-ம் வருஷங்களில் சிறிய தொழிற்சாலைகளுக்கு 498 லக்ஷம் ரூபாய் பொருமானமுள்ள சாமான்களை அனுப்பும்படி உத்தரவுகள் வந்தன. 1942—1943-ம் வருஷங்களில் 610 லக்ஷம் ரூபாய் பொருமானமுள்ள சமான்களுக்கு உத்தரவு பின்னும் அனுப்பப்பட்டது.

---

## வெற்றிக்கான ஆயுதங்கள்.

### இந்தியாவின் யுத்த தளவாட உற்பத்தி.

ஐரோப்பாவில் இறுதி வெற்றியுடன் முடிந்த நீண்ட, சிரமசாத்யமான ஆறு வருஷங்களில் இந்தியாவின் ஆயுத உற்பத்திசாலைகளும், பொதுஜன ஒர்க்ஷாப்புகளும் உற்பத்தி முறையில் நேசதேச ஆயுதசாலைகளுடன் சம அந்தஸ்துடன் இருக்கும்படி முயற்சி செய்து வந்திருக்கின்றன.

யுத்த தளவாட உற்பத்திசாலைகள் எதிரி பேரில் கையினாலும், துப்பாக்கியினாலும், சட்டி பீரங்கியினாலும், பீரங்கிகளாலும் போடக்கூடிய தளவாடங்களையும், ஆகாயத்திலிருந்து போடக்கூடிய வெடிகுண்டுகளையும், கப்பல்களின் மேல்தட்டுகளிலிருந்து நீர்மூழ்கிகள் பேரில் போடக்கூடிய வெடிகுண்டுகளையும், அல்லது டாங்கிகளை நொருக்கக்கூடிய சுரங்க வெடிகளையும் தயார் செய்திருக்கின்றன. அவைகள் யந்திர பீரங்கிகளையும், நவீன போர்முனை பீரங்கிகளையும், சுரங்கவெடிகளையும், நீர்மூழ்கிகளை அடிக்கும் குண்டுகளையும் உற்பத்தி செய்திருக்கின்றன. அவைகள் சிறிய ஆயதங்களுக்குரிய வெடிமருந்துகள், பீரங்கிகளுக்குரிய வெடிமருந்துகள், ஷெல்கள், டாங்கி எதிர்ப்பு சுரங்கவெடிகள், ஆளைத்தாக்கும் சுரங்கவெடிகள், புகைப்படலத்தை உண்டுபண்ணும் சாதனங்கள், இரண்டு ரக பீரங்கிகள், பீரங்கி வண்டிகள், இழுப்பு வண்டிகள், லேசான யந்திரங்கள், புரொபெலண்டுகள் முதலியவற்றை உற்பத்தி செய்தன.

பொதுஜன ஒர்க்ஷாப்புகள் இந்த தளவாடங்களுக்குரிய பாகங்களை ஏராளமாகச்செய்து கொடுத்தன. இவைகளுக்கு முற்போக்காக ஒன்று திரட்டப்பட்டு அபிவிருத்தி செய்யப்பட்ட அநேக தொழிற்சாலைகள் தளவாடங்களுக்கு உரித்ததான ஆயிரக்கணக்கான டன்கள் கொண்ட எஃகு, பித்தளை, மற்ற உலோகங்களையும், அவைகளை பரிஷ்காரம் செய்யும் வர்ணங்களையும், வார்னிஷ்களையும் அவைகளை வைக்கும் பெட்டிகளையும், தளவாடங்களில் வைக்கும் நாசம் விளைவிக்கக்கூடிய வெடிமருந்துகளையும் உற்பத்தி செய்தன. யுத்த தளவாட உற்பத்தி முறை எல்லாவகைகளிலும் அபிவிருத்தியுள்ளது, எல்லா தொழிற்களையும் தழுவியது. தொழிற்முறைகளிலுள்ள குறைவுபாடுகளை சரிப்படுத்துவது, தாதுப்பொருள்களையும், வேலைக்காரர்களையும், யந்திரங்களையும் ஈடுபடுத்துவது முதலிய அம்சங்களடங்கியது.

#### குறிப்பிடத்தக்க அதிகரிப்பு.

இந்தியாவின் யுத்த தளவாட உற்பத்தி இரண்டு, மூன்று, நான்கு மடங்காகவும் சில இனங்களில் 30 முதல் 50 மடங்காகவும் அதிகரித்திருக்கிறது. சமீபத்தில் கீழ்க்கண்ட வகைகளில் விசேஷ அதிகரிப்பு எற்பட்டது.

கைத்துப்பாக்கிகள்—யுத்தத்துக்கு முன்னிருந்ததைப்போல் 11 மடங்கு.
சனியன்கள்— ,, ,, 20 மடங்கு.
சிறிய ஆயுதங்கள்— ,, ,, சுமாராக 4 மடங்கு.
பீரங்கிகளும், வண்டிகளும் ,, ,, ,, 20 மடங்கு.
சட்டி பீரங்கிகள்— ,, ,, 35 மடங்கு.
எரிகுண்டுகள், சுரங்க வெடிகள், வெடிகுண்டுகள், அவுட் வாணங்கள் இவைகளின் பெரும்பாகம் யுத்தத்துக்கு முன் இந்தியாவில் செய்யப்படவில்லை.
ஆயுதங்கள்— ,, ,, 50 மடங்கு.

அதிகமாக உற்பத்தி செய்யப்பட்ட யுத்த தளவாட ஸ்டோர்கள் பின்வருமாறு. 6 ராத்தல் குண்டைப்போடும் பீரங்கி வண்டிகள், லேசான இயந்திர பீரங்கிகளுக்கு முக்காலிகள், விமான எதிர்ப்பு பீரங்கிகளை அமைக்கும் இருப்பிடங்கள், தூரதிருஷ்டிக் கண்ணாடிகள், கனதா தரிசகங்கள், கிளினோ மீடர்கள், தூரதர்சன இயந்திரங்கள்.

### யுத்தத்துக்கு முன்.

யுத்தத்துக்கு முன் இந்தியாவில் வெடிமருந்து உற்பத்திசாலை என்ற ஒரு சில ஆயுத உற்பத்திசாலைகள்தான் இருந்தன. அவைகள் சேனைகளுக்கு அத்தியாவசியமான அநேக சாமான்களை உற்பத்தி செய்தன. யுத்த தந்திரத்தில் மாறுதல் ஏற்பட்டதினால் அவைகளும் உற்பத்தியின் தன்மையை மாறுதல் செய்து கொள்ளவேண்டியதாயிற்று. யுத்த தளவாட உற்பத்தி சாலைகள் பிரான்ஸ் வீழ்ச்சிபெற்று, இரக்கமற்ற நல்ல முஸ்தீப்புகளுள்ள எதிரியைத் தாக்க சாம்ராஜ்ய நாடுகள் தன்னந்தனியே நின்று போரை நடத்தும்படி ஏற்பட்டவரையில் மகத்தான முறையில் அபிவிருத்தி செய்யவில்லை. இடைவிடாது வெடிகுண்டு வீசுக்குட்பட்ட தொழிற்சாலைகளை உடையதும் அதற்கு முக்கியதேவையான சாமான்களைப்பெற மற்ற நாடுகளின் உதவியை நம்பியிருக்கும்படி ஏற்பட்ட பிரிடனை இந்தியா இனிமேல் நம்பியிருக்க முடியாது. யுத்தத்தின் ஆரம்ப வருஷங்களில் ஏற்பட்ட கடற்படை சிரமங்களும், இந்திய எல்லைச்சரகத்திற்கு ஜப்பானியர்கள் முன்னேறியதும் இந்தியாவின் யுத்த தளவாட உற்பத்தியை அதிகரிக்க திட்டம் போடுவதற்கு தூண்டுதல்செய்த சில காரணங்கள்.

யுத்தம் ஆரம்பிப்பதற்கு முன் சாட்பீல்டு திட்டத்தைக் கையாள ஆரம்பித்தார்கள். இப்பொழுது அது பரிபூரணமாக கையாளப்படுகிறது. நிலைபெற்றிருக்கும் பீரங்கித் தொழிற்சாலைகளை அபிவிருத்தி செய்யவும், நவீன ஆயுதங்களையும், வெடிமருந்துகளையும் உற்பத்தி செய்ய அவசியமான புதூக கருவிகளையும் அமைக்க அந்த திட்டம் போடப்பட்டது. மேலும் உயர்தர வெடிமருந்துகளை உற்பத்தி செய்யும் தொழிற்சாலையையும், டௌலீனை உற்பத்தி செய்யும் இயந்திரத்தையும், கார்டைட் தொழிற்சாலையை அபிவிருத்தி செய்யவும் அதில் திட்டங்கள் இருந்தன. சாட்பீல்டு திட்டத்திற்குப்பிறகு சில புதிய திட்டங்களும் கையாளப்பட்டன. முக்கியமாக மாதம் ஒன்றுக்கு 12 மிலியன் தோட்டாக்களை உற்பத்தி செய்தார்கள். இந்தத் திட்டப்படி கார்டைட் தொழிற்சாலை, உலோக, எஃகு தொழிற்சாலை, வெடிமருந்து தொழிற்சாலைகளின் அபிவிருத்தியும் உத்தேசிக்கப்பட்டிருந்தன.

### ரோஜர் தூது கோஷ்டி.

யுத்தம் ஆரம்பித்தபின் சாட்பீல்டு திட்டத்தில் எதிர்பார்த்தற்கு மேலாக யுத்த தளவாட உற்பத்தியில் இந்தியா அதிக பங்கெடுத்துக்கொள்ளவேண்டும்என்று கருதப்பட்டது. 1940-ம் வருஷத்தில் ஸர் அலெக்ஸாண்டர் ரோஜர் தலைமையில் சர்ப்பரா கோஷ்டி இலாகா பிரிடனிலிருந்து இந்தியாவுக்கு வந்து யுத்த தளவாட உற்பத்தி அபிவிருத்தி சாத்யமா என்று பரிசீலனை செய்தது. பிரிடிஷ் கவர்ன்மெண்டின் தேவைகளை பூர்த்திசெய்ய இந்தியாவின் தளவாட உற்பத்தியை அதிகரிக்க அந்தத் தூது கோஷ்டி அதிலுள்ள நிபுணர்களுடன் ஆலோசனை செய்து இந்திய நிர்வாகம் தயாரித்த 21 புதிய ஸ்தாபனங்களுக்கான திட்டங்களை ஏற்றுக்கொண்டது. உதாரணமாக, பீரங்கிகளுக்கும், சிறிய ஆயுதங்களுக்கும் தேவையான கலப்படை, எஃகுகள், பீரங்கி உருக்குகள், சனியன்கள், லேசான யந்திர பீரங்கிகள், பீரங்கி வண்டிகள், ஷெல்கள், தீ வைக்கும் திரிகள், பிலரமர்கள், உயர்தர வெடிமருந்துகள், கார்டைட், டோலூயின், மோட்டார் பென்சால்.

ஜப்பான் யுத்தத்தில் புகுந்தபின் இடம் பெயர்த்துவைக்கும் திட்டம் அவசியமாயிற்று. அதாவது ஐந்து புதிய பீரங்கித் தொழிற்சாலைகளைக் கட்டவேண்டியதும், கிழக்கு தொகுதி திட்டப்படி தொழிற்சாலைகளில் இரண்டை அபிவிருத்தி செய்வதும் அவசியமாயிற்று. மேலும் தளவாடங்களை உற்பத்திசெய்து அவற்றைப் பரிபாலிக்கும் சக்தியையும் விஸ்தாரப்படுத்தவேண்டிய அநேக புதிய திட்டங்களும் அதில் காணப்பட்டன. பீரங்கித் தொழிற்சாலை அபிவிருத்தி திட்டப்படி அநேக புதிய திட்டங்கள் போடப்பட்டன. அவைகளில் முக்கியமானவை பின் வருமாறு. இறக்குமதி செய்யப்பட்ட பீரங்கிகளை பரிபாலிப்பது, விமான ஆயுதங்களைப் பரிபாலிப்பது, பெட்டிகளை உற்பத்தி செய்வது, உயர்தர ரகமான சுவாசக் கருவிகளை உற்பத்தி செய்வது.

### புறம்போக்கு ஸ்தலங்களில் தொழிற்சாலைகள்.

இன்று யுத்த ஆரம்பத்தில் இருந்ததைவிட மூன்று மடங்கு அதிகமான யுத்த தளவாட உற்பத்திசாலைகள் இந்தியாவில் இருக்கின்றன. புறம்போக்கு ஸ்தலங்கள் இருந்த இடத்தில்

தொழிற்சாலைகள் கட்டப்பட்டிருக்கின்றன. கைத்தொழில் பயிற்சிபெற்ற அநேகர்கள் அங்கு வேலைசெய்து வருகிறார்கள். டோலியூன், அஸிடோன் மற்ற திராவகங்களை உண்டுபண்ணும் சாலைகள் இருக்கின்றன. வெடிஉப்பு, திராவகம், கந்தகிகா அமிலம், கார்டைட் முதலியவற்றை பண்ண தொழிற்சாலைகளும் இருக்கின்றன. இவ்விதமாக உயர்தர வெடி மருந்துகளை உண்டு பண்ணுவதில் தன்னைத்தானே பரிபாலித்துக்கொள்ளும சக்தியை டி. என். டியும்; டி. என். டியையவிட அதிக நுட்பமான காம்பஸிஷன் வெடிமருந்தும் உற்பத்தி செய்யப்படுகின்றன.

இஞ்சினியரிங் சம்பந்தப்பட்ட மட்டில் கலப்படை எஃகுகளை உற்பத்தி செய்வதற்காக ஒரு புதிய எஃகு தொழிற்சாலை உற்பத்தி செய்யப்பட்டு புதிய யந்திரங்கள் அமைக்கப் பட்டன. விமான எதிர்ப்பு பீரங்கிகள் உள்பட பீரங்கிகளை அமைக்க 2,000 டன் எடையுள்ள கொல்லுலை வேலை செய்து வந்தது. புதிய ரக வெடிகுண்டுகளும் கவசத்தை பிளக்கும் டாங்கிகளை எதிர்க்கும் புது ரக வெடிகுண்டுகளும் உற்பத்தி செய்யப்பட்டன. லேசான இயந்திர பீரங்கிகளை உண்டுபண்ணும் ஒரு யந்திரமும் அமைக்கப்பட்டிருக்கிறது. இவைகளுக் காக அமைக்கப்பட்ட எஃகு தொழிற்சாலைகள் நவீன ரகமுள்ள போர்முனை பீரங்கிகளையும், குழாய்களையும், வெடிகுண்டுகளையும் செய்வதற்கான எஃகை தயாரித்துக்கொடுக்கின்றன.

இந்த உற்பத்தி திட்டத்திற்காக புதிய தொழிற்சாலைக் கட்டடங்களை அமைக்க ஆயிரக் கணக்கான டன்களுள்ள எஃகு அமைப்புகள் தயாரிக்கப்பட்டன. தொழிற்சாலைகளுக்குரிய யந்திரங்களும் கருவிகளும் அதற்குத் தேவையான உபகரணங்களும் இறக்குமதி செய்யப் பட்டன.

**புதிய கட்டிடங்களும், தொழிலாளர்களும்.**

புதிதாக அமைக்கப்பட்ட தொழிற்சாலைகளை நடத்த ஜல ஸப்ளை, மின்சார ஸப்ளை, சாக்கடைத் தண்ணீரை அப்புறப்படுத்துவது முதலியவைகளுக்கான பெரிய திட்டங்கள் நிறைவேற்றப்பட்டன. புதிய ரஸ்தாக்களும், இருப்புப்பாதைப் போக்குவரத்துகளும் அமைக்கப்பட்டன. தொழிற்சாலை வேலைக்காரர்களுக்கு குடியிருப்பு வசதிகள் செய்து கொடுக்கப்பட்டன. ஒரு தொழிற்சாலையில் 13,000 உத்தியோகஸ்தர்களுக்கும், 12,000 வேலைக் காரர்களுக்கும், அவர்களின் குடும்பத்தாருக்கும் அதாவது மொத்தமாக 45,000 முதல் 50,000 பேர்களுக்கும் இடவசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது. இந்த ஜனத்தொகை இந்தியாவின் மாகாணங்களிலுள்ள ஒரு நடுத்தர நகரத்திற்கு சமானமானது.

அபிவிருத்தியின் அளவை அறியவேண்டுமானால் யுத்த தளவாட தொழிற்சாலையில் வேலை செய்து வரும் தொழிலாளர்களின் சங்கியையைப்பார்த்தால் போதுமானது. 1939-ம் வருஷத்தில் 15,000 ஆக இருந்த தொகை 1944-ம் வருஷத்தில் லக்ஷமாக அதாவது ஆறு மடங்கு அதிகமாக இருந்தது. இதைத் தவிர ரயில்வே, வியாபார ஓர்க்ஷாப்புகளின் தளவாடங்களுக்கான உறுப்புகளை உற்பத்தி செய்வதில் ஏராளமான சிப்பந்திகளும், தொழி லாளர்களும் ஈடுபட்டிருக்கிறார்கள். தொழிற்சாலை வேலைக்குரிய பயிற்சி திட்டங்கள் ஏற்பாடு செய்யப்பட்டன. அவைகளில் 50,000 வேலைக்காரர்களும், மானேஜர்களும், சூபர் வைஸர்களும், யந்திரத்தை அமைப்பவர்களும், அதிகத் தேர்ச்சிபெற்ற, அரைகுறையாகத் தேர்ச்சிபெற்ற வேலைக்காரர்களும் பயில்விக்கப்பட்டார்கள்.

**ஓர்க்ஷாப்புகள் உதிரி பாகங்களைத் தயார் செய்தன.**

யுத்த தளவாட உற்பத்தி தொழிற்சாலைகளுக்கு ரயில்வே, வியாபார ஓர்க்ஷாப்புகள் உதிரி பாகங்களைச் செய்து அனுப்பி உதவி செய்தன. 4·5 இஞ்சு வாயுள்ள பீரங்கியையும், 25 ராத்தல் உள்ள வெடிகுண்டு குழாய்களையும் ரயில்வே ஓர்க்ஷாப்புகள் செய்தனுப்பின. சாதாரணமாக தளவாட உற்பத்திசாலைகளில் உற்பத்தி செய்யப்படும் இனங்களில் 437-க்குக் குறையாத இனங்கள் வியாபார, ரயில்வே ஓர்க்ஷாப்புகளில் செய்யப்பட்டன. புதிய இனங்கள் வெடிகுண்டுக் குழாய்கள், எரி குண்டுக்குழாய்கள், தீ வைக்கும் சுரங்க வெடிகள், ஏ. பி. குண்டுகள், தீ வைக்கும் திரிகள், சனியன்கள், முதலியவைகள். யுத்த ஆரம்பத்தில் 600 ஓர்க்ஷாப்புகள் இருந்தன. யுத்த தளவாட உற்பத்தி டைரக்டர் ஜெனரல் இப்பொழுது 1,500 எஞ்சினியரிங் ஓர்க்ஷாப்புகளை உபயோகித்து வருகிறார். 840 பொதுவான இஞ்சி னியரிங் இனங்களுக்காகவும், 300 சிறிய இனங்களுக்காகவும், 360 ரயில்வே ஓர்க்ஷாப்புகள் உதிரி பாகங்களுக்காகவும் உபயோகப்படுத்தப்படுகின்றன. யுத்த தளவாட தொழிற்சாலை களில் உருவாக்கப்பட்ட சாமான்களின் சங்கியையானது வியாபார ரயில்வே ஓர்க்ஷாப்புகளின் உற்பத்தி சக்தியினால் அதிக உதவி பெற்றிருக்கிறது.

அநேக ரயில்வே இஞ்சினியரிங் ஒர்க்ஷாப்புகள் குண்டு குழாய்களையும், கை எரி வெடி குண்டு குழாய்களையும் செய்ய முற்பட்டது. ரயில்வே ஒர்க்ஷாப்புகளில் வாஹனங்களின் கூடுகளும், கவசம்பூண்ட வாஹனங்களும் பீரங்கி சுடும் மேடைகளும், சட்டிப் பீரங்கிகளும், குண்டுகளுக்கான கூடுகளும், யந்திரங்களும், எஸ். எ. எ. ஆயுதங்களும், உதிரி பாகங்களும் உற்பத்தி செய்யப்பட்டன.

சில ஒர்க்ஷாப்புகளில் உயர்தரமான வெடிகுண்டுகளுக்கு காலியாக உள்ள தீ வைக்கும் திரிகள் தயார் செய்து கொடுக்கப்பட்டன.

சணல் தொழிற்சாலையும், யுத்த தளவாடங்களைச் செய்ய ஒத்தாசை செய்தது. அந்த ஆலைகள் வெடி குண்டுகளுக்கு வேண்டிய அடி பிளேட்டுகளையும், பிளக்குகளையும், தற்காப்புக்கான வார்ப்பிரும்பையும் கவசம் பூண்ட வண்டிகளுக்கான உதிரி பாகங்களையும் தயார் செய்து கொடுத்தன. அவைகளின் மாதாந்திர சராசரி உற்பத்தி 200 லக்ஷம் யூனிட்கள். முதல் எட்டு மாதங்களில், ஒரு மாதத்தில் உற்பத்தி செய்யப்பட்ட உதிரி பாகங்கள் 2,400-லிருந்து 1,35,400 ஆக உயர்ந்தது.

---

# இந்தியாவின் கவசம்பூண்ட படைகள்.

## நேசதேச முயற்சிக்கு பேருதவி.

இந்தியாவின் கேந்திரஸ்தானம் நேசதேச யுத்த முயற்சிக்குப் பேருதவி செய்வதற்கு ஒத்தாசை செய்திருக்கிறது.

பர்மாவின் விடுதலைக்கு இந்தியா பாய்ச்சல் ஸ்தலம். பிரிட்டிஷ், இந்திய, அமெரிக்கப் படைகள் சீனர்களுடன் ஒத்துழைத்து ஜப்பானை மேற்கிலிருந்து தாக்குவதற்கும் இந்தியாதான் சர்ப்பராக்களை வழங்கும் தளம்.

பாரஸீக வளைகுடாவிற்குக் கிழக்கிலிருப்பதினால் ருஷ்யாவுக்கு நேசதேச ஸப்ளைகளை அனுப்புவதிலும் முக்கிய பங்கெடுத்துக்கொள்ளும்படி இந்தியாவுக்கு சாதகம் ஏற்பட்டது.

இந்துமஹா சமுத்திரத்தில் நேசதேசக் கடலாதிக்கத்தைப் பரிபாலிக்க ஒரு பக்கம் ஸிலோனுடனும், ஆஸ்திரேலியாவுடனும், மற்றொரு பக்கம் கிழக்கு, தெற்கு ஆபிரிக்காவுடனும் இந்தியா சேர்ந்துகொண்டது. இந்த ஆதிக்கத்தினால்தான் ஜப்பானிலிருந்து ஜெர்மனி துணிக்கப்பட்டது.

### இந்திய சேனை.

யுத்தத்துக்குமுன் இந்திய சேனையின் சங்கியை 1,82,000 இன்று அது 20,00,000 ஆக இருக்கிறது. எல்லோரும் வாலண்டியர்கள். தேசத்தின் ஒவ்வொரு மூலைமுடுக்குகளில் இருந்தும் ரெக்ரூட்டுகள் வருகிறார்கள். சராசரி மாதா மாதம் 50,000 முதல் 60,000 பேர்கள் சேனையில் சேருகிறார்கள். யுத்தத்தில ஐந்தாவது வருஷத்தில் ரெக்ரூட்மெண்டு சங்கியை குறைந்தது. தொழிற்பயிற்சிக்கு 7,785 பேர்களும், தொழிற்பயிற்சி அல்லாதவைகளுக்கு 27,833-ம் தான் சேர்த்தார்கள்.

ஆனால் மன்னரின் கமிஷன்பெற்ற உத்தியோகங்களுக்கும், வைஸ்ராயின் கமிஷன் பெற்ற உத்தியோகங்களுக்கும் அதிக ஆட்கள் சேர்ந்துகொண்டார்கள். யுத்தத்துக்குமுன் 200 காடட்டுகளுக்குப் பயிற்சி அளித்துவந்த இந்திய ராணுவப் பள்ளிக்கூடம் இப்பொழுது 600 பேர்களைச் சேர்த்துக் கொள்ளுகிறது. மற்ற ஆபீஸர் பயிற்சி பள்ளிக்கூடங்களும் ஆரம்பிக்கப் பட்டிருக்கின்றன. யுத்த ஆரம்பத்தில் 400 இந்திய ஆபீஸர்கள் இருந்ததுபோக இப்பொழுது 10,000 இந்தியன் கமிஷன் பெற்றவர்களும், மன்னர் கமிஷன் பெற்ற ஆபீஸர்களுமிருக்கிறார்கள். இப்போது மன்னர் கமிஷன்பெற்ற ஆபீஸர்களில் ஆறு பேர்களில் ஒருவர் இந்தியர்.

யுத்த ஆரம்பத்திலிருந்து மூன்றுவகைப்பட்ட சேனைப்படைகளுக்கும் பின்கண்ட சதவிகிதத்தில் இந்திய ஆபீஸர்கள் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள்.

| | | |
|---|---|---|
| இந்திய கடற்படை | ... | ... 45 சதவிகிதம். |
| இந்திய சேனை | ... | ... 47.3 ,, |
| இந்திய விமானப்படை | ... | ... 100 சதவிகிதம். |

## கவச அமைப்பு.

யுத்தத்துக்கு முன்னிருந்த இந்திய சேனைக்கு உள்நாட்டு பத்திரத்திற்கும், எல்லைப்புற தற்காப்புக்கும் தேவையான கவசம்தானிருந்தது. மூலப்படையென்பது மூன்று பிரிகேட்டுகள்தான். கவசம்கள் அதிகமாக வேண்டுமென்று உணரப்பட்டது. ஆகிலும் போதுமான முஸ்தீப்புகள் பிரிடனிடமிருந்து பெறக்கூடவில்லை. படைகளை விஸ்தரிப்பதும், அவர்களின் பயிற்சியில் விசேஷ மாறுதல்களைச் செய்வதும்தான் இந்தியாவின் ராணுவ பிரச்னையாகும்.

ஏற்கனவே இருந்த பயிற்சி பள்ளிக்கூடங்கள் அபிவிருத்தி செய்யப்பட்டிருக்கின்றன. அநேக புதிய பள்ளிக்கூடங்களும் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. முக்கியமானவை, டாக்டிகல் பள்ளிக்கூடம், யுத்தம் செய்யும் வாஹனங்கள் பள்ளிக்கூடம், காலாட்படை பள்ளிக்கூடம் (அதில் சிறிய யுத்த தந்திரங்களும் காலாட்படைக் குறிய ஆயுதங்களை உபயோகிக்கும் முறைகளும் கற்பிக்கப்படுகின்றன). ஆபீஸர்களுக்கும், கமிஷன் பெருத ஆபீஸர்களுக்கும் காட்டுப் போரை கற்பிக்கும் பள்ளிக்கூடம், விமானஎதிர்ப்பு பீரங்கி பயிற்சி நிலயங்கள் இன்னும் அநேக பயிற்சிசாலைகள். இந்திய காலாட்படைகளும், கிழக்கு போர்முனைக்கு உதவிக்கு அனுப்பக்கூடிய கூர்க்கா படைகளும் காட்டுப் போரில் கடுமையான பயிற்சிபெற்று வருகிருர்கள்.

பீரங்கிகள், M. T. ஆர்டிபிஸர்கள் முதலியவற்றிற்கான தொழிற்பயிற்சி நிலயங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இஞ்சினியர்களுக்கும், சமிக்கைசெய்கிறவர்களுக்கும், சர்ப்பரா, போக்குவரத்து தொழிற்பயிற்சியாளருக்கும், மற்றவர்களுக்கும் பள்ளிக்கூடங்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. சிக்கலான நவீன ஆயுதங்களையும் முஸ்தீப்புகளையும் கையாளக்கற்றுக் கொள்ளுமுன் அநேகர்களுக்கு ஆரம்பக்கல்வியும் போதிக்கவேண்டியிருந்தது. பையன்களைத்தயாரிக்க பெரிய பள்ளிக்கூடங்களும் ஆரம்பிக்கப்பட்டிருக்கின்றன. சேனையில் சேரும் வயதைப்பெற்ற உடன் அவர்கள் பூர்ணமான யோக்யதை உள்ள தொழிற்பயிற்சி பெற்றவர்களாக இருப்பார்கள்.

## இந்தியக் கவசம்பூண்ட படைகள்.

1937-ம் வருஷத்தில் இந்தியக் குதிரைப்படைக்குக் கவசம் அமைக்கும் ஏற்பாடு செய்யப்பட்டது. இந்த யுத்த ஆரம்பத்தில் இது அதிகரிக்கப்பட்டது. 1941-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் குதிரைப்படை மறைந்தது. 1942-ம் வருஷத்தில் பழைய இந்தியக் குதிரைப்படை இந்தியக் கவசமபூண்ட படையென்று பெயர் பூண்டது.

இந்த யுத்த ஆரம்பத்தில் ஒரு அடிப்படை பயிற்சி நிலயமும், மற்றும் இரண்டு தொழிற்பயிற்சி நிலயங்களும், கவசம்பூண்ட மோட்டார் படைகளுக்கும், டாங்கிப்படைகளுக்கும் பயிற்சியளிக்க அமைக்கப்பட்டன. புராதன பயிற்சி முகாம்கள் எடுத்துவிடப்பட்டன.

1943—1944-ம் வருஷத்தில் இந்திய கவசம்பூண்ட டாங்கிப் படைகள் மிகவும் நவீன கவசம்பூண்ட போர்வாஹனங்களுடன் பர்மாப் போர்முனையில் போரை நடத்தின. ஏப்ரல் மாதத்திலிருந்து ஜூலை வரைக்கும் 7-வது குதிரைப் படையைச் சேர்ந்த படைப்பகுதிகள் இம்பால் சமவெளியிலிருந்து ஜப்பானியர்களை இடைவிடாது சுத்தி செய்து வந்தன. இந்தப் படையின் டாங்கிகள் தான் ஜப்பானிய ஸ்தானங்களை முதல் முதலில் ஊடுருவிச்சென்றன. எதிரியின் தற்காப்புகளை ஊடுருவிச் சென்று முக்கியமான தகவல்களைக் கொண்டு வரும் வேவு பார்க்கும் படைகளாக இந்தியக் கவசம்பூண்ட படைகள் இதாலியப் போரில் முக்கிய பங்கெடுத்துக்கொண்டன.

## இந்திய பீரங்கிப்படை.

யுத்த ஆரம்பத்தினுல் இந்திய பீரங்கிப் படையை பலப்படுத்தும்படி நேரிட்டது. அது விசேஷ அபிவிருத்தியையும், விஸ்தாரத்தையும் அடைந்திருக்கிறது. ஆகையால் தான் அது போர் புரியும் படைகளின் முன்னணிக்கு வந்து இருக்கிறது. இந்திய பீரங்கிப் படையில் இப்பொழுது மலை, போர்முனை, நடுத்தரம், கனமான விமான எதிர்ப்பு, லேசான விமான எதிர்ப்பு, டாங்கிகளின் எதிர்ப்பு, சட்டி, ஆராய்ச்சி, கடற்கரை, பீரங்கிகளும் தேடு விளக்குகளும் இருக்கின்றன. இன்று, சில பிரிடிஷ் ஆபீஸர்களையும், கமிஷன் பெருத இந்திய போதகர்களையும் தவிர, பீரங்கிப் படையிலுள்ள மற்ற வேலைக்காரர்கள், 1935-ம் வருஷத்தில் எடுக்கப்பட்டவர்களைத் தவிர ஸீக்கியர்களாகவும், மஹாராட்டாக்களாகவும், ஆஹிர்களாகவும், பஞ்சாப் முஸ்லீம்களாகவும் இருக்கிருர்கள்.

பிரகிருத யுத்தத்தில் பீரங்கிப் படையாளர்கள் வடக்கு ஆபிரிக்காவிலும், பர்மாவிலும், ஸிஸிலியிலும், இதாலியிலும், எதிரியைத் தாக்கி அவனுக்கு அபாரமான நஷ்டத்தை உண்டு பண்ணியிருக்கிறார்கள்.

## இந்திய மின்சார, யந்திர இஞ்சினியர்கள்.

இந்திய மின்சார மெகானிகல் இஞ்சினியர் படைதான் இந்திய சேனையில் வாலிபமுள்ள படை. அது 1943-ம வருஷம் மே மாதம் 1-ம் தேதியன்று அமைக்கப்பட்டது அதில். இப்பொழுது யுத்தத்துக்கு முன்னிருந்ததைவிட 2,500 சத விகிதம் ஆட்களிருக்கிறார்கள். அதில் 1,800 ஆபீஸர்களும், 80,000 மற்ற உத்தியோகஸ்தர்களும் 20,000 பொதுஜனப் பலவகைப்பட்ட தொழிற்பயிற்சி உள்ளவர்களுமிருக்கிறார்கள். இந்தப் படையின் ஒர்க்ஷாப்பு அமைக்கப்பட்டுள்ள இடம் ஐம்பது லக்ஷம் சதுர அடி பரப்புள்ளது.

அதன் முக்கியமான வேலை இந்திய சேனையிலுள்ள யந்திர சாதனங்களைப் பழுது பார்ப்பது, பரிசுத்தம் செய்வது முக்யமாக, டாங்கிகளும், வாஹனங்களும் வெயர்லஸ் கருவிகளும், ஆயுதங்களும், சிறிய பீரங்கிகளும், தேடு விளக்குகளும், சீதளப்படுத்தும் கருவிகளும் இவைகள் எல்லாவற்றையும் பரிஷ்காரமான நிலைமையில் வைத்துக்கொள்ளவேண்டும். இதைச் சரிவர நிறைவேற்றவேண்டுமானால் திறமையுள்ள தொழிற்பயிற்சி நிபுணர்களும், மேல்பார்வை பார்க்கும் நிபுணர்களும், நல்ல முஸ்தீப்புகளுள்ள ஒர்க்ஷாப்புகளும் தேவைப்படும்.

பலவகைப்பட்ட அநேக ரக முஸ்தீப்புகளுள்ள சிக்கலான இந்த திட்டத்தை நிறைவேற்ற 1 லக்ஷம் தொழிற்பயிற்சி பெற்றவர்கள் வேண்டும். அவர்கள் 43 பல ரகத் தொழிலாளர்களாக இருப்பார்கள். ஒவ்வொரு மாதமும் வரும் 1,000 புதியத் தொழிலாளர்களுக்குப் பயிற்சியளிப்பதற்காக மூன்று ரெக்ரூட் பயிற்சி முகாம்கள் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. கண்காணிப்பு பிரிடிஷ், இந்திய, தொழிற்பயிற்சி ஆபீஸர்களால் செய்யப்பட்டு வருகிறது. அவர்களுக்கு மின்சார, மெகானிகல் இஞ்சினியர்கள் என்றும், பிரிடிஷ் வாரண்ட், கமிஷன் பெறாத ஆபீஸர்களென்றும், இந்திய கவசம் ஆர்டிபிஸர்ஸ் என்றும், இந்திய கமிஷன் பெறாத ஆபீஸர்களிலிருந்தும், தொழிற்பயிற்சி பெற்றவர்களிலிருந்தும் பெரிய உத்தியோகம் பெற்ற வைஸ்ராயின் கமிஷன் பெற்ற ஆபீஸர்கள் என்றும் பெயருண்டு.

இந்திய மின்சார, மெகானிகல் இஞ்சினியர் படை ஆபிரிக்கா, இதாலிய, தென்கிழக்கு ஆசியா போரில் பங்கெடுத்துக் கொண்டார்கள். அரகானிலிருந்து கோஹிமா வரையிலுள்ள பர்மாக்காடுகளில் I. E. M. E.யைச் சேர்ந்தவர்கள் தகுந்த ஆயுதங்களின்னியிலும், எதிரியின் தாக்குதலுக்குட்பட்டும் முஸ்தீப்புகளை பரிஷ்காரம் செய்வது, பழுது பார்ப்பது, புதிய ஆயுதங்களை அமைப்பது போன்ற வேலைகளைச் செய்திருக்கிறார்கள்.



## இந்திய சமிக்ஞைப்படை.

1922-ம் வருஷத்தில் அமைக்கப்பட்ட இந்தப்படையை 1939-ம் வருஷத்தில் அபிவிருத்தி செய்யவேண்டியதாயிற்று. புதிதாகச் சேர்க்கப்பட்ட சமிக்ஞைப் படையினர்களுக்கு நவீன முறையிலுள்ள வெயர்லஸ் கருவிகள், டெலிபோன்கள், தந்தி அமைப்புகளின் சிக்கலான பாகங்களைப்பற்றி போதிக்கப்படவேண்டும். அந்தப் படையில் இப்பொழுது 50,000 பேர்களிருக்கிறார்கள். போர்முனைக்குத் தேவையான படைகளுடன் இந்தியாவில் போக்குவரத்துக்காக நூற்றுக்கணக்கான சமிக்ஞைப் படைகளும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்திய O. Rs. மிகவும் நவீனமான சிக்கலான ரகமுள்ள முஸ்தீப்புகளைக் கையாண்டு பரிபாலித்து வருகிறார்கள். அவசியம் ஏற்பட்டபொழுது சமிக்ஞைப் படையினரும் போர் புரிந்திருக்கிறார்கள். இந்திய டிவிஷன் சமிக்ஞைப் படையைச் சேர்ந்தவர்கள் பர்மாவில் ஒரு இடத்தில் ஜப்பானியர்கள் தாக்கிய டிவிஷனின் தலைமைக் காரியாலயத்தை தீரத்துடன் தற்காப்பு செய்தார்கள்.

## இந்திய குடைத்துருப்புப் படைகள்.

இந்தியாவில் குடைத்துருப்புகளின் பட்டாளங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. இந்த சேவையிலும் இந்திய, கூர்க்காப் படைகள் நல்ல முறையில் வேலை செய்து வருகிறார்கள். 5-வது மகாராஷ்டிர காலாட்படையின் ஒரு பட்டாளத்துடனும், ஸமஸ்தானத்தின் இரண்டு கம்பெனிப் படைகளுடனும், பிரிடிஷ், இந்திய பீரங்கிப் படையுடனும் இந்தியக் குடைத் துருப்புகள் ஜப்பானியர்கள் உள்ளே நுழையாதபடி இம்பால் சமவெளியை ஆறு நாட்கள் வரையில் தற்காப்பு செய்து, போதுமான அவகாசத்தை சம்பாதித்தார்கள். அதற்குள் ஐந்தாவது இந்திய டிவிஷன் இம்பாலுக்கு விமான மூலம் வந்துவிட்டது. குடைகள் இந்தியாவிலேயே இந்தியப்பட்டினால் தயாரிக்கப்பட்டன.

### கால்நடை போக்குவரத்து.

ரஸ்தாக்கள் ஆபூர்வமாக உள்ளதும், மலைகளும் காடும் உள்ள இந்தோ-பர்மா எல்லைச் சரகத்தில் வட மேற்கு எல்லைச்சரகத்திலுள்ள கால்நடை போக்குவரத்துப் படைகளுடன் மற்றும் அநேக படைகள் தயாரிக்கப்பட்டன. இந்திய சேனையைச்சேர்ந்த கால்நடைகளை வாங்கும் இலாகா இந்த யுத்தத்தில் சேவைக்காக 60,000 கால்நடைகளை வாங்கியிருக்கிறது. சேனை குதிரைகளையும், கோவேரு கழுதைகளையும் பெருக்க உற்சாகம் அளித்து வருகிறது. 14-வது சேனையுடனிருக்கும் பிராணிகளில் ஐந்தில் மூன்று இந்தியாவில் தோன்றியவை.

### இந்தியச் சேனையைச்சேர்ந்த வைத்தியப்படை.

இந்திய வைத்தியப் படை 1943-ம் வருஷத்தில் இந்திய ராணுவ வைத்திய சேவைப் படை, இந்திய வைத்தியப் படைகள், இந்திய வைத்திய இலாகா, இந்திய ஆஸ்பத்திரிப் படை முதலியவற்றை ஒருமைப்படுத்தி ஸ்தாபிக்கப்பட்டது.

1943-ம் வருஷ மத்தியில் 300-க்கு மேற்பட்ட பெரிய போர்முனை வைத்தியப் படைகள் இந்தியாவில் தயாரிக்கப்பட்டுவிட்டன. இந்தியப் படைகள் சேவை செய்யும் இடங்களில் எல்லாம் வைத்தியப்படை வேலை செய்து வருகிறது. பெரிய ஆஸ்பத்திரிகள் கட்டப்பட்டு சிப்பந்திகளும் நியமிக்கப்பட்டிருக்கிறார்கள். புதிய வைத்தியப் பயிற்சி பள்ளிக்கூடங்களும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. இப்பொழுது ஸ்திரீ டாக்டர்கள் சேர்த்துக்கொள்ளப்படுகிறார்கள். அவர்களுக்கு இந்தியாவிலும், அதற்கு வெளியிலும் சேவை செய்யவேண்டுமென்ற நிர்ப்பந்தம் உண்டு. புதிய வைத்தியப் படைகளுடனும், ஆஸ்பத்திரிகளுடனும் சேனை தாதிகள் படையும் தயாரிக்கப்பட்டிருக்கிறது. 1944-ம் வருஷ முடிவில் அஸ்ஸாமிலுள்ள படைகளிடம் காணப்பட்ட மலேரியா ஜுரம் 50 சத விகிதம் குறைக்கப்பட்டது.

### இந்தியச் சேனை யுத்த தளவாட உற்பத்திப் படை.

ஒவ்வொரு மாதமும் இந்தியா பூராவிலும் உள்ள I. A. O. C. டிப்போக்கள் வழியாக 2,00,000 டன்கள் சாமான்கள் அனுப்பப்படுகின்றன. யுத்தத்திற்கு முன்னிருந்த 40,000 இனங்களுக்குப் பதிலாக இப்பொழுது 3 லக்ஷம் இனங்கள் அனுப்பப்படுகின்றன. இந்தப் படை போர்முனையிலும், யுத்த தளவாட உற்பத்தி நிலயங்களையும், சலனம் செய்யும் சினிமாக்களையும், சலனம் செய்யும் சலவை ஏற்பாடுகளையும் செய்து வருகிறது.

### இந்தியப் பொது சேவைப் படை.

13 பலவித பாஷைகளையும், நூற்றுக்கணக்கான உட்பிரிவு பாஷைகளையும், பேசும் இந்தியப் பொது சேவைப் படையைச் சேர்ந்த 55,000 போர்ப் படைகளும், போர்ப்படைகள அல்லாதவர்களும் இன்று எல்லா போர்முனைகளிலும் சேவை செய்து வருகிறார்கள். அவர்கள் 2,000-க்கு மேலான படைகளுக்கு சேவை புரிந்து வருகிறார்கள். அவர்களில் 1,600-க்கு மேற்பட்டவர்கள் யுத்தக் கைதிகளாகி விட்டார்கள். இந்தப் படை 1939-ம் வருஷத்தில் அமைக்கப்பட்டது. விசேஷமான படைகள் செய்யக்கூடாத அநேகவிதமான, பலரக வேலைகளைச்செய்ய மூலப்படைகளாக அவர்கள் தயாரிக்கப்பட்டார்கள். I. G. S. C.-ன் ஆதரவின்கீழ் அநேக யுத்தகாலப் படைகள் தோன்றின. இந்திய உற்றுநோக்காளர் படை, கடற்கரை தற்காப்புப் படை, ரக்ஷகப் படை, தகவலறிவிப்புப் படை, தணிக்கைச் செய்யும படைகள் இந்தப் படைகளை அமைத்ததில் 11,000 ஆட்கள் பயிற்சி அளிக்கப்பட்டு I. G. S. C.-யிலிருந்து நிரந்தரமாக மாற்றப்பட்டார்கள்.

### இந்திய ஸ்திரீகளின் உதவிப்படை.

10,000 பேர்கள் கொண்ட ஸ்திரீகள் உதவிப்படை தயாரிக்கப்பட்டிருக்கிறது. அவற்றில் 1,000 பேர்கள் ஆபீஸர்கள். அவர்கள் ஸோல்ஜர்களையும், தொழிற்பயிற்சி பெற்றவர்களையும் போர்முனைக்கு அனுப்ப சேர்க்கப்பட்டார்கள். அவர்கள் ஸ்விச்சுப் பலகை ஆபரேடர்களாகவும், வெயர்லஸ் ஆபரேடர்களாகவும், குமாஸ்தாக்களாகவும், ஆஸ்பத்திரிகளில் மருந்து கலந்து கொடுக்கிறவர்களாகவும் வேலை செய்து வருகிறார்கள். பெரிய தலைமைக்காரியாலயத்திலுள்ள ஆபீஸர்களுக்கு பதிலாகவும் அவர்கள்வேலை செய்து வருகிறார்கள். இந்தியக் கடற்படை சம்பந்தமான சேவைகளுக்காக W. A. C.-யின் கடற்படைப் பகுதியும் தயாரிக்கப்பட்டிருக்கிறது.

## கடல் தாண்டி சேவை.

இந்திய சேனையைச் சேர்ந்த 4,30,000 அங்கத்தினர்கள் கடல் தாண்டிச் சென்றிருக்கிறார்கள். அவர்கள் கியாதியுடன் கிழக்கு ஆபிரிக்கா, சூடான், எரிட்ரியா, அபிஸீனியா, லிபியா, டூனிஸியா, இதாலி, ஸிரியா, பாரஸீகம், இராக், மலேயா, கிழக்கு இந்தீஸ், பர்மா, ஹாங்காங் முதலிய இடங்களில் தற்காப்பு செய்திருக்கிறார்கள். கால்நடைப் படையின் ஒரு பகுதி பிரான்ஸில் சேவை செய்தது.

## தீரத்துக்காக பரிசுகளும், விக்டோரியா பதக்கங்களும்.

எங்கு சேவை செய்தாலும் இந்தியத் துருப்புகள் விசேஷமான தீரத்துடன் சேவை புரிந்துவந்தன. 1944-ம் வருஷம் ஏப்ரல் மாதம் வரையில் இந்தியச் சேனையைச் சேர்ந்த ஆபீஸர்களும், ஸோல்ஜர்களும் 21 விக்டோரியா கிராஸ் பதக்கங்களேயும், ஒரு ஜார்ஜ் பதக்கத்தையும், 142 D. S. O-க்களேயும், மூன்று I. O. M-களேயும் பெற்றிருக்கிறார்கள். 21 விக்டோரியா பதக்கங்களில் மூன்று ஆங்கிலேயர்களுக்கும் மற்றவைகள் இந்தியர்களுக்கும் வழங்கப்பட்டது. இந்தியச் சேனை பெற்ற பரிசுகள் பின்வருமாறு. 561 ராணுவ கிராஸ்கள், 941 இந்திய D. S. பதக்கங்கள், 2 D. C. பதக்கங்கள், ஒரு ஜார்ஜ் கிராஸ் பதக்கம், 518 ராணுவ பதக்கங்கள். இந்திய சேனைக்கும், இந்திய சமஸ்தானப் படைகளுக்கும் இதுவரையில் 2,468 பரிசுகள் வழங்கப்பட்டிருக்கின்றன. அதைத்தவிர சர்க்கார் அறிக்கையிலும், தீரத்துக்கான அத்தாக்ஷிப் பத்திரங்களிலும் ஆயிரக்கணக்கானவர்களின் பெயர்கள் வெளியிடப்பட்டிருக்கின்றன.

விக்டோரியா கிராஸ் பதக்கம் பெற்ற நாடுகளில் இந்தியா இரண்டாவது ஸ்தானம் வகிக்கிறது. 1944-ம் வருஷம் டிஸம்பர் மாதம் வரையில் இரண்டாவது உலக யுத்தத்தில் வழங்கப்பட்ட 116 விக்டோரியா கிராஸ் பதக்கங்கள் பின்வருமாறு விநியோகம் செய்யப்பட்டன. பிரிடன் 75, இந்தியா 18, ஆஸ்திரேலியா 11, நியூஸிலாந்து 7, கனடா 3, தெற்கு ஆபிரிக்கா 1, பிஜி—1.

## நாலாவது இந்திய டிவிஷன்.

நாலாவது இந்திய டிவிஷன் இந்த யுத்தத்தில் மிகவும் கியாதிபெற்றது. அது 1940-ம் வருஷத்தில் வேவலிடமுள்ள சேனையின் ஒரு பகுதியாக இருந்தது. அபிஸீனியாப் போரில் முக்கியமான பங்கெடுத்துக்கொண்டது. ரொம்மலிடமிருந்த எகிப்திய எல்லையைக் காக்க அது எகிப்துக்குச்சென்றது. ஸிரியாவில் கடும்போர் செய்தது. 1941-ம் வருஷத்தில் ஜெனரல் ஆச்சின்லக் முன்னேறித் தாக்கியபொழுது பங்கெடுத்துக்கொண்டது. எல் அகெலாவிலிருந்து ரொம்மல் தாக்கியபொழுது பெங்காஸியைத் தற்காப்பு செய்து வந்தது. பின் வாங்கும் போரில் அது ஏராளமான ஜெர்மன் படைகளை அநேகம் தடவை துரத்தியடித்தது. எல் அலாமீனில் அது ருவேஸாத் குன்றைத் தாக்கியது. மாரத் அரண்வரையில் ரொம்மலைப் பின் துரத்திச் செல்ல உதவியளித்தது. 1943-ம் வருஷம் மார்ச்சு மாதம் 15-ம் தேதியன்று ஹால்பாயாக்கணவாயை ஊடுருவிச் சென்றது. 1944-ம் வருஷத்தில் இதாலியின் எட்டாவது சேனையுடன் சேர்ந்து போர் புரிந்தது. பாரஸீகத்திலும், இராக்கிலுமுள்ள 9-வது, 10-வது சேனைகளில் இந்தியத்துருப்புகள் பெருவாரியாக இருக்கின்றன.

இதாலியில் ஜெர்மன் மாரிகால அரணை ஊடுருவிச் சென்ற பொழுது தாக்கிய எட்டாவது சேனை நடவடிக்கையில் எட்டாவது இந்திய டிவிஷன் தான் தலைமை வகித்தது. பெரும்பாலும் இந்தியர்களுள்ள 14-வது சேனை பர்மா எல்லைச் சரகத்தில் ஒவ்வொரு முனையிலும் எதிரியுடன் போரை நடத்திவருகிறது.

## இந்தியக் கடற்படை.

யுத்த ஆரம்பத்திலிருந்ததைவிட இந்திய கடற்படை இப்பொழுது 20 மடங்கு வளர்ச்சி பெற்றுவிட்டது. அந்த சேவைப்படையின் வேலைக்காரர்களும், கப்பல்களும், பயிற்சி ஸ்தாபனங்களும் விஸ்தாரப்படுத்தப்பட்டுவிட்டன. யுத்த ஆரம்பத்தில் 1,200 ஆபீஸர்களும், வேலைக்காரர்களும் இருந்தது போக 1944-ம் வருஷம் ஆரம்பத்தில் அந்த சங்கியை 30,000-க்கு அதிகரித்துவிட்டது.

1943-44-ம் வருஷத்தில் இந்தியக் கப்பல்கள் 17,50,000 மைல்கள் பிரயாணம் செய்திருக்கின்றன. கப்பல்கள் சேவையின் 85 சத விகித காலத்தை கடற்கரை ஓரமாகவும், கடல் தாண்டியும் செல்லும் சாமான் கப்பல்களுக்குத் துணைக் காவல் புரிவதிலும் கழித்து வந்தன.

இரண்டு பெரிய கடற்படை தளங்களும் மூன்று சிறிய கடற்படை தளங்களும் நவீன முஸ்தீப்புகளுடன் அமைக்கப்பட்டிருக்கின்றன. பம்பாயிலுள்ள இந்தியக் கடற்படை பழுது பார்க்கும் தளத்தில் கப்பல்கள் பழுதுபார்க்கப்படுகின்றன. திருத்தியமைக்கப்படுகின்றன. படகுகள் கட்டப்படுகின்றன. சாமான் கப்பல்களுக்கு கவசங்களும், மின்சாரத்தை அகற்றும் உபாயங்களும் அமைக்கப்படுகின்றன. இந்தியக் கப்பல் கட்டும் தளங்களில் அநேக புதிய யுத்தக் கப்பல்களும் கட்டப்பட்டு அனுப்பப்பட்டிருக்கின்றன.

கடற்படையின் கவனம் தூரக்கிழக்குக்கு செலுத்தப்பட்ட பொழுது இந்திய யுத்தக் கப்பல்களுக்கு அதிக பொறுப்புகள் ஏற்பட்டன. உதவிப்படைகளையும், முஸ்தீப்புகளையும் கொண்டுவரும் சாமான் கப்பல்களுக்கு அவைகள் துணைக்காவல் புரிய வேண்டியிருந்தன. இந்து மகா சமுத்திரத்தில் ஒரு குறிப்பிட்ட டயத்தில் 2 மிலியன் டன்கள் உள்ள சாமான் கப்பல்கள் நடமாடிக்கொண்டிருக்கின்றன. இந்த முக்கியமான போக்குவரத்தைக் காப்பாற்றுவதில் இந்தியக் கப்பல்கள் பெரும் முயற்சி எடுத்துக் கொண்டன.

இந்திய யுத்தக் கப்பல்கள் எதிரிகளின் நீர்மூழ்கிகளையும் தாக்கியிருக்கின்றன. துறை முகங்களுக்குப் போகும் வழியிலுள்ள சுரங்க வெடிகளை இந்திய சுரங்க வாரிக் கப்பல்கள் சுத்தி செய்து வந்திருக்கின்றன. பர்மா கடற்கரையோரமாக வெகு தூரம் சென்று இந்திய அராக்கான் கடற்கரையைச் சேர்ந்த சிறிய கப்பல்கள் எதிரியின் கடல் விலாப் பக்கத்தைத் தாக்கி நமது படைகளின் முன்னேற்றத்திற்கு சாதகம் அளித்தன. அவைகள் துருப்பேற்றிச் செல்லும் ஜப்பானியப் படகுகளை அழித்து கடற்கரை ஸ்தானங்கள் பேரில் பீரங்கி பிரயோகம் செய்தன.

1943-ம் வருஷம் டிசம்பர் மாதம் முதல் 1944-ம் வருஷம் ஏப்ரல் மாதம் வரையில் இந்திய கடற்கரைப் பகுதியைச் சேர்ந்த சிறிய கப்பல்கள் 43 நடவடிக்கைகளில் 30,000 மைல்கள் பிரயாணம் செய்தன. ஜப்பான் வசமுள்ள கடற்கரையில் 200 மைல்கள் வரையில் சமீபதூரத்திலிருந்து எதிரியின் ஸ்தானங்கள் பேரில் 26,000 குண்டுகளைப் போட்டிருக்கின்றன.

இப்பொழுது இந்தியக் கடற்படையில் படைகளை இறக்கும் படகுகள், கடற்கரைப் படகுகள், W. R. I. N. S. என்ற ஸ்திரீகளின் சேவை படைகள் முதலியவை இருக்கின்றன. இந்திய கடற் படையில் போர் புரியும் கடற்படைக்குப் பயிற்சியளிக்க தொழிற் பயிற்சிப் பள்ளிக்கூடமும் இருந்து வருகிறது. 1939-ம் வருஷத்துக்குப்பின் புதிய பயிற்சி ஸ்தாபனங்களின் சங்கியை 16-க்கு அதிகரித்திருக்கிறது. சாம்ராஜ்ய நாடுகளிலேயே மிகப்பெரியதான புதிய மீன் வெடி பள்ளிக்கூடமும், நீர்மூழ்கிகளை எதிர்க்கும் பள்ளிக்கூடமும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கின்றன. கடற்படை பீரங்கிப்படை பள்ளிக்கூடம் விஸ்தாரிக்கப்பட்டிருக்கிறது. பீரங்கி உபயோகத்தில் பயிற்சி பெறும் ரெக்ரூட்டுகள் 15 மடங்காக அதிகரித்து விட்டார்கள். இந்திய கடற்கரையில் அமைக்கப்பட்டிருக்கும் ஒன்றுபட்ட பயிற்சி முகாம்களில் கடற்படை ஆபீஸர்களும், வேலைக்காரர்களும் இந்தியத் துருப்புகளுடனும், பிரிடிஷ் விமான படையுடனும் இருவகைப்பட்ட போரில் கடுமையாகப் பயிற்சி பெற்று வருகிறார்கள்.

மலேயா படைபெடுக்கப்பட்ட பொழுது இந்திய, கடற்படையைச் சேர்ந்த கப்பல்கள் மலாக்கா ஜலசந்தியிலும், ஜாவாக் கடலிலும் நடமாடின. அட்லாண்டிக்கில் சாமான் கப்பல்களுக்குத் துணைக்காவல் புரிந்து வந்த ஜம்னு, ஸட்லெஜ் என்ற கப்பல்கள் குண்டா ஜலசந்தியில் நடமாடின. அங்கு ஒரு நாள் பூராவும் பருந்துப் பாய்ச்சல் விமானங்களுடன் சண்டை போட்டு தப்பிப் பிழைத்தது. நிச்சயமாக நான்கு எதிரியின் விமானங்களை சுட்டு வீழ்த்தியது. உதவி கடற் தளபதி பிட்ஸ்ஹெர்பர்ட் அதன் திறத்தைப் பாராட்டினார். ஸட்லெஜ் என்னும் கப்பல் துணைக்காவல் செய்தபொழுது எதிரியின் ஐந்து விமானங்களைச் சுட்டு வீழ்த்தியது.

இந்திய கடற்படை பர்மா கடற்கரைக்கருகில் அரக்கான் போர்முனையில் நடைபெற்ற போருக்கு உதவியளித்தது. பர்மாவில் படைபெடுப்பு ஏற்பட்ட பொழுது பர்மியத் துறை முகங்களிலிருந்து 40,000 இந்தியர்கள் கப்பல்களின் மூலம் காலி செய்யப்பட்டார்கள். இண்டஸ் என்னும் கப்பலை ஜப்பானிய வெடிவிமானங்கள் மூழ்கடித்தன. 1943-ம் வருஷத்தில் இந்திய கடற்படை வட ஆபிரிக்காவிலிருந்து 8-வது சேனைக்கு உதவிப்படைகளையும், சர்ப்பராக்களையும் கொண்டு போகும் கப்பல்களுக்குத் துணைக்காவல் புரிந்தது.

இந்திய சுரங்வாரிக் கப்பலான பெங்கால் என்னும் கப்பலின் சேவையைவிட அரிய சேவை வேறு ஒன்றும் கிடையாதென்று காமன்ஸ் சபையில் கடற்படை முதல் பிரபு வெளியிட்டார். 1942-ம் வருஷம் நவம்பர் மாதத்தில் அது ஒண்டினு என்ற மோட்டார் கப்பலுக்குத் துணைக்காவல் செய்து வந்தபொழுது 10,000 டனகள் உள்ள கோகூ மாருவும் 6,863 டன்களுள்ள கூனிகாவா மாருவும் அதைத் தாக்கின. ஒவ்வொரு கொள்ளைக் கப்பலிலும் ஆறு 5·5 இஞ்சு பீரங்கிகளும், மீன் வெடிகளும் இரண்டு காடபுல்ட் விமானங்களும் இருந்தன. பெங்கால் என்னும் கப்பல் உடனே தாக்க ஆரம்பித்தது. பெரிய கப்பலின் பேரில் அநேக குண்டுகளை வீசியதன் மூலம் அது வெடித்து தலை கீழாக மூழ்கிற்று. சுரங்கவாரிக் கப்பலும் அடிபட்டது. ஆகிலும் சொற்ப சேதம் தான் ஏற்பட்டது. உயிர்ச் சேதம் ஒன்றும் ஏற்படவில்லை.

1943—44-ம் வருஷத்தில் இந்துமகா சமுத்திரத்தில் பிரிடிஷ் கடற்படை இந்திய கடற்படை, ஆஸ்திரேலிய கடற்படையைச்சேர்ந்த மூன்று யுத்தக் கப்பல்கள் எதிரியின் ஒரு நீர் மூழ்கியை மூழ்கடித்தன.

இந்த நடவடிக்கையை வெற்றிகரமாக நடத்தியதற்காக அதன் கமாண்டரைப்பற்றி நிர்வாக அறிக்கையில் வெளியிட்டார்கள். பீகார் என்னும் இந்தியக் கப்பல் இரவில மீன் வெடிகுண்டால் மூழ்கடிக்கப்பட்ட சாமான் கப்பலிலிருந்து தவித்துக்கொண்டிருந்த 191 பேர்களை ரக்ஷித்தது.

## இந்திய விமானப்படை.

சில வருஷங்களுக்குள்ளாக இந்திய விமானப்படை 200-லிருந்து 27,000-க்கு அதிகரித்திருக்கிறது.

யுத்த ஆரம்பத்தில் ஒரு பூர்ணமான படைதானிருந்தது. இப்பொழுது அதில் 10 படைகளிருக்கின்றன. எல்லாம ஜப்பானைத் தாக்கும் போரிலீடுபட்டிருக்கின்றன. சில விமானப் படைகள் வடமேற்கு எல்லைச்சரகத்திலும் ஈடுபட்டிருக்கின்றன வேவு பார்க்கும் படைகள் என்று அமைக்கப்பட்ட விமானப்படைகள் சண்டை நடவடிக்கைகளில் சிறந்தவை என்று ருஜூச் செய்திருக்கின்றன. அவைகளின் தீரச்செய்கைகள் அவைகளின் கீர்த்தியை அதிகப் படுத்தியிருக்கின்றன. இந்திய விமானப்படையிலுள்ள அநேகர்கள் கௌரவ அடையாளங்களும், வெகுமதிகளும் பெற்றிருக்கிறார்கள். அவைகள் பின்வருமாறு ஒரு D. S. O., ஒரு D. F. C.-யும் பாரும், 8 D. F. C. S. ஒரு A. F. C. வேவு பார்க்கும் வேலைகளையும் தவிர இந்திய விமானிகளும், விமான வேலைக்காரர்களும் பர்மாவிலுள்ளவர்களுக்கு விமான மூலம் ஸப்ளைகளை அனுப்பி வந்திருக்கிறார்கள்.

சாம்ராஜ்ய விமானப்படை பயிற்சி திட்டப்படி 1943-ம் வருஷத்தில் இந்தியாவிலிருந்து முதல் கோஷ்டியார் கனடாவுக்குச் சென்றார்கள். இந்திய விமானப்படையில் 1943-ம் வருஷ முடிவில் 17 தொழிற்பயிற்சி பள்ளிக்கூடங்களும், தொழிற்பயிற்சியில்லாத பள்ளிக் கூடங்களுமிருந்தன. இந்தப் பள்ளிக்கூடங்களில் விமானப்படைக்கு அவசியமான எல்லா தொழில்களும் கற்றுக்கொடுக்கப்பட்டன. இவைகளைத் தவிர விமானம் ஓட்டும் பயிற்சி நிலயங்களும் இருக்கின்றன. இந்த நிலயங்களிலுள்ள போதகர்களில் 50 சத விகிதம் இந்தியர்கள். ஆரம்ப காலத்தில் 300 விமானிகளையும், 2,000 தரைப் படைகளையும் ஒவ்வொரு வருஷமும் தயாரிக்க பொதுஜன விமானிகள் பயிற்சி பள்ளிக்கூடமும் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது.

இந்திய விமானப்படைப் பயிற்சி திட்டம் இந்திய ஸமஸ்தானங்களில் உள்ள மூன்று சர்வகலாசாலைகள் உள்பட 19 இந்திய சர்வகலாசாலைகளுக்கு விஸ்தரிக்கப்பட்டிருக்கிறது. இந்தியாவில் உள்ள மாணவர்களுக்கு கல்வி கற்கும் போதே இந்திய விமானப்படையில் விமானிகளாகச் சேருவதற்கு பயிற்சி அளிக்க சந்தர்ப்பம் அளிக்கப்படுகிறது.

## பர்மாவில் இந்திய விமானப்படை.

இந்திய விமானப்படையின் கடற்கரை தற்காப்புப் பகுதி விருத்தி அடைந்துவிட்டது. அதன் வேலைக்காரர்களில் 75 சத விகிதம் இந்தியர்கள். 1940-ம் வருஷத்தில் அமைக்கப்பட்ட பின் இந்த விமானங்கள் இந்தியாவிலிருந்து வெளி நாடுகளுக்கு அனுப்பப்பட்டும, ஏராளமான

துருப்புகளுக்கும், தளவாடங்களுக்கும் துணைக்காவல் புரிவதில் ஆயிரக்கணக்கான மைல்கள் பறந்து சென்றிருக்கின்றன.

இந்தியாவிலிருந்து புறப்படும் இந்திய விமானப்படைகள் 1942-ம் வருஷத்திலிருந்து பர்மா மேல் போர்புரிந்து வந்திருக்கின்றன. அவைகள் இந்திய எல்லைச்சரகத்திலிருந்து இராவதிக்கு அரக்கான் வழியாகவும், இம்பாலிலிருந்து மத்திய பர்மாவுக்கும் முன்னேறிய தரைப்படைகளுக்கு உதவி செய்திருக்கின்றன. அக்யாப்பையும், ராம்ரீயையும் படையெடுத்ததிலும் அவைகள் பங்கெடுத்துக்கொண்டன. மற்ற போர்ப் படைகளுக்கும் அவைகள் பூரணமான உதவி அளித்துவருகின்றன. நடவடிக்கைக்கு சௌகரியமான காலத்தில் இந்திய விமானப்படை 10,500 மணிகள் கொண்ட 7,600 தடவை பாய்ந்துசென்று 1,000 டன்கள் எடைமானமுள்ள வெடிகுண்டுகளைப் போட்டிருக்கின்றன.

இந்திய விமானப்படையில் நவீன முறையில் உள்ள சண்டை விமானங்களும், வெடி விமானங்களும் இருக்கின்றன. அதன் வேலைக்காரர்கள் பெரும்பாலும் இந்தியர்கள்தான்.

### இந்திய சமஸ்தானங்களின் பேருதவி.

இந்திய மன்னர்கள் இந்திய, போர்ப் படைகளுக்கு 3,75,000 ரெக்ரூட்டுகளை அனுப்பியிருக்கிறார்கள். முதல் 4½ வருஷங்களில் சமஸ்தானங்களிலிருந்து அனுப்பப்பட்ட 3 லக்ஷம் ரெக்ரூட்டுகள் இந்தியாவிலுள்ள அநேக சேவைகளில் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். பாட்டியாலா போன்ற பெரிய சமஸ்தானங்கள் 33,000 ரெக்ரூட்களை அனுப்பியிருக்கின்றன. சிறிய சமஸ்தானங்களும் சக்திக்குத் தக்கவாறு உதவி செய்திருக்கின்றன. மிகவும் சிறிய சமஸ்தானமான ஸாசினிலிருந்தும் மொத்த ஆண் ஜனத்தொகையின் 8 சதவிகிதம் சமஸ்தானத்துக்கு வெளியில் யுத்த முயற்சி சம்பந்தமான அநேக சேவைகளில் ஈடுபட்டிருக்கிறது. சமஸ்தானங்களுக்கு வெளியில் 63 சமஸ்தானப் படைப்பகுதிகள் சேவை செய்து வருகின்றன. அதைத்தவிர சமஸ்தானங்கள் 38 இந்திய சேனைப் பகுதிகளைத் தயாரித்திருக்கின்றன.

எல்லா சமஸ்தானங்களும் மத்திய நிர்வாகம் கொண்டுவந்திருக்கும் அநேக யுத்த நடவடிக்கைகளை ஏற்றுக்கொண்டன. தொழில், வியாபாரம், கோசம், மனிதபலம் முதலியவற்றைப் பொருத்ததும் இதில் சேர்ந்தவை. கடற்கரை ஓரமாக உள்ள சமஸ்தானங்கள் பொருளாதார, யுத்த சம்பந்தமான நடவடிக்கைகளில் ஒத்துழைத்து ஏற்றுமதிகளையும், இறக்குமதிகளையும், கள்ள வியாபாரத்தையும் கட்டுப்பாடு செய்யும் இந்திய நிர்வாகத்தின் திட்டங்களையும் ஏற்றுக்கொண்டன. அநேக சமஸ்தானங்கள் அவர்களுடைய ராணுவப் படைகளை சமஸ்தானத்துக்கு வெளியே வேலை செய்யவும் அனுப்பியிருக்கின்றன. ஆள்வார், பிகானர், பாரிட்கோட், குவாலியர், ஹைதராபாத், இண்டோர், ஜெய்பூர், ஜிண்ட், ஜோட்பூர், கபூர்தாலா, காஷ்மீர், மாலர்கோட்லா, நாபா, பாடியாலா, ரீவா, திரிபுரா முதலியவற்றைச் சேர்ந்த துருப்புகள் பிரிடிஷ் இந்தியாவில் விசேஷ அலுவல்களைச்செய்து வந்தன, அல்லது புதிய போர்ப்படைகளுடன் சேர்ந்து பயிற்சி பெற்று வருகின்றன. காஷ்மீர் மலைப்பட்டாளம், முதலாவது பாடியாலா காலாட்படை, ஜிண்ட் காலாட்படை, ஜோட்பூர் சர்தார் காலாட்படை, இரண்டு ஜெய்பூர் பட்டாளங்கள், திரிபுராரைபிள்ஸ்கள், டெஹ்ரிகள், காலாட்படைகள் மாலர்கோட்லா சபர்ஸுகளும் மைனர்களும் எல்லோரும் அநேக போர் முனைகளில் கியாதியுடன் சேவை செய்திருக்கிறார்கள். நேபால் அதன் சேனையிலிருந்து 8,000 பேர்களை நேசநேச உதவிக்கு இந்தியாவுக்கு அனுப்பியிருக்கிறது. இதைத் தவிர கூர்க்கப் படைகளுக்கும் ஏராளமான ஆட்களை திரட்டியிருக்கிறது.

அநேக சமஸ்தானங்கள் அநேக புதியப் பட்டாளங்களைத் தயார் செய்திருக்கின்றன. அவர்களின் குதிரைப் படைகளுக்கு கவசம் அளிக்கப்பட்டிருக்கிறது. இந்திய சேனைக்குப் படைகளைத் திரட்டி பயிற்சி அளிக்கவும், அவைகள் உதவி செய்துவருகின்றன. சமஸ்தானத்திலுள்ள விமானப்பயிற்சி ஸ்தாபனங்கள் விமானிகளின் மூலப் படையினருக்கு பயிற்சி அளிக்கும் மத்ய நிர்வாக திட்டத்துடன் ஒத்துழைக்கின்றன. வெடிமருந்துத் தொழிற்சாலைகளில் மெக்கானிக்குகளுக்கும், மற்ற தொழிலாளர்களுக்கும் பயிற்சி அளிப்பதற்கான திட்டங்களில் அநேக சமஸ்தானங்களும் ஒத்துழைத்து வருகின்றன. அநேக இந்திய மன்னர்கள் காடுகளின் பெரும்பாகங்களை சேனையின் பயிற்சிக்காக விட்டுக்கொடுத்திருக்கிறார்கள். பர்மாவிலுள்ள நிலைமைக்குட்பட்டு இந்த இடங்களில் காட்டுப் போரில் பயிற்சி பெறலாம்.

சமஸ்தானங்களிலிருந்து ஏராளமானவர்கள் போர்ப்படை அல்லாத வேலைகளுக்கு அதாவது தொழிற்பயிரசி வேலைக்குச் சேர்க்கப்பட்டிருக்கிறார்கள். இந்திய சமஸ்தானங்கள் ரஸ்தாக்களையும், விமானத் தளங்களையும் அமைக்க தொழிலாளர் படைகளை அனுப்பி இருக்கிறார்கள். தெற்கிலுள்ள திருவாங்கூரிலிருந்தும், கொச்சியிலிருந்தும் 70,000 பேர்கள் வடக்குக்குச் சென்று போர்புரியும் சோல்ஜர்கள் செல்வதற்காக ரஸ்தாக்களை அமைத்திருக்கிறார்கள். ரஸ்தாலவப் போடுவதற்கான யந்திரங்கள் தேவை என்று சமஸ்தானங்களுக்கு சமீபகாலத்தில் வேண்டுகோள் செய்யப்பட்டபொழுது அவைகள் நல்ல முறையில் பதிலளித்ததால் எல்லாத் தேவைகளும் பூர்த்தியாகிவிட்டன. ஒரு சமஸ்தானமும் நிர்வாகத்தின் வேண்டுகோளுக்காக யந்திரங்களுக்கும், போக்குவரத்துகளுக்கும் விலையொன்றும் பெற்றுக் கொள்ளவில்லை. இந்தியாவின எல்லா பாகங்களிலும ரஸ்தாக்களையும், விமான தளங்களையும் அமைக்க சமஸ்தானங்கள் தொழிலாளர் படைகளையும் அனுப்பியிருக்கின்றன.

---

இந்திய மன்னர்கள், விமானங்கள், படகுகள், கட்டடங்கள், இயந்திரங்கள், பயிற்சி வசதிகள், வைத்திய உதவி, நன்கொடைகள், மற்ற பலவிதமான சன்மானங்கள் முதலியவற்றை வழங்கியிருக்கிறார்கள். ஒவ்வொரு சமஸ்தானமும் அதன் ஐசுவரியங்களையும், யுத்த இலாக்கா வசம் ஒப்படைத்துவிட்டது. பெரிய சமஸ்தானங்கள் பலவிதமான சாமான்களை சப்ளை செய்திருக்கின்றன.

நைஜாம் நிர்வாகத்தின் ஒத்துழைப்புடன் ஹைதராபாத் சமஸ்தானத்தில் ஒரு யுத்த தளவாட உற்பத்தி தொழிற்சாலை ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. மைசூரில் ஒரு வருஷத்திற்கு 24,000 டன்கள் எஃகும், ஏராளமான வார்ப்புக் குழாய்களும் உற்பத்தி செய்யப்படுகின்றன. அங்கு சமஸ்தானத்தின் எஃகு உற்பத்தியை இரட்டிக்கும் வகையில் 25 டன் உள்ள எஃகு உலைக்களம் அமைக்கப்படுகிறது. மைசூர் சமஸ்தானத்தில் எஃகு உற்பத்திக்காக பெர்ரோ சிலிகானை உற்பத்தி செய்யும் மின்சார உலைக்களம் சமீபகாலத்தில் அமைக்கப்பட்டிருக்கிறது. இவைகள் இந்தியாவின் தேவைகளில் பாதியைப் பூர்த்தி செய்துவிடும். மேலும் மைசூர் சமஸ்தானத்திலுள்ள விமானங்கட்டும் தொழிற்சாலை இந்தியாவின் யுத்த முயற்சியில் முக்கியமான பங்கெடுத்துக்கொண்டிருக்கிறது.

ஆயிரக்கணக்கான சேனைக்குரிய போர்வைகளும், ஆயிரக்கணக்கான கஜங்கள் கொண்ட ரோமத் துணியும், ஆடைகளும் ஹைதராபாத், பரோடா, காஷ்மீர், ஜோட்பூர், ஜிண்ட், நவநகர் முதலிய சமஸ்தானங்களிலிருந்து சப்ளை செய்யப்பட்டிருக்கின்றன. காஷ்மீரும், மைசூரும் குடைகளை உற்பத்தி செய்ய பட்டை சப்ளை செய்திருக்கின்றன. தண்ணீரில் நனையாத துணியை உற்பத்தி செய்யும் இந்தியாவிலுள்ள ஒரு ஆலையை குவாலியர் சமஸ்தானம் நன்கொடை அளித்திருக்கிறது. அதில் ஒவ்வொரு வருஷமும் 8,00,000 ரூபாய் பொருமானமுள்ள துணிகள் உற்பத்தி செய்யப்பட்டிருக்கின்றன.

இந்தியாவின் ரஸாயன சப்ளையின் பெரும்பாகம் சமஸ்தானங்களிலிருந்து கிடைக்கிறது. ரப்பர் சாமான்கள் திருவாங்கூரிலிருந்தும், பரோடாவிலிருந்தும், மைசூரிலிருந்தும் கிடைக்கின்றன. சென்ற வருஷத்தில் திருவாங்கூரிலிருந்து வந்த அநேக மிலியன ராத்தல்களுள்ள ரப்பர், கிழக்கில் பிரிடன் ஸ்தானங்களை இழந்ததினால் ஏற்பட்ட நஷ்டத்துக்கு ஒரு பங்கு ஈடு செய்தது. அநேக காரியங்களுக்காக சமஸ்தானங்கள் 2,15,000 டன்கள் மரத்தை சப்ளை செய்திருக்கின்றன. 1941-1942-ல் இந்தியாவில் யுத்த அவசியத்துக்கு 3,96,000 டன்கள் மரம்தான் தேவைப்பட்டன.

2,50,000 டன்கள் சிமெண்டு சென்ற வருஷம் ஹைதராபாத்தில் மாத்திரம் உற்பத்தி செய்யப்பட்டது. சென்ற வருஷத்தில் சமஸ்தானங்களிலுள்ள ஆலைகளிலிருந்து 7,000 டன்கள் எண்ணெய் பெறப்பெற்றது. சமஸ்தானங்கள் ஆயிரக்கணக்கான டன்கள் உணவுப் பொருள்களையும் சப்ளை செய்திருக்கின்றன.

யுத்தக் கடன்களில் மன்னர்களும், சமஸ்தானங்களின் ஜனங்களும் 3,750 லக்ஷம் ரூபாய்களைப் போட்டிருக்கிறார்கள். ஸமஸ்தானங்கள் 65 மிலியன் ரூபாய்க்கு அதிகமாக பொருள் உதவி செய்திருக்கின்றன.

வைஸ்ராயின் யுத்த நிதிக்கு வந்த தொகையில் பாதி பாகமும் மற்ற தளவாடங்களும், பொருள்களும் சமஸ்தானங்களிலிருந்து வந்திருக்கிறது. ஹைதராபாத்தின் நிஜாம், கடற்

படைக்கு நீர்மூழ்கியைத் தாக்கும் கார்வெட்டிக்கப்பல்களையும், பிரிடிஷ் விமானப்படைக்கு பாம்பர் விமானப்படையையும், அதை பரிபாலிப்பதற்கும், அதற்கு முஸ்தீப்புகளை வழங்குவதற்கும் ஏராளமான தொகையையும் கொடுத்து உதவியிருக்கிறார். இந்த விமானப்படை இத்தாலியப போர்முனையிலும், பர்மாவிலும் சென்றிருக்கிறது. ஹைதராபாத் ஹரிகேன் நிதி மூலம் மற்ற விமானப்படைக்கும் பொருள் திரட்டப்பட்டது. இப்பொழுது பிரிடிஷ் விமானப்படையில் மூன்று ஹைதராபாத் விமானப்படைகள் இருக்கின்றன. பரோடாவும், மைசூரும் இரண்டு பூரணமான சண்டை விமானப்படையை வாங்கப் பொருளுதவி செய்திருக்கின்றன.

## இந்திய யுத்தக் கைதிகள்.

ஜெர்மானியரிடம் 9,994 இந்தியர்கள் யுத்தக்கைதிகளாக இருக்கிறார்கள். ஜப்பானியரிடம் 42,374 கைதிகள் இருப்பதாக உறுதியாகிவிட்டது. 22,036 பேர்கள் கைதியாக இருப்பதாக நம்பப்படுகிறது. 1943-ம் வருஷம் செப்டம்பர் மீ 8௳ அன்று இதாலியில் 5,110 இந்தியக் கைதிகள் இருந்தார்கள். அவர்களில் 773 பேர் விடுவிக்கப்பட்டார்கள். பாக்கிப்பேர்கள் நேசதேசத்தார்கள் இதாலியில் படையெடுத்தபொழுது ஜெர்மனிக்கு கொண்டுபோகப்பட்டார்கள். கொண்டு போகப்படாதவர்கள் தப்பித்துக்கொண்டார்கள்.

## இந்தியாவில் உள்ள எதிரி யுத்தக் கைதிகள்.

இந்தியாவில் 29,499 எதிரி யுத்தக் கைதிகள் இருக்கிறார்கள். அவர்களில் 6 பேர்கள் ஜெர்மானியர்கள்.

## இந்திய அகதிகள்.

பர்மாவிலிருந்து 4 லக்ஷம் இந்திய அகதிகளும், மலேயாவிலிருந்து 5,000 அகதிகளும் இந்தியாவுக்கு வந்தார்கள். 1941-ம் வருஷம் டிஸம்பர் மாதத்துக்குமுன் பர்மாவில் ஒரு மிலியன் இந்தியர்களும், மலேயாவில் எட்டு லக்ஷம் இந்தியரும் இருந்தனர்

## அயல் நாட்டு அகதிகள்.

இந்தியாவில் எல்லா தேசங்களிலிருந்தும் வந்திருக்கும் அகதிகள் 4,05,093 பேர். எதிரி ஆக்கிரமித்திருக்கும் நாடுகளில் அகப்பட்டுக்கொண்டிருக்கும் நபர்களின சொந்தக்காரர்களும், முகாம்களில் போஷிக்கப்படுபவர்களும், அல்லது பொருளுதவி பெறுகிறவர்களும் 1,50,000 பேர்கள்.

## துருப்புகளுக்கு வசதிகள்.

சேவைப்படைகளின் க்ஷேமத்தையும், வசதிகளையும் கவனிக்க வெல்பேர் டிரக்டரேட் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அது பெரிய ஸ்தாபனம். 1943-ம் வருஷம் நவம்பர் மீ முதல் E. N. S. A. இந்தியாவில் வேலைசெய்து வருகிறது. பிரிடிஷ் துருப்புகளுக்கு பொழுது போக்குக்கு ஏற்பாடு செய்வது அதன் பொறுப்பு. 1944-ம் வருஷம் ஸெப்டம்பர் மீத்தில் E. N. S. A. இடம் உள்ள 12 கோஷ்டிகள் இந்தியா பூராவும் சுற்றுப்பிரயாணம் செய்து வந்தன.

இந்தியத் துருப்புகளுக்குப் பொழுதுபோக்குகளை ஏற்படுத்துவதற்காக பிரிட்டிஷ் E.N.S.A.-க்கு மற்றொரு பாகமாக பாஜி-தில்ஸாக்-ஸபா 1944-ம் வருஷம் ஏப்ரல் மீ ஸ்தாபிக்கப்பட்டது. அதில் இப்பொழுது 25 கோஷ்டிகள் இருக்கின்றன. அவைகள் இந்தியாவிலும், ஏழு சமுத்திரங்களிலும் சுற்றுப்பிரயாணம் செய்கின்றன. அதன் கண்ட்ரோலர் சேனையிலுள்ள ஒரு ஆபீஸர். அதன் சிப்பந்திகள் இந்தியப பொதுமக்கள். ஸோல்ஜர்களுக்கான பொழுதுபோக்குகள் பின்கண்டவை. விளையாட்டுகள், வாசிப்பு, ஓய்வு, வயர்லெஸ் கருவிகள், சினிமாக்கள், ஸ்னனகட்டங்கள். இந்த திட்டத்துக்கு ஒரு வருஷத்திற்கு 24 லக்ஷம் ரூபாய் செலவாகிறது.

இந்திய ஸோல்ஜர்களின் சங்கங்கள் சென்ற யுத்தமுடிவில் கலைக்கப்பட்ட ஸோல்ஜர்களுக்குப் பொதுஜன வாழ்க்கையில் ஸ்தானம் அளிக்க அமைக்கப்பட்டன. 1938-ம் வருஷத்தில் 79 மாகாண ஸோல்ஜர் சங்கங்கள் இருந்தன. இன்று பிரிடிஷ் இந்தியாவில் 135-ம் இந்திய ஸமஸ்தானங்களில் 28-ம் இருக்கின்றன. இந்த ஸ்தாபனம் இந்திய சர்வீஸ் படைகளுடையவும், அவர்களின் குடும்பத்தார்களுடையவும் யோக க்ஷேமத்தைக் கவனிக்கிறது.

சேலைப்படைகளின் க்ஷேமத்தைக் கவனிக்க மாஜி சேவாதர்னி திட்டத்தை இந்திய சேனை ஆரம்பித்திருக்கிறது. இது பொதுமக்களின் மாகாண மாலுமிகள், ஸோல்ஜர்கள், விமானிகள் சங்கத்தைத் தவிர உள்ளது. ஸிவில் லியாஸான் ஸ்தானமான மாஜி சேவாதர்னி (இந்திய ராணுவ ஸ்திரீ வெல்பேர் வேலைக்காரர்கள்), ஆண் வெல்பேர் வேலைக்காரர்களிடம் தங்களுடைய குறைகளை எடுத்துரைக்கப் பிரியப்படாத சேவைப் படையினரின் பெண்பிள்ளை சொந்தக்காரர்களை சந்திப்பதற்காக சில மாகாணங்களில் உபயோகப்படுத்தப்படுகிறார்கள்.

### ஒலிபெருக்கும் நிகழ்ச்சிகள்.

இந்திய சேனையின் க்ஷேமத்தைக் கோரும் சேவைகளில் இந்தியத் துருப்புகளுக்கு ஒலி பெருக்குவதும் ஒன்றாகும். பத்திரிகைகளையும், புத்தகங்களையும் படிக்க சந்தர்ப்பப்படாத ஸோல்ஜர்களுக்கு வயர்லெஸ் ஒரு விசேஷ அதிர்ஷ்டம். அதை அவர்கள் நன்கு பயன்படுத்தி கொள்ளுகிறார்கள்.

அகில இந்திய ஒலிபெருக்கும் ஸ்டேஷனை டில்லியிலிருந்து தினசரி இந்தியா, பர்மா, சிலோன், கடல்தாண்டியுள்ள நாடுகள் முதலியவற்றிலுள்ள இந்தியப்படைகளுக்கு ஒரு நிகழ்ச்சி அறிவிக்கப்படுகிறது. இந்தியத் துருப்புகளுக்கு கொலம்போ, பாக்டாட், பேருட், டெஹரான், பாரி, (இதாலி) கெய்ரோவிலிருந்தும், ஒலிபெருக்கு செய்யப்படுகிறது.

குறிப்பிட்ட இடங்களிலிருந்து தினசரி 10 நிமிஷம் பொழுதுபோக்குக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது. அயல்நாடுகளிலுள்ள சேலைப்படையினருக்கு பந்துக்களும், சிநேகிதர்களும் அனுப்பும் செய்திகள் அகில இந்திய ரேடியோவில் சொல்லப்படுகிறது.

ரெக்ரூடிங் லியாஸான் ஆபீஸர்களும், நிரூபர்களும், நகரங்கள், கிராமங்கள், வெல்பேர் சங்கங்கள், கால்நடைகள், வயல்கள், மற்ற குடும்ப யோகக்ஷேமங்கள் முதலியவற்றைப் பற்றிய தொகுத்த தகவல்களும் ஒலிபெருக்கப்படுகின்றன.

குத்தகைக்கடன் திட்டப்படி 4,831 ஒலிபெருக்கும் கருவிகள் பிரிடிஷ் இந்தியப்படைகளுக்கு வழங்கப்பட்டபோதிலும் இன்னும் வெயர்லெஸ் கருவிகளுக்கு அபாரமான தேவை இருக்கிறது.

1943-ம் வருஷம் கிருஸ்துமஸ் பண்டிகையின் பொழுது பிரிடிஷ் இந்தியத் துருப்புகளுக்கு உபரி உணவை வாங்குவதற்காக ஒவ்வொருவருக்கும் நன்கொடை அளிக்கப்பட்டது. மேலும் சகல விதமான நன்கொடைகளும் கடல் தாண்டியுள்ள இந்தியத்துருப்புகளுக்கு அனுப்பப்பட்டன. வைஸ்ராயும், மாகாண கவர்னர்களும் இந்தியப் பொதுமக்களும் நன்கொடை அளித்ததன் மூலமாக கிருஸ்துமஸ் நன்கொடை திட்டத்துக்கு 13 லக்ஷம் ரூபாய் நிதி கிடைத்தது.

### பந்துக்களுக்கு பிரயாணச் சலுகை.

இந்திய ஆஸ்பத்திரிகளில் அபாயமான நோய்வாய்ப்பட்டிருக்கும் இந்திய, பிரிடிஷ் துருப்புகளை அவர்களின் பந்துக்கள் செலவன்னியில் போய்ப்பார்க்கலாம். திரும்பிவரும் பிரயாணத்திற்கு இரண்டு பேருக்கு செலவு தொகை கொடுக்கப்படும். அவர்கள் பந்துவாக இருக்கவேண்டும். பிரிடிஷ் சோல்ஜர்களையும் ஆபீஸர் காடெட்களைச் சேர்ந்தவர்களுக்கும் இந்தச் சலுகை உண்டு.

### புனரமைப்பு.

1944-ம் வருஷம் மார்ச்சு மாதத்தில் அமைக்கப்பட்ட ரீஸெட்டில்மெண்டு டிரக்டெரேட், கலைக்கப்பட்டுத் திரும்பிவரும் சோல்ஜர்களுக்கு வேலை கொடுப்பதற்கு உதவி செய்ய ஒரு திட்டத்தைப் போட்டிருக்கிறது. ஸ்திரீகள் உதவிப்படையினருக்கும் அத்திட்டம் பொருந்தும். முடமாக்கப்பட்டவர்களுக்கு உதவி செய்யவும், பயிற்சி அளிக்கவும் திட்டங்கள் தயாராகி வருகின்றன.

தொழிலாளர் டிபார்ட்மெண்டின் அமுலுக்குட்பட்ட பொதுஜன பயிற்சி முகாம்கள் இப்பொழுது சேவைப்படையினருக்கும், பொதுஜன யுத்த வேலைக்காரர்களுக்கும் அதாவது 30,000 பேர்களுக்கு பயிற்சி அளித்துவருகின்றன. அந்த ஸ்தாபனங்கள், கலைக்கப்பட்டு திரும்பிவரும் சேவைப் படைகளுக்கு தொழில் சம்பந்தமான பயிற்சி அளிக்கும்.

### ஸ்திரீகளின் யுத்த முயற்சி.

அநேக ஸ்திரீ டாக்டர்கள் இந்தியாவிலும், இந்தியாவுக்கு வெளியிலும் சேவை செய்ய வேண்டும் என்ற நிபந்தனையுடன் வைத்திய சேவைக்கு தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

இந்திய ராணுவ தாதிப்படை ராணுவ ஆஸ்பத்திரிகளுக்கும், இந்திய சேனையுடன் செல்லும் வைத்தியப் படைக்கும், இந்திய, ஐரோப்பிய தாதிகளைச் சேர்த்திருக்கிறது. நூற்றுக்கணக்கான இந்தியத் தாதிகள் கடல் தாண்டி சேவை செய்ய தானாகவே ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

இந்திய ராணுவத் தாதிப் படைக்கு கையிருப்பாக இருக்க பயில்விக்கப்பட்ட நர்ஸ்களைத் தருவதற்காக 1941-ம் வருஷம் ஸெப்டம்பர்மீ ஏற்பாடு செய்யப்பட்ட உதவித் தாதிப்படை அனுபவம் பெறாத இந்திய ஸ்திரீகளையும், பயிற்சி பெறாத தாதிகளையும் சேர்த்து அவர்களுக்குப் பயிற்சி அளிக்கிறது.

இந்தியத் தொழிற்சாலைகளில் யுத்த தளவாட உற்பத்தி செய்யும் தொழிலாளர்களில் 13 சத விகிதம் இந்திய ஸ்திரீகள்.

பாஜி சேவாதர்னி அல்லது ஸ்திரீ ராணுவ வெல்பேர் வேலைக்காரர்கள் இந்திய ஸ்திரீகள், பெரும்பாலும் இந்திய ஆபீஸர்களின் மனைவிகள். ராணுவத்தினரின் குடும்பத்தாரை ரக்ஷிக்க அவர்கள் கங்கணம் கட்டிக்கொண்டவர்கள்.

### இந்திய செஞ்சிலுவை.

1939-ல் இந்திய செஞ்சிலுவை ஸ்தாபனம் 5 லக்ஷம் ரூபாய் செலவிட்டது. 1943-ல் 150 லக்ஷம் செலவிட்டது. அதில் 10 சத விகிதம்தான் நிர்வாகச் செலவு. பாக்கிப்பணத்தைக்கொண்டு சாமான்கள் வாங்கப்பட்டது. அந்த ஸ்தாபனம் இந்தியாவிலுள்ள ஆஸ்பத்திரிகளில் இருக்கும் நோய்வாய்ப்பட்டவர்களையும், காயம்பட்டவர்களையும் அயல்நாடுகளிலும் கிழக்கு எல்லைச்சரகத்தில் உள்ளவர்களையும் கவனித்து வருகிறது. எதிரிவசமுள்ள நமது கைதிகளுக்கும் அது உதவி அளித்துவருகிறது.

அது ஆஸ்பத்திரிக்கு 400 பலவிதமான இனங்களை அனுப்புகிறது. முக்கியமாக ஆடைகள், போர்வைகள், சத்ர முஸ்திப்புகள், வார்டுக்கான சாமான்கள், இரும்பு சாமான்கள், உணவு வசதிகள், விளையாட்டு சாமான்கள், சங்கீதக் கருவிகள், வெயர்லெஸ் கருவிகள், காகிதம், புஸ்தகம், சோப்புகள் மற்றும் அநேக சாமான்கள்.

1942-ல் லண்டனில் உள்ள இந்திய வசதிகள் நிதியின் சார்பாக மிஸ்டர் அமெரி 2,00,000 பவுன் செலவில் ஜெனிவாவிலுள்ள சர்வதேச செஞ்சிலுவை மூலமாக ஐரோப்பாவுக்கு 5,40,000 உணவுப் பார்சல்களை அனுப்பினார். இந்தச் செலவை இந்திய செஞ்சிலுவைச் சங்கம் ஒப்புக்கொண்டது.

செயின்ட் ஜான் ஆம்புலன்ஸ் சங்கத்தைச் சேர்ந்த வாலண்டரி பயிற்சிபெற்ற தாதிகளின் சங்கியை யுத்தத்துக்குமுன் 500 ஆக இருந்து இப்பொழுது 4,000 ஆக அதிகரித்துவிட்டது.

---

# யுத்தத்தின் காலானுக்கிரமணிகை—1939—1945.

## 1939

ஸெப்டம்பர் 1 ஜெர்மனி போலந்தைப் படையெடுத்தது.

3 பிரிடனும், பிரான்ஸும் ஜெர்மனிபேரில் போர் தொடுத்தன. ஆதினியா என்னும் கப்பல் அயர்லாந்துக்கு வடமேற்கில் மூழ்கடிக்கப்பட்டது.

27 வார்ஸா விழுந்தது.

| | | |
|---|---|---|
| அக்டோபர் | 11 | சாம்ராஜ்ய விமானப்பயிற்சி திட்டம் வெளியிடப்பட்டது. |
| | | அமெரிக்காவுடன் பண்டம் மாற்றல் ஏற்பாடு செய்யப்பட்டது. |
| | | தகரத்துக்கும், ரப்பருக்கும் பதிலாக மரம். |
| | 12 | சேம்பர்லின் ஹிட்லரின் சமாதான யோசனைகளை நிராகரித்தார். |
| நவம்பர் | 17 | நேசதேச உயர்தர கௌன்ஸில் பொருளாதார ஐச்வர்யங்களைத் திரட்ட திட்டங்களைப்போட்டது. |
| டிஸம்பர் | 13 | பிளேட் நதிப்போர். |
| | 17 | பிளேட் நதிப்போரின் பயனாக ஜெர்மன் யுத்தக் கப்பலான அட்மிரல் கிராப்ஸ்பீ தற்கொலை செய்து கொண்டது. |
| | | கனடியப் படைகளின் முதல் பகுதி பிரிடனுக்கு வந்தது. |
| | 27 | இந்தியப்படைகள் பிரான்ஸிலிறங்கின. |

## 1940

| | | |
|---|---|---|
| பிப்ரவரி | 12 | ஆன்ஸாக்ஸ் படைகளின் முதல் பகுதி சூயசை அடைந்தது. |
| மார்ச்சு | 18 | ஹிட்லரும், முஸோலினியும் பிரென்னர் கணவாயில் சந்தித்தார்கள். |
| | 20 | டாலாடியர் ராஜீனாமாச் செய்தார். |
| | 28 | பரஸ்பர சம்மதமன்னியில் சமாதானத்தையோ, யுத்த நிறுத்தத்தையோ செய்து கொள்ளக்கூடாதென்று உயர்தர யுத்த சபை முடிவு செய்தது. |
| ஏப்ரல் | 9 | ஜெர்மனி டென்மார்க்கைப் படையெடுத்தது. கோபன்ஹேகன் ஆக்கிரமிக்கப்பட்டது. ஜெர்மனி நார்வேயைப் படையெடுத்தது. |
| | 10 | நார்விக்கில் முதல் போர். ஜெர்மனி ஆஸ்லோவிலிருந்து முன்னேறிற்று. |
| | 13 | நார்விக்கில் இரண்டாவது போர். எதிரிகளின் 7 நாசகாரிகள் மூழ்கடிக்கப்பட்டன. |
| | 15 | பிரிடிஷ் படைகள் நார்விக்குக்கருகில் இறங்கின. |
| | 16 | பிரிடிஷ் படைகள் பாரோத் தீவுகளில் இறங்கின. |
| | 16–18 | பிரிடிஷ் படைகள் நாம்ஸாஸில் இறங்கின. |
| | 18–19 | பிரிடிஷ் படைகள் ஆண்டால்ஸ்நெஸிலிறங்கின. |
| | 20 | நார்வேயில் பிரெஞ்சுப்படைகள் இறங்கியதாக அறிவிப்பு. |
| | 23–24 | டிராண்ஹீமை பிரிடிஷ் படைகள் அடையக்கூடவில்லை. |
| மே | 2 | நேசப்படைகள் நாம்ஸாஸில் கப்பலேறின. (இது மேமீ 3-ம் தேதியில் வெளி வந்தது). |
| | 3 | நார்வேயில் போலிஷ் படைகள் இறங்கியதாக அறிவிப்பு. |
| | 10 | ஜெர்மனி, ஹாலந்து, பெல்ஜியம், லக்ஸம்பர்க்கைப் படையெடுத்தது. |
| | | பிரிடிஷ், பிரெஞ்சுப்படைகள் பெல்ஜியத்துக்குள் நுழைந்தன. ஜெர்மனி மாஸ் நதியை ஆர்ன்ஹீமில் தாண்டிற்று. பிரிடிஷ் படைகள் ஐஸ்லாந்தில் இறங்கின. சர்ச்சில் பிரதம மந்திரி ஆனார். |
| | 11 | பிரிடிஷ் யுத்த நிர்வாக சபை அமைக்கப்பட்டது. |
| | 13 | டச்சு நிர்வாகம் வேறு இடத்திற்குச் சென்றது. |

| | | |
|---|---|---|
| மே | 14 | பிரிடனில் உள்நாட்டு தற்காப்பு வாலண்டியர் படைக்கு திட்டம் போடப்பட்டது. ராட்டர்டாம்பேரில் வெடிகுண்டு வீசப்பட்டது (50,000 பேர்களுக்குக் காயம் பட்டதில் 30,000 கொல்லப்பட்டார்கள்). ஹாலந்து சரணடைந்தது. |
| | | வில்ஹெல்மினு ராணி லண்டனுக்கு வந்தார். |
| | 15 | ஜெர்மனி மியூஸ் நதியைத் தாண்டிச்சென்றது. |
| | | பிரிடிஷ் படைகள் பிரஸ்ஸல்ஸுக்கு மேற்கில் வாபஸாகின. |
| | 24 | ஜெர்மனி கால்வாய்க் கரையிலுள்ள துறைமுகங்களுக்கு முன்னேறிற்று. |
| | 28 | நார்விக் விழுந்தது. பெல்ஜியசேனை சரணடைந்தது. |
| மே—28 ஜுன் | 3 | டன்கர்க்கிலிருந்து பின்வாங்குவது. 224,585 பிரிடிஷ், 112.546 பிரெஞ்சு, பெல்ஜியத்துருப்புகள் பின்வாங்கின. 222 பிரிடிஷ் கப்பல்களும், 635 மற்ற பிரிடிஷ் படகுகளும் இந்த நடவடிக்கையில் ஈடுபட்டன. |
| | | பிரிடனுக்குப் பின்கண்ட நஷ்டங்கள் ஏற்பட்டன—700 டாங்கிகள்—2,400 பீரங்கிகள், 50,000 வாஹனங்கள். 13,000 பேர்கள் கொல்லப்பட்டார்கள். 40,000 பேர்கள் P. O. W. |
| ஜுன் | 3 | பாரிஸ்பேரில் குண்டுகள் வீசப்பட்டன. |
| | 5 | பிரான்ஸுக்கான போர். ஜெர்மானியர்கள் சோம் நதியையும் ஏயின் ஆயிஸி நதியையும் தாண்டினார்கள். ருஷ்யாவுக்கு அயல்நாட்டு ஸ்தானிகராக கிரிப்ஸ் அனுப்பப்பட்டார். |
| | 11 | பிரெஞ்சுப்படைகள் மார்ன் நதியைத் தாண்டி பின்வாங்கின. |
| | | இதாலி பிரிடனுடனும், பிரான்ஸுடனும் போர் தொடுத்தது. |
| | 13 | பாரிஸ் ராணுவ ரக்ஷணையற்ற நகரம் என்று வெளியிடப்பட்டது. |
| | 14 | ஜெர்மானியர்கள் பாரிஸுக்குள் நுழைந்தார்கள். |
| | 16 | பிரிடிஷ்-பிரெஞ்சு ஒப்பந்தத்துக்காக பிரிடன் செய்த கோரிக்கையை பிரெஞ்சு நிர்வாகம் நிராகரித்தது. ரெயினாட் ராஜினாமாச் செய்தார். பிடேயன் புதிய நிர்வாகத்தை அமைத்தார். |
| | 17 | பிரான்ஸிலிருந்து பிரிடிஷ் படைகளின் வாபஸ் பூர்த்தியாகிற்று. போரை நடத்தும்படி பிரெஞ்சு மக்களுக்கு டிகால் ஒலிபரப்பில் வேண்டுகோள் செய்தார். |
| | 18 | ஹிட்லரும், முஸோலினியும் மூனிக்கில் சந்தித்தார்கள். |
| | 25 | பிரான்ஸில் போர் நின்றது. |
| | | ஜெர்மனியின் யுத்த நிறுத்த ஷரத்துகள் ஒப்புக்கொள்ளப்பட்டன. |
| | 26 | போரைத் தொடர்ச்சியாக நடத்துவோம் என்று டிகால் பிரகடனம் செய்தார். |
| | 28 | சிறந்தத் தொழிலாளர்களைத் திரட்ட வைஸ்ராய் புதிய சட்டத்தை இயற்றினார். |
| ஜுலை | 4 | இதாலியர்கள் கஸாலாவையும், காலாபாத்தையும் ஆக்கிரமித்தார்கள். |
| | | பிரிடிஷ் துறைமுகங்களிலுள்ள பிரெஞ்சுக் கப்பல்கள் கைவசப்படுத்தப்பட்டன. |
| | 5 | பிடேயனின் நிர்வாகம் பிரிடனுடன் இருந்த ராஜதந்திர உறவுகளை ரத்து செய்தது. |
| | 15 | இதாலியர்கள் மோயேலைத் தாக்கினார்கள், பிரிடிஷ் படைகள் வாபஸாகின. |

| | | |
|---|---|---|
| ஆகஸ்டு | 2 | பீவர்புருக் நிர்வாக சபை மெம்பரானார். |
| | 4 | ஸோமாலிலாந்து படையெடுக்கப்பட்டது. |
| ஆகஸ்டு 8– அக்டோபர் | 31 | பிரிட்டனுக்கான போர்—பிரிடிஷ் சண்டை விமானங்களும், விமான எதிர்ப்புப் பீரங்கிகளும் பகலில் 2,375 எதிரி விமானங்களை அழித்தன. பிரிடிஷ் விமானப்படை 733 விமானங்களை இழந்தது. 375 விமானிகள் உயிரிழந்தனர். |
| | | 1940-ம் வருஷம் ஆகஸ்டு ஸெப்டம்பர் மாதத்தில் ஐந்து தடவைகளில் பிரிடிஷ் விமானப்படை தினசரி 100 எதிரி விமானங்களைச் சுட்டு வீழ்த்தியது. ஆகஸ்டு 15-ம் தேதி எதிரியின் 181 விமானங்களும் ஸெப்டம்பர் 15-ம் தேதி 185 விமானங்களும் சுட்டு வீழ்த்தப்பட்டன. |
| ஆகஸ்டு | 16 | பிரிடிஷ் படைகள் பிரிடிஷ் ஸோமாலிலாந்தைக் காலிசெய்தன. |
| ஸெப்டம்பர் | 3 | பிரிடிஷ், அமெரிக்க ஒப்பந்தம் ஏற்பட்டது. நியூபௌண்ட்லாந்திலும், பெர்முடாவிலுமுள்ள கடற் விமான தளங்கள் அமெரிக்காவுக்கு இனாமாகக் கொடுக்கப்பட்டன. ஜெமேயிகா, ஸெயிண்ட்லூஷியா, டிரினிடாட், ஆண்டிகுவா, பிரிடிஷ் கயானாவிலுள்ள தளங்கள் 50 நாசகாரிகளுக்குப் பதிலாக பரிவர்த்தனை செய்யப்பட்டன. |
| | 9 | அமெரிக்காவின் முதல் நாசகாரி கைவசமாகிற்று. |
| | 14 | இந்தியப் படைகள் எகிப்துக்கு வந்துசேர்ந்தன. |
| அக்டோபர் | 25 | புதிய டில்லியில் வைஸ்ராய் கிழக்கு வட்டார நாடுகளின் மகாநாட்டை ஆரம்பித்தார். |
| | 28 | இதாலியர்கள் கிரீஸைப் படையெடுத்தார்கள். |
| நவம்பர் | 11–12 | கடல் விமானங்கள் டாரண்டா துறைமுகத்திலுள்ள இதாலியக் கப்பற் படையைத் தாக்கின. |
| | 23 | இந்தியத் தொழிலாளர்களுக்கும், மாலுமிகளுக்கும் பெவின் புதிய திட்டத்தை நிறுவினார். |
| டிஸம்பர் | 9 | வேவல் சிரேனெகாவில் முன்னேறித் தாக்க ஆரம்பித்தார். |
| | 11 | 4-வது இந்திய டிவிஷன் இதாலியக் கோட்டைகளை நொருக்கி சித்தி பரானியைப் பிடித்தது. |

## 1941

| | | |
|---|---|---|
| ஜனவரி | 18 | கஸாலா திரும்பிப் பிடிக்கப்பட்டது. |
| | 22 | டோப்ருக் பிடிபட்டது. |
| பிப்ரவரி | 1 | அகார்டாட் பிடிபட்டது. |
| | 2 | எல் அகேலாவைப் படைகள் அடைந்தன. |
| | 5 | பெங்காசி பிடிபட்டது. |
| | 1–27 | கெரன் முற்றுகை. பிப்ரவரி 27-ம் தேதியன்று இந்தியத் துருப்புகள் கெரனைப் பிடித்தன. |
| | 15 | கிஸ்மேயோ பிடிபட்டது. |
| | 25 | மோகடிஷூ பிடிபட்டது. |

| | | |
|---|---|---|
| மார்ச்சு | 4 | லோபாடனில் முதல் விமானநடவடிக்கை, மீன எண்ணெய் தொழிற் சாலையும், கப்பல்களும் அழிக்கப்பட்டன. |
| | 11 | ஜனாதிபதி ரூஸ்வெல்ட் குத்தகைக் கடன் மசோதாவில் கையெழுத் திட்டார். |
| | 28 | மாடாபான் முனைப்போர். |
| | 30 | கெரனைப் பிடித்ததில் இந்திய கவசம் பூண்ட படைகள் செய்த சேவையைப் பாராட்டி வைஸ்ராயிக்கு மாட்சிமைதங்கிய மன்னர்பிரான் செய்தி அனுப்பினர். |
| ஏப்ரல் | 2 | பிரிடிஷ் படைகள் மெர்ஸா பிரேகாவிலிருந்து வாபஸானார்கள். |
| | 3 | எரிட்ரியா தரை நடவடிக்கையில் பிரிடிஷ் கடற்படை முக்கியமான பங்கெடுத்துக்கொண்டதென்று சொல்லப்பட்டது. |
| | | பிரிடிஷ் படைகள் பெங்காஸியைக் காலிசெய்தன. |
| | | இராக்கில் ராஷித்ஆலி கிளர்ச்சி செய்தான். |
| | 6 | அடிஸ் அபாபா ஆக்கிரமிக்கப்பட்டது. ஜெர்மானியர்கள் கிரீஸையும், யூகோஸ்லாவையும படையெடுத்தார்கள். பிரிடிஷ் சாம்ராஜ்யப் படைகள் கிரீஸுக்கு வந்தன. |
| | 13 | டோப்ருக் முற்றுகை ஆரம்பித்தது. ஜெர்மானியர்கள் பார்டியாவைப் பிடித்தார்கள். |
| | 17 | இராக்கிலுள்ள எண்ணெய் வரும் மார்க்கத்தைக் காப்பாற்ற ஒரு இந்தியப்படை இறக்கப்பட்டது. |
| | 19 | பிரிடிஷ், இந்திய, மற்ற சாம்ராஜ்யப் படைகள் பாஸ்ராவுக்கு வந்தன. |
| ஏப்ரல் 2-ஜூன் | 15 | ஜெர்மானியர்கள் வடக்கு ஆபிரிக்காவில் எதிர்த்தாக்குதல் செய்தார்கள். |
| ஏப்ரல் 25—மே | 2 | கிரீஸிலிருந்து சாம்ராஜ்யப்படைகள் பின்வாங்கின. |
| | 27 | ஜெர்மானியர்கள் ஆதென்ஸை ஆக்கிரமித்தார்கள். |
| | 28 | ஜெர்மானியர்கள் சொலத்தை கைப்பற்றினர்கள். |
| மே | 5 | ஹெயிலி செலாஷி அடிஸ் அபாபாவுக்குள் நுழைந்தார். |
| | 10 | ருடால்ப் ஹெஸ் ஸ்காட்லாந்திலிறங்கினர். |
| | 19 | அம்பா அலாகியில் அயோஸ்டா பிரபு சரணடைந்தார். |
| | 20 | ஜெர்மானியர்கள் கிரீட்டில் படையெடுத்தார்கள். |
| | 27 | பிஸ்மார்க் மூழ்கடிக்கப்பட்டது. |
| | 31 | பிரிடிஷ் துருப்புகள் பாக்டாட்டுக்குள் நுழைந்தன. கலகம் முடிந்தது. எமிர் அப்துல் இலா மறுபடியும் ஸ்தானத்தில் வைக்கப்பட்டார். |
| ஜூன் | 1 | கிரீட்டிலிருந்து பிரிடிஷ் படைகள் வாபஸ் பெறப்பட்டன. பிரிடிஷ், சாம்ராஜ்யப்படைகள் பின் வாங்கின. 17,000 துருப்புகள் எகிப்துக்குச் சென்றன. |
| | 8 | நாலாவது இந்திய டிவிஷனைச் சேர்ந்த 5-வது தரை பிரிகேட் டாமாஸ்கஸை நோக்கி முன்னேறிற்று. |
| | 22 | ஜெர்மனி ருஷ்யாவைப் படையெடுத்தது. |
| | 30 | லௌ பிடிபட்டது. |
| ஜூலை | 1 | ரீகா பிடிபட்டது. |
| | 14 | நேசதேசப் படைகள் ஸிரியாவை ஆக்கிரமித்தன |

| | | |
|---|---|---|
| ஆகஸ்டு | 14 | அட்லாண்டிக் ஸாஸனத்துக்காக சர்ச்சிலும், ரூஸ்வெல்டும் சந்தித்துப் பேசினார்கள். |
| | | ருஷ்யர்கள் ஸ்மாலென்ஸ்கைக் காலிசெய்து விட்டதாகச் சொன்னார்கள். |
| | 18 | ஜெர்மானியர்கள் கிங்கிசெப்பைப் பிடித்தார்கள். லெனின்கிராட் பயமுறுத்தப்பட்டது. |
| ஸெப்டம்பர் | 9 | பாரஸீக நிர்வாகம் பிரிடனுடனும், அமெரிக்காவுடனும் ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டது. |
| | 19 | பிரிடிஷ் படைகள் டெஹரானை அடைந்தன. ஜெர்மானியர்கள் கீவை ஆக்கிரமித்தார்கள். |
| அக்டோபர் 5<br>டிஸம்பர் 6 | | மாஸ்கோவுக்கான போர். |
| அக்டோபர் | 16 | ஓடஸ்ஸா விழுந்தது. |
| | 20 | ஜெர்மானியர்கள் மாஸ்கோவுக்கு வடக்கிலும், மேற்கிலும், தெற்கிலும், 25 முதல் 30 மைல்களுக்குள் வந்து விட்டார்கள். |
| நவம்பர் | 1 | ஸெபாஸ்டபூல் பயமுறுத்தப்பட்டது. |
| | 7 | அமெரிக்க சாமான் கப்பல்களுக்கு கவசம் அமைத்து போர் வட்டாரங்களுக்குச் செல்ல அனுமதிக்க முடிவு செய்யப்பட்டது. |
| | 13 | அமெரிக்க நடுநிலைமைச் சட்டம் திருத்தி அமைக்கப்பட்டது. |
| | 16 | ஜெர்மானியர்கள் கெர்ச்சைப் பிடித்தார்கள். |
| | 22 | ஜெர்மானியர்கள் ராஸ்டாவுக்குள் நுழைந்தார்கள். |
| | 27 | பிரிடிஷ் படைகள் டோப்ருக்கை விடுவித்தன. |
| | 28 | ருஷ்யர்கள் ராஸ்டாவை திருப்பிப் பிடித்தார்கள். |
| டிஸம்பர் | 7 | ஜப்பான் பெர்ல் துறைமுகத்திலுள்ள அமெரிக்க கடல் ராணுவ விமான தளங்களை விமானங்களால் தாக்கிற்று. மேலும் மணிலா, ஷாங்கே, மலேயா, தாய்லாந்து, ஹாங்காங் முதலிய இடங்களும் விமான மூலம் தாக்கப்பட்டன. |
| | 8 | பிரிடனும், சாம்ராஜ்ய நாடுகளும் ஜப்பானுடன் போர் தொடுத்தன. |
| | | அமெரிக்கா, ஜப்பான் பேரில் போர் தொடுத்தது. |
| | | இதாலி, ஜெர்மனி, ஜப்பான் பேரில் சைனா போர் தொடுத்தது. |
| | | ஜப்பானியர்கள் ஹாங்காங்கைத் தாக்கினார்கள். |
| | | ஜப்பானியப் படைகள் தாய்லாந்தில் மலேயே எல்லைக்கருகில் இறங்கின. |
| | 10 | பிரிடிஷ் கப்பலான பிரின்ஸ் ஆப் வேல்ஸும், ரிப்பல்ஸும் மூழ்கடிக்கப்பட்டன. |
| | 11 | இதாலியும், ஜெர்மனியும் அமெரிக்கா பேரில் போர் தொடுத்தன. |
| | | அமெரிக்க காங்கிரஸ் ஜெர்மனியுடனும், இதாலியுடனும் போர் தொடுத்தது. |
| | 17 | பிரிடிஷ் படைகள் பெங்காஸியைப் பிடித்தன. |
| | 22 | ஜப்பானியர்கள் பிலிப்பைன்ஸை பலமாகத் தாக்கினார்கள். |
| | 23 | வாஷிங்டனில் பிரிடிஷ் அமெரிக்க யுத்த சபையின் முதல் கூட்டம். |
| | 24 | லூஸானில் மேலும் ஜப்பானியப் படைகள் இறங்கின. |
| | | மணிலா விமான மூலம் தாக்கப்பட்டது. |
| | | லிபியாவிலுள்ள இந்தியப் படைகள் பார்ஸியை ஆக்கிரமித்தன. |

டிஸம்பர் 25 ஹாங்காங் சரணடைந்தது.

அங்கு 4,000 பிரிடிஷ் படைகளும், 2,000 இந்தியர்களும், 2,000 கனடியர்களும் 6,000 உள்நாட்டு வாலண்டியர் படையும் இருந்தன.

26 லபாடனில் இரண்டாவது விமானத் தாக்குதல்.

மணிலா ராணுவ ரக்ஷணையற்ற நகரமென்று சொல்லப்பட்டது.

வாஷிங்டனில் காங்கிரெஸ்ஸில் சர்ச்சிலின் பிரசங்கம்.

# 1942

ஜனவரி 2 மணிலாவும், காவைட்டும் விழுந்தன.

3 பிரிடன், அமெரிக்கா, ருஷ்யா, சைனு, ஹாலந்து, இந்தியா உள்பட 26 தேசங்கள் அச்சுநாடுகளுக்கு விரோதமாக கூட்டு அறிக்கையில் கையொப்பமிட்டன.

8 ரொம்மல் எல் அகேலாவுக்கு பின் வாங்கினர்.

23 ஜப்பானியர்கள் ரங்கூனை விமானங்களால் தாக்கினர்கள்.

27 வாஷிங்டனில் அமைக்கப்படவேண்டிய நிர்வாகிகளின் கமிட்டியின் தலைவர்களையும், லண்டனில் அமைக்கப்படவேண்டிய பஸிபிக் கவுன்ஸில் அங்கத்தினர்களையும், அமெரிக்க தரை, விமானப்படைகள் பிரிடனில் பிரிடிஷ் படைகளுடன் சேரவேண்டுமென்பதையும் சர்ச்சில் வெளியிட்டார்.

சாம்ராஜ்ய நாடுகளுக்கு யுத்த சபையில் பிரதிநிதித்வம் அளிக்கப்பட்டது.

23–27 ஜப்பானியப் படைகள் நியூகினியாவில் லேயில் இறங்கின.

ஜப்பானியர்கள் சாலமன்ஸ் தீவுகளில் இறங்கினர்கள்.

28 ருஷ்யர்கள் டானட்ஸ் நதியின் ஆரம்பத்தில் யூக்ரேனுக்குள் நுழைந்தார்கள்.

30 பிரிடிஷ் படைகள் சிங்கப்பூர் தீவுக்குப் பின்வாங்கின.

31 ஜப்பானியர்கள் மோல்மீனை ஆக்கிரமித்தார்கள்.

பிப்ரவரி 9 மார்ஷல் சியாங்கே ஷேக் டில்லிக்கு விஜயம் செய்தார்.

12 யுத்த சபையிலும், பஸிபிக் யுத்த கௌன்ஸிலிலும் இந்தியாவுக்குப் பிரதிநிதிகள் உண்டென்று புதிய டில்லியில் வெளியிடப்பட்டது.

15 சிங்கப்பூர் விழுந்தது.

17 பிரிடிஷ் இந்திய விமானிகள் பர்மாவிலுள்ள எதிரி ஸ்தானங்களைத் தாக்கினர்கள்.

மார்ச்சு 7–9 ரங்கூன் காலி செய்யப்பட்டது.

பெகுவிலிருந்த பிரிடிஷ் படைகள் விடுவிக்கப்பட்டன.

23 ஜப்பானியர்கள் அந்தமான் தீவுகளை ஆக்கிரமித்தார்கள்.

27–28 ஸெயிண்ட் நாஸிரே வெடி விமானங்களால் தாக்கப்பட்டது. முக்கியமான யுத்தக் கப்பல்களைப் பழுது பார்க்கும் தளம் அழிக்கப்பட்டது.

ஏப்ரல் 6 ஜப்பானியர்கள் முதன் முதலாக இந்தியாவில் வெடி குண்டுகளைப் போட்டார்கள்.

மதராஸ் மாகாணத்தில் உள்ள காகிநாடாவும், விசாகப்பட்டணமும் தாக்கப்பட்டன.

ஜப்பானியர்கள் போகன்வில்லியில் இறங்கினர்கள்.

| | | |
|---|---|---|
| ஏப்ரல் | 16 | மாட்சிமைதங்கிய மன்னர்பிரான் மால்டாவுக்கு ஜார்ஜ்கிராஸ் பதக்கம் வழங்கினர். |
| | 18 | அமெரிக்க தொழில்பயிற்சி கோஷ்டி டில்லிக்கு வந்தது. |
| | 29 | லாஷியோ விழுந்தது. |
| | | மாண்டலே காலி செய்யப்பட்டது. |
| | | பிரிடிஷ் படைகள் இந்தியாவுக்கு வாபஸ் ஆயின. |
| | | ஐந்தில் நாலுபாகம் இந்தியாவுக்குப் பின்வாங்கிற்று. |
| மே | 4–7 | பிரிடிஷ் படைகள் மடகாஸ்கரில் இறங்கின. |
| | | டீகோ, சுவாரஸ் பிடிபட்டது. |
| | 4–8 | பவழக்கடல் யுத்தம். |
| | | ஜப்பானியக் கடற்படை பலமான நஷ்டத்துக்குப்பின் பின்வாங்கிற்று. |
| | 6 | காரி கட்டாரிலிருந்த படைகள் சரண்புகுந்தன. |
| | 15 | பர்மாவிலிருந்து பின்வாங்கிய பிரிடிஷ் படைகள் முதன் முதலாக இந்திய எல்லைச்சரகத்தை அடைந்தன. |
| | 26 | யுத்த சமயத்திலும் யுத்தத்துக்கு பின்னும் பூரணமாக ஒத்துழைப்பது என்ற ஷரத்துக்கள் உள்ள 20 வருஷ பிரிடிஷ் ருஷ்ய ஒப்பந்தம் லண்டனில் கையொப்பமிடப்பட்டது. |
| | 30-31 | பிரிடிஷ் விமானப்படையைச்சேர்ந்த 1,130 வெடி விமானங்கள் கொலோனைத் தாக்கின. |
| ஜூன் | 1–2 | பிரிடிஷ் 1,036 வெடி விமானங்கள் எஸ்ஸனைத் தாக்கின. |
| | 10 | ருஷ்யாவில் ஜெர்மனியின் வேனிர்காலத் தாக்குதல் ஆரம்பமாகிற்று. |
| | | வைஸ்ராய் நிர்வாக சபையின் யுத்த ஐச்வர்ய கமிட்டியின் அங்கத்தினர்கள் நியமனம். |
| | 11 | கிளஸ்டர் பிரபு இந்தியாவுக்கு படைகளைப் பார்வையிட வந்தார். |
| | 21 | ஜெர்மானியர்கள் டோப்ருக்கைப் பிடித்தார்கள். |
| ஜூலை | 1 | ஜெர்மானியர்கள் எல் அலாமீனை அடைந்தார்கள். ஜெர்மானியர்கள் எழுமாத முற்றுகைக்குப்பின் செவாஸ்டபூலைத் திரும்பிப் பிடித்தார்கள். |
| | 2 | வைஸ்ராயின் நிர்வாக சபை விஸ்தரிக்கப்பட்டது. முதலாவது இந்திய தற்காப்பு மெம்பர் நியமிக்கப்பட்டார். யுத்த சபைக்கும் பஸிபிக் யுத்த கௌன்ஸிலுக்கும் இந்திய பிரதிநிதிகளின் பெயர்கள் வெளியிடப்பட்டன. |
| ஆகஸ்டு | 12 | சர்ச்சில் மாஸ்கோவுக்கு விஜயம் செய்தார். |
| | 19 | டிப்பியை கமாண்டோப் படைகள் தாக்கின. |
| ஸெப்டம்பர் | 6 | ஜெர்மானியர்கள் நோவோரோஸிஸ்கைப் பிடித்தார்கள். |
| | 12 | ஜெர்மானியர்கள் ஸ்டாலின்கிராட் தெருக்களில் புகுந்துவிட்டார்கள். |
| அக்டோபர் | 23 | மாண்ட்காமரி எல் அலாமீனில் தாக்க ஆரம்பித்தார். |
| நவம்பர் | 2 | நேசதேசப்படைகள் கொகொடாவைப் பிடித்தார்கள். |
| | 3 | எகிப்தில் அச்சுப்படைகள் பின்வாங்க ஆரம்பித்தன. |
| | 8 | நேசதேசப்படைகள் வடமேற்கு ஆபிரிக்காவில் இறங்கின. கஸாபிளாங்கா, ஓரான், ஆல்ஜியர்ஸ் பிடிபட்டன. |
| | 11 | டச்சு எண்ணெய்க் கப்பல்களுக்குத் துணைக்காவல் செய்த இரண்டு ஜப்பானிய நாசகாரிகளை பெங்கால் என்ற கப்பல் திறத்துடன் எதிர்த்துப் போராடியது. |

நவம்பர் 13 பிரிடிஷ் படைகள் டோப்ரூக்கைப் பிடித்தன.

16 பிரிடிஷ் 1-வது சேனை னேிஸியாவுக்குள் புகுந்தது.

20 பிரிடிஷ் படைகள் பெங்காஸியைப்பிடித்தன.

25 ஆஸ்திரேலியர்கள் கோனுவைப் பிடித்தார்கள்.

டிஸம்பர் 15 பிரிடிஷ் படைகள் எல் அகெலாவைப் பிடித்தன.

20 ஜப்பானியர்கள் கல்கத்தாவை முதல் முதலாக விமானமூலம் தாக்கினார்கள்.

# 1943

ஜனவரி 2 நேசதேசப்படைகள் பூனுவை ஆக்கிரமித்தன.

14—24 ரூஸ்வெல்டும், சர்ச்சிலும் மற்ற கிப்பந்திகளின் தலைவர்களும் கஸா பிளாங்காவுக்கருகில் சந்தித்தார்கள். "நிபந்தனையற்ற சரணாகதி" மகாநாடு என்று அதற்கு பெயர் வழங்கப்பட்டது.

16 ஜெர்மனி, இதாலி, ஜப்பான் பேரில் இராக் போர் தொடுத்தது.

23 பிரிடிஷ் படைகள் டிரிபோலியைப் பிடித்தன.

30 அடானு மகாநாடு. சர்ச்சில் இனோனுவை சந்தித்தார்.

பிப்ரவரி 2 ஸ்டாலின்கிராட்டில் ஜெர்மனியின் எதிர்ப்பு முடிந்தது. 300,000 ஸோல்ஜர்களுள்ள ஜெர்மன் ஆறுவது சேனை பூராவாக அழிக்கப்பட்டது.

25 பிரிடிஷ் விமானப்படை ஜெர்மன் நகரங்களை வரிசையாகத் தாக்க ஆரம்பித்தது.

மார்ச்சு 2 பிஸ்மார்க் கடல் யுத்தம் துவங்கிவிட்டது.

20 பிரிடிஷ் படைகள் மாரெத்தைப்பிடித்தார்கள். 4-வது இந்திய டிவிஷன் முக்கியமான பங்கெடுத்துக்கொண்டது.

29 பிரிடிஷ் படைகள் காபாஸ், எல் ஹம்மாவைப் பிடித்தன.

எப்ரல் 6 பிரிடிஷ் படைகள் அகாரித் ஸ்தானத்தைப் பிடித்தார்கள்.

7 8-வது சேனை அமெரிக்கர்களுடன் தொடர்பு ஏற்படுத்திக்கொண்டது.

7—10 ஹிட்லரும், முஸோலினியும் பூரரின் தலைமைகாரியாலயத்தில் சந்தித்தார்கள்.

10 பிரிடிஷ் படைகள் ஸ்பாக்ஸைப் பிடித்தன.

12 பிரிடிஷ் படைகள் ஸௌஸியைப் பிடித்தன.

மே 11 அமெரிக்கப் படைகள் அட்டுத் தீவிலிறங்கின. சர்ச்சில் வாஷிங்டனுக்கு வந்தார்.

12 வட ஆபிரிக்காவில் அச்சு நாடுகளின் ஏற்பாடான எதிர்ப்பு நின்றது.

20 மத்திய பர்மாவில் 3 மாத காலம் விங்கேட்டிடமுள்ள கமாண்டோப் படைகள் சஞ்சாரம் செய்தன என்று வெளியிடப்பட்டது.

30 அட்டுவில் ஜப்பானியர்களின் பூரா எதிர்ப்பு நின்றது.

ஜூன் 7 தேசிய விடுதலை பிரெஞ்சு கமிட்டியின் அங்கத்தினர்கள் வெளியிடப்பட்டது.

11 நேசதேசப்படைகள் பாண்டலேரியாவை ஆக்கிரமித்தன.

12 லாம்படுஸா சரணடைந்தது. மாட்சிமைதங்கிய மன்னர்பிரான் வடக்கு ஆபிரிக்காவுக்கு வந்தார்.

13 லினோஸா சரணடைந்தது.

| | | |
|---|---|---|
| ஜூலை | 9—10 | ஸிஸிலியில் படையெடுப்பு. இந்தியப்படைகள் தீவின் தெற்குக் கரையில இறங்கின. |
| | 15 | ருஷ்யர்கள் ஓரலுக்கு வடக்கிலும், கிழக்கிலும் புதிய தாக்குதலைச் செய்தார்கள். |
| | 25 | முஸோலினி ராஜினமாச் செய்தான். பொடாக்லியோ இதாலிப் பிரதம மந்திரி ஆனர். |
| ஆகஸ்டு | 10 | சர்ச்சில் கியூபெக் மகாநாட்டிற்கு வந்தார். |
| | 17 | மெஸ்ஸின பிடிப்பட்டது. ஸிஸிலியில் எதிரியின் எதிர்ப்பு நின்றது. |
| | 25 | மௌண்ட் பேடன் பிரபு தென் கிழக்கு ஆசியா கமாண்டின் நேசதேச உயர்தர கமாண்டராக நியமிக்கப்பட்டார். |
| ஸெப்டம்பர் | 3 | நேசதேசப் படைகள் இதாலியில் இறங்கின. |
| | | ஜோட்பூர் காலாட் படையின் ஒரு பகுதிதான் முதல் முதலில் இதாலிய பூமியில் காலடி வைத்தது. |
| | 8 | ஈஸன்ஹவர் இதாலி நிபந்தனையற்ற சரணுகதி செய்ததென்று வெளியிட்டார். |
| | 11 | இதாலிய கடற்படை சரணடைந்தது. |
| | 22 | சிறிய நீர்மூழ்கிகள் ஜெர்மன் யுத்தக் கப்பலான டிர்பிட்ஸைத் தாக்கின. |
| | 27 | போக்கியா பிடிபட்டது. |
| அக்டோபர் | 1 | நேபிள்ஸ் விழுந்தது. |
| | 4 | கார்சிகா விடுவிக்கப்பட்டது. |
| | 12 | மதராஸ் முதல் முதலில் விமானங்களால் தாக்கப்பட்டது. |
| | 13 | இதாலி ஜெர்மனியுடன் போர் தொடுத்தது. |
| | 18 | அயல்நாட்டு மந்திரிகள் மாஸ்கோவில் கூடிப்பேசினர்கள். |
| நவம்பர் | 9 | வாஷிங்டனில் நேசதேச கஷ்டநிவாரண புனருத்தாரண ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது. |
| | 22 | கெயிரோ மகாநாடு. ரூஸ்வெல்ட், சியாங்கே ஷேக், சர்ச்சில் சந்திப்பு. |
| | 28 | டெஹரான் மகாநாடு. ரூஸ்வெல்ட், ஸ்டாலின், சர்ச்சில் சந்திப்பு. |
| | 29 | ஸ்டாலின்கிராட் கத்தி ஸ்டாலினுக்கு வழங்கப்பட்டது. |
| டிஸம்பர் | 24 | ஐரோப்பிய விடுதலை சேனையின் கமாண்டர்களின் பெயர்கள் வெளியிடப்பட்டன. |
| | 26 | ஜெர்மன் யுத்தக் கப்பலான ஷார்ன்ஹார்ஸ்ட் மூழ்கடிக்கப்பட்டது. |

## 1944

| | | |
|---|---|---|
| ஜனவரி | 23 | நேசதேசப் படைகள் ரோமுக்குத் தெற்கிலிறங்கின. |
| பிப்ரவரி | 2 | பிரிடனுக்கும், தேசிய விடுதலை பிரெஞ்சு கமிட்டிக்கும் செல்வ, பரஸ்பர உதவி ஒப்பந்தம் ஏற்பட்டது. |
| | 26 | செம்படை வடக்கில் பீபஸ், பெஸ்காவ் ஏரிகளை நோக்கி முன்னேறியது. |
| | 28 | அரகானில் ஜப்பானியர்கள் பின்வாங்கினர்கள். |
| மார்ச்சு | 1 | நேசதேசப்படைகள் அட்மிரால்டி தீவுகளிலிறங்கின. |
| | 17 | மத்திய பர்மாவில் ஜப்பானிய போக்குவரத்துகளுக்குப்பின் விமான மூலம் சென்று படைகளை இறங்கின. |
| | 21 | ஹங்கேரியை ஜெர்மனி ஆக்கிரமித்துவிட்டதாகச் சொல்லப்பட்டது. |
| | 22 | ஜப்பானியப் படைகள் மணிப்பூருக்குள் நுழைந்தன. |

**ஏப்ரல்**

3 ருஷ்யத் துருப்புகள் ருமேனியாவுக்குள் புகுந்தன.

10 செம்படை ஒடெஸ்ஸாவை விடுவித்தது.

16 மௌண்ட் பேடன் பிரபு அவருடைய தலைமைக் காரியாலயத்தை டில்லியிலிருந்து கண்டிக்கு மாற்றிக்கொண்டார்.

24 நேசதேசப்படைகள் நியூகினியா கடற்கரையில் இறங்கின.

**மே**

12 8-வது, 5-வது சேனைகள் இதாலியில் முன்னேறித் தாக்கின.

17-18 காஸினோ வீழ்ச்சியுற்றது.

26 ஜெர்மானியர்கள் பல்கேரியாவுக்குள் புகுந்தார்கள்.

**ஜூன்**

4 நேசதேசப் படைகள் ரோமை விடுதலை செய்தன.

6 நேசதேசப் படைகள் வடக்கு பிரான்ஸில் இறங்கின. 1,183 இந்திய மாலுமிகள் இதில் பங்கெடுத்துக்கொண்டார்களென்று பின்பு சொல்லப்பட்டது.

7 கோகிமா பிரதேசத்திலிருந்து ஜப்பானியர்கள் பின்வாங்கினார்கள்.

8 பேயூ பிடிபட்டது.

10 இந்தியத் துருப்புகள் பெஸ்காராவை ஆக்கிரமித்தன.

15 சூபர் பறக்கும் கோட்டை விமானங்கள் ஜப்பானைத் தாக்கின.

16 பறக்கும் வெடி குண்டுகள் முதல் முதலில் தெற்கு இங்கிலாந்தில் விழுந்தன.

20 எல்பாவை நேசதேசப்படைகள் பூராவாக ஆக்கிரமித்தன.

23 ருஷ்யர்கள் மத்திய முனையில் முன்னேறித் தாக்கினார்கள்.

27 செர்பர்க் நேசதேச வசமாயிற்று.

28 மோகாங் பிடிபட்டது.

**ஜூலை**

9 கேயன் பிடிபட்டது.

20 ஜப்பானியர்கள் இம்பாலிலிருந்து பின்வாங்கினார்கள். ஹிட்லரைக் கொலை செய்ய முயற்சி.

**ஆகஸ்டு**

3 வட பர்மாவிலுள்ள முக்கிய ஜப்பானிய தளமான மிட்கினாவை நேசதேசப் படைகள் பிடித்தன. ரெனிஸ் விடுவிக்கப்பட்டது.

6 டாமு பிடிபட்டது.

12 ஜெர்மானியர்கள் நார்மண்டியிலிருந்து பின்வாங்க ஆரம்பித்தார்கள்.

15 பெரிய நேசதேசப்படை தெற்கு பிரான்ஸில் இறங்கிற்று.

17 ஜப்பானியர்கள் மணிப்பூர் ஸமஸ்தானத்திலிருந்து துரத்தியடிக்கப்பட்டார்கள்.

19 பலே விடுவிக்கப்பட்டது. ஜெர்மன் 7-வது சேனை பலேப்பகுதியில் அகப்பட்டுக்கொண்டது.

22 பிரெஞ்சுப்படைகள் லேனுக்குள் புகுந்தன (ஆகஸ்ட்டு 27-ம்௳யன்று லேன் சுத்தி செய்யப்பட்டது).

23 பிரெஞ்சுப்படைகள் மார்ஸெயில்ஸை பிடித்தன. அமெரிக்கர்கள் கிரெனோபிளைப் பிடித்தார்கள்.

24 நேசதேசத்தாரின் சமாதான ஷரத்துக்களை ருமேனியா ஒப்புக் கொண்டது.

25 23-ம்௳யன்று பிரெஞ்சு உள்நாட்டுப் படைகள் பாரிஸை அரைகுறையாக விடுவித்தன. இன்று அது பூர்த்தியாகிற்று. ருமேனியா ஜெர்மனிபேரில் போர்தொடுத்தது.

30 போலஸ்தி பிடிபட்டது.

| | | |
|---|---|---|
| ஆகஸ்டு | 31 | பிரிடிஷ் படைகள் ஏமியன்ஸைப் பிடித்தன. |
| | | அமெரிக்கர்கள் செடானை அடைந்தார்கள். |
| | | ருஷ்யர்கள் புகாரெஸ்டை அடைந்தார்கள். |
| ஸெப்டம்பர் | 1 | டிப்பி, ஆராஸ், வெர்டன் பிடிபட்டன. |
| | 3 | பிரிடிஷ் படைகள் பிரஸ்ஸல்ஸை விடுவித்தன. ஆண்ட்வெர்ப்புக்கு முன்னேறின. |
| | | லையான்ஸ் ஆக்கிரமிக்கப்பட்டதாக அறிவிப்பு. |
| | 5 | நேசதேசப்படைகள் ஜெர்மனியைத்தாக்க ஆரம்பித்தார்கள். |
| | | ஆகனும், சார்பிரகனும் பிடிபட்டன. |
| | | ருஷ்யா பல்கேரியா பேரில் போர் தொடுத்தது. |
| | 6 | ருஷ்யப் படைகள் யூகோஸ்லாவிய எல்லையை அடைந்தன. |
| | 7 | பிரிடனில் பறக்கும் வெடிகுண்டுத் தொல்லை ஒழிந்ததென்று டங்கன் ஸாண்டீஸ் வெளியிட்டார். |
| | 8 | சூபர் பறக்கும் கோட்டை விமானங்கள் மஞ்சூரியாவில் ஆன்ஷானைத் தாக்கின. |
| | 9 | ருஷ்யப் படைகள் கிழக்கு பிரஷ்யாவுக்குள் நுழைந்தன. |
| | 12 | க்யூபெக்கில் சர்ச்சில், ரூஸ்வெல்ட் மகாநாடு ஆரம்பம். |
| | | லேஹாவரில் உள்ள படைகள் சரண்புகுந்தது. |
| | 14 | ஹால்மேகரா, பாலாத் தீவுகளில் நேசதேசப்படைகள் இறங்கிவிட்டன என்று மாக் ஆர்தர் வெளியிட்டார். |
| | 15 | நேசதேசப்படைகள் நான்ஸியைப் பிடித்தன. |
| | 16 | பிரெஸ்ட் பிடிபட்டதென்று வெளியிடப்பட்டது. |
| | | செம்படை சோபியாவுக்குள் நுழைந்தது. |
| | 17 | நேசதேசப்படைகள் விமான மூலம் ஹாலந்தில் இறங்கின. |
| | 18 | சுமத்ராவை விமானம்தாங்கிகளில் சென்ற விமானங்கள் தாக்கின. |
| | 19 | ருஷ்ய பின்னிஷ் யுத்த நிருத்தம் கையெழுத்திடப்பட்டது. |
| | 22 | எஸ்தோனியாவின் தலைநகரமான டாலின் பிடிபட்டதாக ஸ்டாலின் வெளியிட்டார். |
| | 24 | ஸ்வீடிஷ் துறைமுகங்களுக்கு ஜெர்மன் கப்பல்கள் வரக்கூடாதென்று ஸ்வீடன் முடிவு செய்தது. |
| | 25 | பிரிடனின் 650 மிலியன் பவுன்கள் பொறுமானமுள்ள பொதுஜன பத்திர திட்டம் வெளியிடப்பட்டது. |
| | 26 | எட்டாவது சேனை ரூபிகனைத் தாண்டிற்று. |
| | 30 | டோவரின் பேரில் குண்டு வீசுவது முடிந்தது. |
| அக்டோபர் | 1 | கனடியத் துருப்புகள் கலேயை ஆக்கிரமித்தன. |
| | 5 | நேசதேசப்படைகள் கிரீஸில் இறங்கியதாகச் சொல்லப்பட்டது. |
| | 9 | சர்ச்சில் மாஸ்கோவுக்குச் சென்றார். |
| | | ஷெல்ட் நதிக்குத் தெற்கில் நேசதேசப்படைகள் இறங்கின. |
| | | அமெரிக்கக் கடற்படை ரையுகியுஸ் தீவுகளைத் தாக்கியது. 26 ஜப்பானியக் கப்பல்கள் அழிக்கப்பட்டன அல்லது பழுதுபடுத்தப் பட்டன. |
| | 10 | பிரிடிஷ் படைகள் காரிந்துக்கு வந்தன. |
| | 13 | ருஷ்யர்கள் ரீகாவைப் பிடித்தார்கள். |
| | 14 | பிரிடிஷ் படைகள் ஆதென்ஸை ஆக்கிரமித்தன. |

அக்டோபர் 19 14-வது சேனையைச் சேர்ந்த இந்தியப் படைகள் டிட்டிமைப் பிடித்தன.

20 அமெரிக்க 1-வது சேனை ஆகனைப் பிடித்தது. மாக் ஆர்தர் மறுபடியும் பிலிப்பைன்ஸுக்கு வந்தார் என்று ரூஸ்வெல்ட் வெளியிட்டார்.

பெல்கிரேட் பிடிபட்டதென்று சொல்லப்பட்டது.

23 மூன்று பெரிய வல்லரசுகளும் டி காலின் நிர்வாகத்தை பிரான்ஸின் தாத்காலிக நிர்வாகமாக ஒப்புக்கொண்டார்கள்.

பிலிப்பைன்ஸுக்கருகில் பெரிய கடற்படைப் போர் மூண்டது.

24 வைஸ்ராய் இந்திய சேனையிலுள்ளவர்களுக்கு நான்கு விக்டோரியா கிராஸ் பதக்கங்களை வழங்கினர்.

26 பிரிடிஷ் படைகள் டச்சுத் தீவான தெற்கு பெவிலாந்தில் இறங்கின.

நவம்பர் 1 பிரிடிஷ் கமாண்டோப் படைகள் வால்செரனில் இறங்கின.

பிரிடனின் உள்நாட்டு ரக்ஷகப்படை கலைக்கப்பட்டது.

5 ஸ்டாலினுக்கு ஆர்டர் ஆப் விக்டரி அடையாளம் வழங்கப்பட்டது.

7 ஐந்தாவது இந்திய டிவிஷன் கென்னடிக் குன்றைப் பிடித்தது.

8 ரூஸ்வெல்டின் தேருதலை டீயி ஒப்புக்கொண்டார்.

9 ஐந்தாவது இந்திய டிவிஷன் வெண்மைக்கோட்டையைப் பிடித்தது.

10 ஜெர்மானியர்கள் நெடுந்தூரம் செல்லும் அவுட்-வானங்களை பிரிடன் பேரில் அனேக வாரங்களாக உபயோகித்து வருகிறார்களென்று காமன்ஸ் சபையில் சர்ச்சில் வெளியிட்டார்.

டி காலின் அழைப்புக்கிணங்கி சர்ச்சிலும், ஈடனும் பாரிஸுக்கு வந்தார்கள்.

13 டிர்பிட்ஸ் மூழ்கடிக்கப்பட்டதாக வெளியிடப்பட்டது.

பாட்டன் மெட்ஸ் அரணின் முதல் கோட்டையைப் பிடித்தார்.

14 யூகோஸ்லாவிய தேசீய விடுதலை சேனை மாஸிடோனியாவின் தலைநகரமான ஸ்கோபிள்ஜியை விடுவித்தது.

16 கிழக்கு ஆபிரிக்கப்படைகள் காளிமியோவை ஆக்கிரமித்தன.

அமெரிக்காவைச் சேர்ந்த இருவகைப்பட்ட படைகள் மாபீயாத்தீவை படையெடுத்ததாக மாக் ஆர்தர் வெளியிட்டார்.

20 சீனப்படைகள் பாமோவுக்குள் நுழைந்தன.

22 மெட்ஸும் சார்பர்க்கும் அமெரிக்க வசமாகின.

பிரெஞ்சு 1-வது சேனை மல்ஹௌஸைப் பிடித்தன.

28 பிரிடனின் யுத்தமுயற்சியைப்பற்றிய அறிக்கை வெளியிடப்பட்டது.

ஈஸன்ஹவரும், மாண்ட்காமரியும் பெல்ஜியத்தில் கூடிப்பேசினார்கள்.

டிசம்பர் 3 கிழக்கு ஆபிரிக்கப்படைகள் காளிவாவைப் பிடித்தது.

5 சார்லாடர்ன் நேசதேச வசமாயிற்று.

ராவன்னு பிடிபட்டது.

8 ஆப்கன் ராணுவ தூதுகோஷ்டி டில்லிக்கு வந்தது.

10 டி கால் மாஸ்கோவுக்குச் சென்றார். பிரெஞ்சு, ருஷ்ய பரஸ்பர உதவி ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது.

15 அரகானிலிருக்கும் பிரிடிஷ் படைகள் பூதெடாங்கை சுத்திசெய்தன.

சீனர்கள் 38-வது டிவிஷன் பாமோவை ஆக்கிரமித்தது.

16 அமெரிக்கர்கள் மிண்டோராத் தீவிலிறங்கினார்கள்.

நேசதேசப்படைகள் சிண்ட்வின் நதிக்குக் கிழக்கில் சந்தித்தன.

டிஸம்பர் 17 எட்டாவது சேனை பேயன்ஸாவை ஆக்கிரமித்தது.

18 ஆர்டெனிஸ் போர்—டிரியருக்கு வடக்கில் பெரிய ஜெர்மன் தாக்குதல்.

21 ஜெர்மானியர்கள் பெல்ஜியத்துக்குள் 35 மைல்கள் முன்னேறினார்கள்.

23 கிரீஸில் உள்நாட்டுக்கலகம் மூண்டது.

24 டான்பெயிக் பிடிபட்டதாக வெளியிடப்பட்டது.

25 சர்ச்சில் ஆதென்ஸுக்கு வந்தார்.

லெயிடி நடவடிக்கை முடிந்து விட்டதென்று மாக் ஆர்தர் வெளியிட்டார்.

## 1945

ஜனவரி 3 14-வது சேனை யெயூவுக்குள் நுழைந்தது.

5 15-வது இந்தியப் படையைச்சேர்ந்த பிரிடிஷ் இந்தியத் துருப்புகள் அக்யாப் தீவிலிறங்கின.

7 4-வது படையைச் சேர்ந்த இந்தியத் துருப்புகள் ஷ்விபோவுக்குள் நுழைந்தன.

9 மகத்தான அமெரிக்கப்படைகள் லூசானிலிறங்கின.

11 பிரிடனும் E. L. A. S.-ம் சமாதானம் செய்துகொண்டன.

12 15-வது இந்தியப்பகுதியைச் சேர்ந்த துருப்புகள் அக்கியாபிலிருந்து 32 மைல்களிலுள்ள மெயிபான் தீபகற்பத்திலிறங்கின.

13 ருஷ்ய மாரிகாலத்தாக்குதல் மூன்று முனைகளில் ஆரம்பமாயிற்று.

15 சீனப்படைகள் நாம்காமைப்பிடித்தன. கோனியேவின் படைகள் கியலிஸியைப் பிடித்தன.

17 செம்படை வார்ஸாவை விடுவித்தது.

19 கிராகோவைப்பிடித்ததாக ஸ்டாலின் வெளியிட்டார்.

21 நேசதேசப்படைகள் ராம்ரீத்திவிலிறங்கின.

22 மான்லா பிடிபட்டது. சைனாவைச் சுற்றியிருந்த தரை முற்றுகை ஊடுருவிச்செல்லப்பட்டது. லெடோ ரஸ்தாவும், பர்மா ரஸ்தாவும் ஒன்று சேர்ந்தன.

26 ருஷ்யப்படைகள் டான்ஸிக்குக்குள் புகுந்தன.

28 மெமல் பிடிபட்டது. லித்வேனியாவில் ஜெர்மன் பூண்டில்லாமல் சுத்தி செய்யப்பட்டது.

30 கான்பர்ராவில் கிளஸ்டர் பிரபு ஆஸ்திரேலிய கவர்னராக பிரமாணம் எடுத்துக்கொண்டார்.

பிப்ரவரி 4 சுகோவின் படைகள் பெர்லினிலிருந்து 46 மைல்களுக்குள் வந்து விட்டன.

லெடோ ரஸ்தாவழியாக முதல் முதல் வந்த சாமான் வண்டிகளை கன்மிங் வரவேற்றது.

அமெரிக்கப்படைகள் மணிலாவுக்குள் புகுந்துவிட்டன.

6 உலகத்தொழிலாளர்கள் மகாநாடு லண்டனில் ஆரம்பமாகிற்று.

8 பாராகுவே நேசநாடுகளுடன் சேர்ந்தது.

10 15-வது இந்தியப் படைப்பகுதி மாமரி நகரத்தைப்பிடித்தது.

11 ருஷ்யர்கள் பிரஸ்லாவுக்கு வடமேற்கில் ஓடெர் நதியைத் தாண்டினார்கள்.

12 யால்டா மகாநாட்டைப்பற்றி சர்ச்சில்—ஸ்டாலின்—ரூஸ்வெல்ட் கூட்டறிக்கை வெளியிடப்பட்டது.

நேசதேசப்படைகள் கிளிவைப்பிடித்தன.

பிப்ரவரி 13 செம்படை புடாபெஸ்டைப் பிடித்தது.

15 1,500 விமானங்கள் டோகியோவை ஒன்பது மணிநேரம் தாக்கின.

18 அமெரிக்கத்துருப்புகள் காரெகிடாரில் இறங்கின.

19 அமெரிக்கப்படைகள் ஐவொ ஜிமாவில் இறங்கின.
கனடியர்கள் கோக்குக்குள் நுழைந்தார்கள்.

20 கிரைமியாவிலிருந்து திரும்பி வந்தபொழுது பசிபிக் போரைப்பற்றி விவாதிப்பதற்காக சர்ச்சிலும், ரூஸ்வெல்டும் அலெக்ஸாண்டிரியாவில் கூடினர்கள் என்று வாஷிங்டனிலிருந்து வெளியிடப்பட்டது.

23 பொஸ்னன் பிடிபட்டதாகச் சொல்லப்பட்டது. செம்படை 23,000 கைதிகளைப்பிடித்தது.
துருக்கி ஜெர்மனி பேரிலும், ஜப்பான் பேரிலும் போர் தொடுத்தது.

24 அமெரிக்க 9-வது சேனைத்துருப்புகள் ஜூலிச் என்ற நகரத்தை பிடித்தார்கள்.

25 எகிப்து அச்சுநாடுகளின்பேரில் போர் தொடுத்தது.
ரேனே அமெரிக்க 1-வது சேனை பிடித்தது.

26 மாக் ஆர்தர் பிலிபைன்ஸின் நிர்வாகத்தை பிரஸிடெண்ட் செர்கியோ ஒஸமேனுவிடம் கொடுத்துவிட்டார்.

மார்ச் 2 நேசதேசப் படைகள் டிரியரைப் பிடித்தன.

3 டில்லியில் படை ஒத்திகையின்பொழுது வைஸிராய் ஐந்து விக்டோரியா பதக்கங்களை வழங்கினர்.
அராபிய சமஷ்டி ஒப்பந்தம் ஏற்பட்டது.

4 நேசதேசப் படைகள் ரைன் நதியை 20 மைல்கள் கொண்ட போர் முனையில் அடைந்தார்கள். செம்படை பால்டிக் கடற்கரையை அடைந்தது.

5 14-வது சேனை மெயிக்டிலாவைப் பிடித்தது.

6 கொலோன் அமெரிக்கர் வசமாகிற்று.

7 அமெரிக்க 1-வது சேனை ரைன் நதியை கொலோனுக்கருகில் தாண்டி விட்டது.

8 19-வது இந்திய டிவிஷன் மாண்டலேக்குள் நுழைந்தது.

11 அமெரிக்கப் படைகள் மிண்டானேத் தீவிலிறங்கினவென்று மாக் ஆர்தர் வெளியிட்டார்.

12 செம்படை குயஸ்ட்ரினைப் பிடித்தது.

13 14-வது சேனையைச் சேர்ந்த டாங்க்படைகள் மெயிமோவைப் பிடித்தன.

14 பிரிடன் விமானப்படை முதல்முதலாக 22,000 ராத்தல் வெடிகுண்டுகளை உபயோகித்தது.

16 ஐவொ ஜிமாப் போர் முடிந்ததென்று நிமிட்ஸ் வெளியிட்டார்.

17 3-வது சேனையைச் சேர்ந்த படைகள் காப்ளென்ஸுக்குள் நுழைந்தன.

20 14-வது சேனை மாண்டலேயைப் பிடித்தது.

22 பிரிடிஷ் நிர்வாகத்துடன் கலந்து ஆலோசிக்க வேவல் லண்டனுக்குச் சென்றார்.

24 மாண்ட்காமரி ரைன் நதியைத் தாண்டினர்.

25 சர்ச்சில் ரைன் நதியைத் தாண்டினர்.

26 அமெரிக்க 3-வது சேனை ரைன்நதி பேரிலுள்ள பிராங்பர்ட்டுக்குள் நுழைந்தது.
லாயிட் ஜார்ஜ் இறந்தார்.

28 கிட்னியா பிடிபட்டதாக ஸ்டாலின் வெளியிட்டார்.

ஏப்ரல்

1 அமெரிக்கர்கள் ஆகினவாவில் இறங்கினர்கள்.

2 எட்டாவது சேனை ஜெர்மன் படை வரிசைகளுக்குப் பின் இறங்கி விட்டது.

3 அமெரிக்கப் படைகள் காஸ்ஸலேப் பிடித்தன.

4 ஸ்லேவேகியாவின் தலைநகரமான பிராடிஸ்லாவா பிடிபட்டது.

5 ஜப்பானிய நிர்வாக சபை ராஜினமா செய்தது.

ருஷ்ய, ஜப்பானிய நடுநிலைமை ஒப்பந்தம் முறிவுபட்டதென்று மாஸ்கோ ரேடியோ ஒலிபரப்பு வெளியிட்டது.

பசிபிக் போர்முனையிலுள்ள தரைப் படைகளுக்கு மாக் ஆர்தரும், கடற் படைகளுக்கு நிமிட்ஸும் கமாண்டர்களாக யிருப்பார்களென்று வாஷிங்டன் வெளியிட்டது.

7 ஜப்பானின் பெரிய யுத்தக் கப்பலான 45,000 டன்களான யாமாடோ என்ற கப்பல் மூழ்கடிக்கப்பட்டது.

10 8-வது சேனை சீனியோ நதியை அநேக இடங்களில் தாண்டிவிட்டது.

அமெரிக்க 9-வது சேனை ஹனேவரைப் பிடித்தது.

11 எஸ்ஸன் விழுந்ததென்று சொல்லப்பட்டது.

ஜெர்மன் கொள்ளைக் கப்பலான அட்மிரல் ஷீர் மூழ்கடிக்கப்பட்டதென்று வெளியிடப்பட்டது.

ஸ்பெயின் ஜப்பானுடன் இருந்த உறவை ரத்து செய்தது.

12 ரூஸ்வெல்ட் இறந்தார். ஹாரி ட்ரூமென் அமெரிக்காவின் 33-வது ஜனதிபதியாக பிரமாணம் செய்தார்.

13 செம்படை வியன்னவைப் பிடித்தது.

14 ரூர் பகுதியில் வான் பேபன் பிடிபட்டார்.

16 கனடிய, போலிஷ் துருப்புகள் வடக்குக் கடலை அநேக இடங்களில் அடைந்தன.

15-வது இந்தியப் படை அரகானில் ஜப்பானின் கடற்கரை ஸப்ளை ஸ்தலமான டாங்குப்பை பிடித்ததென்று தென்கிழக்கு ஆசியா கமாண்டு வெளியிட்டது.

17 நேசதேசப்படைகள் பெர்லினிலிருந்து 50 மைல்களுக்குள் வந்து விட்டன.

19 பாட்டனின் துருப்புகள் செக்கோஸ்லாவேகியாவுக்குள் புகுந்தன.

ருஷ்யர்கள் பெர்லினைத் தாக்குவதற்காக ஓடர், நியஸி நதியைத் தாண்டினர்கள்.

நேசதேசப்படைகள் பர்மாவில் சௌக்கைப்பிடித்தார்கள்.

நேசதேசப் படைகள் லீப்சிக்கை சுத்தி செய்தன. பர்மா எண்ணெய் பிரதேசங்களுக்கான போர் ஆரம்பம்.

20 அமெரிக்கப்படைகள் ப்ருயியானுக்கு வடக்கில் பார்பேக்கைப் படையெடுத்தார்கள்.

நேசதேசப்படைகள் மெய்க்டிலாவுக்குத்தெற்கில் 75 மைல்கள் முன்னேறின.

ருஷ்யர்கள் பெர்லினுக்குள் நுழைந்துவிட்டதாக நாஸிகள் சொன்னர்கள். ரீச் பாங்கின் மாஜித்தலைவரும், நாஸிகளுக்கு பொருள் உதவுகிறவருமான டாக்டர் ஷாட்டின் மரணம். கிழக்கு இந்தீஸுக்கு அருகில் கடற்படை நடமாட்டம். சபாங் துறை முகத்தின்பேரில் குண்டுகள் வீசப்பட்டன. ஆறு ஜப்பானியக் கப்பல்கள் மூழ்கடிக்கப்பட்டன.

ஏப்ரல்

21 நேசதேசத்தார்கள் பொலோனாவைப் பிடித்தார்கள்.

ஜெர்மன் கொள்ளைக் கப்பலான லட்சோ பால்டிக் கடற்கரையில் பிரிடிஷ் விமானங்களால் மூழ்கடிக்கப்பட்டது. ருஷ்யா லப்ளின் நிர்வாகத்துடன் ஒப்பந்தம் செய்துகொண்டது.

22 செம்படை பெர்லினைச்சுற்றியுள்ள பர்னாவைப் பிடித்தது.

பிரெஞ்சுத் துருப்புகள் ஸ்விஸ் எல்லைச்சரகத்தை அடைந்தன.

ருஷ்யப்படைகள் பெர்லின் தெருக்களுக்குள் நுழைந்துவிட்டன. ருஷ்யர்களுடன் சமாதானம் செய்துகொள்ள நாஸிகள் பிரயத்தினம் செய்கிறார்கள் என்று சொல்லப்படுகிறது.

23 ஐந்தாவது, எட்டாவது சேனைத்துருப்புகள் இத்தாலியில் போ நதியை அடைந்தன.

பெர்லினின் தற்காப்பை ஹிட்லர் தானே ஒப்புக்கொண்டான்.

24 நேசதேசப் படைகள் இதாலியில் பெர்ராரோ, மோடனா, லாஸ்பீஷியாவைப் பிடித்தார்கள்.

நேசதேசப்படைகள் போ நதியைத்தாண்டி பெர்ராரா, ஸ்பெஷியாவைப் பிடித்தன.

பர்மாவில் பைன்மானா விழுந்தது. குற்ற விசாரணைக்காக பிரான்ஸுக்குப் போகும்பொழுது பிடெயன் ஸ்விட்ஸர்லந்துக்கு வந்துவிட்டார்.

25 அமெரிக்கர்கள் ரையூகியூஸில் பின்னும் மூன்று தீவுகளில் இறங்கினார்கள்.

நேசதேசப்படைகள் பர்மாவிலுள்ள எண்ணெய் பிரதேசங்களைப் பிடித்துக்கொண்டார்கள்.

ருஷ்யர்கள் பெர்லினைச் சுற்றி வளைத்துக்கொண்டார்கள். ஸான் பிரான்ஸிஸ்கோ மகாநாடு ஆரம்பம்.

26 பிரிடிஷ் படைகள் ஜெர்மனியில் ப்ரமனைப் பிடித்தார்கள்.

ருஷ்யர்கள் ஸ்டெட்டினைப் பிடித்தார்கள்.

27 இதாலிய தேசாபிமானப்படைகள் வடக்கு இதாலியில் ஜெர்மனியை எதிர்த்து பகிரங்கமாக கலகம் செய்தன.

அமெரிக்க ருஷ்யப் படைகள் ஜெர்மனியில் டோர்காவில் சந்தித்தார்கள்.

நேசதேசப்படைகள் இதாலியில் ஜெனோவாவை ஆக்கிரமித்தார்கள்.

முஸோலினி கைது செய்யப்பட்டான். ருஷ்யப்படை மேற்கு சேனைகளுடன் சேர்ந்ததால் ஜெர்மனி இரண்டுதுண்டாகத் துணிக்கப்பட்டது. அமெரிக்கர்கள் ஆஸ்திரியாவுக்குள் நுழைந்தார்கள்.

28 அமெரிக்கர்கள் பிலிப்பைன்ஸிலுள்ள பாகுவியைப் பிடித்தார்கள்.

பிரிடிஷ் அமெரிக்கப் படைகளிடம் ஹிம்லரின் சமாதான கோரிக்கை.

29 மிலானில் இதாலிய தேசாபிமானிகள் முஸோலினியைக் கொலை செய்தார்கள்.

ஹிட்லர் இறந்ததாக முதல் செய்தி. இதாலியில் நாஸிகளுக்கு சங்கடம் ஏற்பட்டுவிட்டதென்று கிளார்க் சொன்னார். ருஷ்யாவின் ஆதரவில் ஆஸ்திரியாவில் தற்காலிக நிர்வாகம் அமைக்கப்பட்டது.

30 பிரெஞ்சு சேனை ஆஸ்திரியாவுக்குள் நுழைந்தது.

பெர்லினில் ருஷ்யக்கொடி பறக்கவிடப்பட்டது.

1 ஹிட்லர் இறந்துவிட்டார் என்று நாஸிகள் வெளியிட்டார்கள்.

யூகோஸ்லாவியர்கள் இதாலியில் உள்ள பிரிடிஷ் 8-வது சேனையைச் சந்தித்தார்கள்.

கடற்தளபதி டோனிட்ஸ் பூரராக ஆனார். போர்னியோவில் படை இறக்கம்.

2 இதாலியிலுள்ள ஜெர்மன் சேனை பீல்டு மார்ஷல் அலெக்ஸாண்டரிடம் நிபந்தனையற்ற சரணாகதி செய்தது.

ருஷ்யர்கள் பெர்லினைப் பூராவாக ஆக்கிரமித்தார்கள்.

பெர்லின் விழுந்துவிட்டதாக மார்ஷல் ஸ்டாலின் அறிவித்தார் இதாலியில் 10 லக்ஷம் ஜெர்மானியர் ஆயுதங்களைக் கீழே போட்டு விட்டனர். ரங்கூனுக்கு அருகில் படைகள் இறக்கம்.

3 பிரிடிஷ் 14-வது சேனை ரங்கூனைப் பிடித்தது.

கெப்பல்ஸ் தற்கொலை செய்துகொண்டாரென்று சொல்லப்படுகிறது. ஹாம்பர்க் ஆக்கிரமிக்கப்பட்டது.

4 ஜெர்மனி வெகு சீக்கிரத்தில் சரணடையும் என்று வதந்திகள் உண்டாயின. நாஸிகள் வடமேற்கு ஐரோப்பாவில் பிரிடிஷாரிடம் சரணடைந்தார்கள்.

6 டென்மார்க்கின் தலைநகரமான கோபன்ஹேகனுக்குள் பிரிடிஷ் படைகள் புகுந்தன.

7 ரீம்ஸிலுள்ள ஈஸன்ஹவரின் தலைமைக்காரியாலயத்தில் பிரெஞ்சு மணி 2·41க்கு ஜெர்மானியர்கள் நிபந்தனையற்ற சரணாகதி செய்தார்கள் என்று வெளியிடப்பட்டது.



Sri Brihadamba State Press, Pudukkottai. 1,800—15-5-45.

